

நாள் முழுவதும்
கவர்ச்சிகரமாக
தோற்றமளிக்க









## ஸாண்டல்வுட் டாய்லட் பவுடர்

சுத்தமான தனி சந்தனத்தை
மென்மையாக்கப்பட்டது...

## ஸாண்டால்

சந்தனத்துடன் கூடிய
டால்கம் பவுடர்....

# டி. எஸ். ஆர் & கோ

கும்பகோணம்

A.K. GOPAL & CO.

சென்னை நகருக்கு விநியோகஸ்தர்கள்: சுராஜ் ஏஜன்ஸிஸ், 18, ராயப்பேட்டை ஹைரோடு ★ மதுரைக்கு: மெஸர்ஸ் மீனாக்ஷி எண்டர்பிரைஸஸ், 4, கூட்ஸ் ஷெட் தெரு, மதுரை ★ கோயமுத்தூர், பாலக்காடு நீலகிரிக்கு பூரண விநியோகஸ்தர்: S. பாலபட்டாபி (ஸ்தாபிதம் 1932) வைசியாள் தெரு, கோயமுத்தூர்

# கல்கி

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



plato

## பேனாவைப் பெற்று நீங்கள் திருப்தியடையுங்கள்

பத்து லட்சக்கணக்கான மக்கள் உபயோகித்து சோதனையில் தேர்ந்திருக் கிறது. அமைப்பிலும் சேவையிலும் வெளிநாடு களில் தயாராகும் மிக உயர்ந்ததற்கு சமானமானது.



கிடைக்கும்:

* பலவித வசீகரிக்கும் வர்ணங்களில்
* விதம் விதமான மைநிரப்பும் வசதி
* தங்கமுலாம் பூச்சும் 14 காரட் நிப்புடன்
* பல்வேறு விலைகளில் 4 ரூ. முதல் 18 ரூ. வரையில்




## இது மாத்ரே கம்பெனியார் தயாரிப்பு

வியாபார சம்பந்தமான எல்லா விபரங்களுக்கும் எங்கள் சோல் டிஸ்டிரிப்யூடர்ஸ்களுக்கு எழுதவும்:

**பெஸ்ட் பவுண்டன் பென் டிப்போ,**

79, தேவ்கரன் மான்ஷன், பிரின்ஸஸ் தெரு, பம்பாய்.

Shilpi, 533 MP. TM:




| | | |
|---|---|---|
| மலர் 17 | தமிழ்த்திரு நாடு தன்னைப்—பெற்ற | விளம்பிஷு |
| இதழ் 45 | தாயென்று கும்பிடடி பாப்பா—பாரதியார் | வைகாசி 26 |


# இலங்கையில் அட்டூழியம்

ஜனநாயக ஆட்சிக்கும் கொடுங்கோலாட்சிக்கும் ஒப்புமை ஏராளம் என்று கிரேக்க மேதாவி அரிஸ்டாடில் எழுதியிருக்கிறார். ஆங்கில மேதாவி பர்க் என்பவர் அதை எடுத்துக்காட்டி ஆமோதித்திருக்கிறார். ஒரு கொடுங்கோலரசன் செய்யும் அட்டூழியத்தைக் காட்டிலும் ஜனநாயகத்தில் பெருவாரி சமூகம் சிறுபான்மை ஜாதியினருக்குச் செய்யும் அநீதியும் அக்கிரமமும் தாங்க முடியாத அளவுக்குப் போய்விடும். இப்போது சுதந்திர இலங்கையில் நடைபெறும் அட்டூழியம் இதை ஊர்ஜிதப்படுத்துகிறது. வெறி பிடித்த சிங்களவர் தமிழ் பேசும் இலங்கைப் பிரஜைகளை வெட்டியும் கொன்றும் வருகிறார்கள். அவர்கள் வாழும் வீடுகளுக்குத் தீ வைத்தும் வருகிறார்கள். தமிழ் பேசுகிறவர்களுக்கு இலங்கையில் இடம் இல்லை என்று உணரும்படி அட்டூழியம் செய்து வருகிறார்கள். பீதி உண்டாக்கி ஊரை விட்டு ஓடச் செய்து வருகிறார்கள்.

அரசாட்சியின் உயிர் பெருவாரியான மக்களின் வாக்கிலிருப்பதால் நியாயம் கிடைப்பது தடைப்படுகிறது. கொடுங்கோலரசனிடம் பெறக்கூடிய நியாயம்கூட ஜனநாயகத்தில் பெறுவது துர்லபம். பெருவாரி சமூகத்தைச் சேர்ந்த அக்கிரமக்காரர்களைத் தண்டிக்க அமைச்சர்களும் உத்தியோகஸ்தர்களும் தயங்குவார்கள்.

இலங்கையின் புகழை வளர்த்தவர்கள் யாழ்ப்பாணத்துத் தமிழர். சுதந்திரம் சம்பாதிக்க உழைத்தவர்களில் தமிழர்கள் முன்னணியில் நின்றனர். தற்போது "தமிழே போ!" என்கிறது இலங்கை. "தமிழர்களே! உங்களுக்கு உரிமை இல்லை" என்கிறார்கள் சிங்களவர்கள். இலங்கைச் செய்திகளைப் படித்துப் பாரத நாட்டுத் தமிழர்களின் உயிர் துடிக்கிறது.

அக்கிரமங்கள் வெகு நாட்கள் நடக்கமுடியாது. சீக்கிரத்தில் நிற்கும். அப்போது 'அமைதி நிலை ஏற்படுத்தி விட்டோம்' என்று சிங்கள மந்திரிகள் சொல்லிக் கொள்வார்கள். ஆனால் விஷம் தீர்ந்து போனதாக நினைக்கக் கூடாது. 'தமிழ் மக்களை நடுங்கச் செய்தாயிற்று. இனி தலைதூக்க மாட்டார்கள்' என்று சிங்கள அக்கிரமக்காரர்கள் 'குசுகுசு' என்று பேசிக் கொள்வார்கள். இந்த நிலைமை உண்டாக்கவே நடத்தப்பட்ட காரியம் இது. பெடரல் கட்சியார் நடத்த இருக்கும் அகிம்சைப் போராட்டத்துக்கு இடம் தரலாகாது என்கிற சூழ்ச்சி இது.

ஜனநாயகம் பெற்றதும் கஷ்டம் தீர்ந்து விட்டது என்று எண்ணலாகாது. அநீதியும், அக்கிரமமும் எந்த 'நாயக'த்திலும் உண்டு. அநீதி ஒழிந்து நீதி நிலை நிற்பதற்கு இன்னும் எவ்வளவோ சோதனைகளில் தேற வேண்டும். அதற்கு வேண்டிய தைரியம் இலங்கைத் தமிழருக்கு ஆண்டவன் அருள்வானாக.

பழிக்குப் பழி வாங்கும் முறையை நீக்கி சத்தியமும் அஹிம்சையும் கொண்ட மார்க்கமே வெற்றி தரும். மனம் தயங்காமல் விடாமுயற்சியுடன் தலைவர்கள் வேலை செய்தால் வெற்றி நிச்சயம்.

நீதியைக் காப்பாற்றாத ஆட்சி நீடித்து நிற்காது. பெருவாரி சமூகத்துத் தலைவர்கள் இதை உணர்ந்து நல்வழியில் நடந்து கொள்வார்களாக.

உயிர்ச் சேதமும் பொருட்சேதமும் பட்ட குடும்பங்களுக்கு நஷ்ட ஈடு உடனே கொடுத்து, தமிழ்ப் பிரதேசங்களுக்குப் போதிய சுதந்திரம் தந்து ஆட்சியைச் சீர்ப்படுத்த வேண்டியது சிங்களத் தலைவர்களின் கடமை. பாரத நாட்டுத் தலைவர்களின் நட்பை இழக்கலாகாது.

சரித்திரம் திரும்புகிறது!












# பிரான்ஸின் எச்சரிக்கை!

**பி**ரான்ஸில் ஜனநாயகம் தீர்ந்தது. ராணுவக் குழப்பத்துக்குப் பயந்து டிகாலை சிம்மாசனத்தில் அமர்த்தி விட்டார்கள்.

இதை மூடி மழுப்பி, 'சட்டத்துக்கு உட்பட்டே டிகாலைப் பதவி ஏற்றுக் கொள்ளச் செய்தோம்' என்று பிரான்ஸ் தேசத்தார் பேசுவதும் சடங்குகள் நடத்துவதும் அர்த்தமற்ற நடவடிக்கை. உலகமறிந்த உண்மையை மறைப்பது வீண் முயற்சி.

அமெரிக்க ராஷ்டிரபதியும் ''சரி'' என்று சொல்லி விட்டார். ''எனக்கு டிகால் வேண்டியவர். அவர் எனக்கு ரொம்பப் பிடித்தவர்'' என்று ஐஸன்ஹோவர் கூறி விட்டார்! இதற்கு மேல் 'அப்பீல்' இல்லை.

தற்போது உலகத்தில் நடைபெறுவது அணுகுண்டு யுகம். பழைய துப்பாக்கிகளை ஒழித்து விட்டதுபோல் ஜனநாயகத்தையும் அது எரித்து விட்டது. உலகத்தில் தற்போது ஆட்சி நடத்தி வருகிறவர்கள் அநேகமாக எல்லாரும் ''டிக்டேடர்கள்'' தான். பெயர் என்னவாயினும் ஏதேச்சாதிகாரம் பெற்ற தலைவர்கள்தான் அங்கங்கே ஆட்சி நடத்தி வருகிறார்கள்.

மகாயுத்தங்களின் பயனாக ராணுவங்களும் ராணுவ தளவாடங்களும் சமூக வாழ்க்கையில் முதல் ஸ்தானம் பெற்றுவிட்டன. அவைதான் சர்வ சக்தியும் கொண்டு நிற்கின்றன. மக்கள் அவற்றின் கீழ் அடங்கி ஒடுங்கி வாழ வேண்டியது. இது உலகத்தின் தற்போதைய நிலைமை.

சில தேசங்களில் அத்தகைய நிலை தற்போது இல்லை. ஆனால் சீக்கிரமே அந்த நிலைமை வந்து சேரும். இதற்கு மருந்து ஒன்றுதான். பொதுமக்கள் ராணுவ ஆட்சிக்குச் சம்மதிக்கலாகாது. சம்மதிக்கச் செய்யும் மயக்க மந்திரவாதங்கள் வெகு தீவிரமாக நடைபெறும். ராணுவத்தையும் அதில் சேர்ந்திருக்கும் இளைஞர்களையும் புகழ்ந்து பேசி, பொது மக்களின் ஆன்ம பலத்தை அழிக்கும் பிரசாரம் நடைபெறும். இதற்கெல்லாம் இடம் தரலாகாது. க்ஷத்திரியக் கொடூர ஆட்சியைப் பரசுராமர் அழித்தது வீண் போகலாகாது. ராணுவத்துக்கு அன்னம் ஊட்டும் மக்கள் உறுதியுடன் தீர்மானித்தால் எந்த ராணுவ ஆட்சியும் மக்களை எதிர்த்து நிற்க முடியாது. மக்கள் பயந்துபோய்ப் பிளவுகளும் கட்சிகளுமாகச் சிதறிப் பிரிந்து போனால்தான் ராணுவம் ஆட்சி நடத்த முடியும். சுதந்திரமடைந்த நாடுகளுக்குள்ள சோதனையும் அபாயமும் இதுவே.

அட்டைப்பட விளக்கம்

# தாயன்பு

**தா**ய்ப் பசுவும் கன்றுக் குட்டியும் ஒன்றையொன்று பரிவுடன் நோக்கிப் பழகும் முறையைப் பார்க்கும்போது, உள்ளம் நெகிழ்ந்து விடுகிறது. இதை அனுபவித்து, கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை அவர்கள் மிக அருமையான சில வரிகள் பாடியிருக்கிறார்.

'' அம்மா வென்குது வெள்ளைப் பசு — உடன்
அண்டையில் ஓடுது கன்றுக் குட்டி !''

இப்படி உயிர் வர்க்கங்களுக் கெல்லாம் அன்பு என்பதை இயற்கை அருளியிருப்பதாலேயே, உயிரினம் இன்று வாழ்கிறது என்று சொல்ல வேண்டியிருக்கிறது!

இவ் வார அட்டைச் சித்திரத்தில் தாயையும் சேயையும் பார்க்கிறோம்!

அவர்களுடைய முகத்தில் துலங்கும் அன்பை என்னவென்று சொல்வது!

மனித உள்ளத்தில் ஆண்டவன் அன்பு என்ற உணர்ச்சியை வைத்தார்! அது எத்தனையோ விதங்களில் பரிணமிக்கிறது!

நட்பாகவும், காதலாகவும், பக்தியாகவும் வெளிப்படுகிறதைப் பார்க்கிறோம்.

இவற்றைப் பார்க்கும்போது, அன்பில் மிக உயர்ந்த அன்பு தாயன்பு என்றுதான் பெரியோர்கள் முடிவு கட்டியிருக்கிறார்கள்!

ஆழ்வார்களும், தாயன்பை வைத்தே தங்கள் பக்தியையும் வளர்த்துக் கொண்டார்கள். இவ் வாரத்திய அட்டைச் சித்திரத்தைப் பார்க்கும்போது, ஆழ்வாரின் பின்வரும் வரிகள் நினைவுக்கு வருகின்றன.

அரிசினத்தால் ஈன்ற தாய்
அகற்றிடினும் மற்றவள் தன்
அருள் நினைந்தே அழும்குழவி
அதுவே போன்றிருந்தேனே !

தாய்க்குச் சேயை விட்டால் புகலில்லை. சேய்க்கும் தாயைப்போல் தன்னலமற்ற அன்பை அளிப்பவர்கள்தான் யாருண்டு?

இத்தகைய பல இனிய கருத்துக்களை நினைவூட்டும் இனியகாட்சியை இவ்வார அட்டைச் சித்திரமாக வழங்கியிருக்கிறார் ஓவியர் மணியம்.

நா. பார்த்தசாரதி எழுதும்

புதிய சரித்திரத்
தொடர்கதை

# பாண்டிமாதேவி




கல்கி

இதழில் ஆரம்பமாகிறது

# தியாகமும் ஏற்றுமதியும்

மத்திய அரசாங்கத் தொழில் - வர்த்தக மந்திரி திரு லால்பகதூர் சாஸ்திரி சென்னையின் வர்த்தக ஸ்தாபனம் ஒன்றில் பேசுகையில் வர்த்தகர்கள் எல்லோரும் ஏற்றுமதியைப் பெருக்குவதில் அக்கறை கொள்ள வேண்டுமென்றும், தியாகம் செய்துகூட ஏற்றுமதியை அதிகரிக்க வேண்டும் என்றும் சொன்னார்.

இது ஒன்றும் புதிதல்ல. சில மாதங்களுக்கு முன் பிரதமர் நேரு பம்பாயில் நிகழ்த்திய ஒரு பிரசங்கத்தில் இதே கருத்தைத் தெரிவித்தார். வியாபாரத்தில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு வியாபாரத்தைப் பெருக்க வகைசொல்ல வேண்டியதில்லை. எங்கெங்கே வாய்ப்புகள் இருக்கின்றனவோ, அவற்றையெல்லாம் நன்கு பயன்படுத்திக் கொள்ள அவர்களுக்குத் தெரியும்.

இதுவரையில் அரசாங்கத்தின் தூண்டுதலால் ஏற்றுமதி பெருகவில்லை. தேயிலை, சணல், ஆலைத் துணிகள், கனிப் பொருள்கள் மற்றும் இதர இனங்கள் பல வருஷங்களாகச் சம்பிரதாய ஏற்றுமதிப் பொருள்கள் என்று பிரபலமடைந்துள்ளன. இவையனைத்தும் உற்பத்தியாளர்களின் சொந்த முயற்சியின் விளைவுதான்.

ஆனால், தியாகம் செய்தும் ஏற்றுமதியைப் பெருக்கு என்று மந்திரி சொன்னதை எவரும் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். முக்கியமாக உற்பத்தியாளர்களும் வியாபாரிகளும் ஒப்புக் கொள்ளவே மாட்டார்கள். அவர்கள் லாபத்தைக் கொண்டே பிழைப்பவர்கள்

நஷ்டப்பட்டு வியாபாரம் செய்வது சாதாரண முறை அல்ல. ஏற்றுமதி வியாபாரம் நஷ்டத்தில் நடந்தால் அதை ஈடு செய்ய உள்நாட்டு விலைகளை அதிகரிக்க வேண்டும். இல்லாவிட்டால் முந்திய வருஷ லாபத்திலிருந்து சேமிக்கப்பட்ட நிதியிலிருந்து ஈடு செய்ய வேண்டும். அல்லது முதலீட்டுப் பணத்திலிருந்துதான் நஷ்டம் ஈடு செய்யப்படும். இப்படி நடந்தால் அந்தத் தொழில் என்னவாகும்?

ஏற்கெனவே உள்நாட்டு விலை உயர்வாக உள்ள பொருள்கள் மீது ஏற்றுமதி வியாபார நஷ்டத்தை ஈடுசெய்ய மேலும் விலையுயர்த்தப்பட்டால், மக்களின் கஷ்டம் பெருகும். விலைவாசிகள் அவர்கள் சக்திக்கு மிஞ்சி விடும். பண்டங்களை வாங்க மாட்டார்கள். உற்பத்தி செய்த பொருள்கள் தேக்கமடையும். மேலும் உற்பத்தி தடைப்படும். ஆலைகள் மூட வேண்டி வரும். இதிலிருந்து தொடர்ச்சியாகப் பல சம்பவங்கள் நிகழும்.

உதாரணமாக, ஆலை துணியை எடுத்துக் கொள்ளுவோம். 100 கோடி கெஜம் வருஷத்துக்கு ஏற்றுமதி செய்ய வேண்டும் என்ற லட்சியம் ஏற்படுத்தியும் 90 கோடிக்கு மேல் செய்ய முடியாது என்ற நிலை உண்டாகியிருக்கிறது. எக்ஸைஸ் வரி தள்ளுபடியும் நிலைமையைச் சமாளிக்கப் போதவில்லை. உள்நாட்டுத் தேவையும் அதிகரிக்கவில்லை. துணி மட்டுமின்றி நூல் கட்டுகளும் தேங்கிக் கிடக்கின்றன. தானாக இயங்கும் விசைத் தறிகளை உபயோகிப்பதென்று முதலில் தீர்மானித்த சில முதல்தர ஆலைகள்கூடத் தங்கள் எண்ணத்தை இப்போது கைவிட்டிருக்கிறார்கள்.

பாரதத்தின் மற்றொரு ஏற்றுமதிப் பொருளான தேயிலை வியாபாரம் வெகுவாகத் தென் ஆப்பிரிக்கா, இந்தோனேஷியா நாட்டுத் தேயிலைக்கு மாறிக் கொண்டு வருகிறது. இதை மறுபடியும் பழைய நிலைக்குக் கொண்டு வருவதற்கு இன்னமும் உருப்படியான நடவடிக்கை எதுவும் எடுத்துக் கொள்ளப்படவில்லை. சாதாரணத் தேயிலை என்று பாகுபாடு செய்யப்பட்ட தேயிலை மீது வரி தள்ளுபடி கொடுக்கலாம். இதன் மூலம் ஏற்றுமதியை ஓரளவுக்கேனும் விஸ்தரிக்கலாம் என்று சொல்லப்பட்டது. ஆனால் இன்னமும் இது கருத்தளவிலேயேதான் இருக்கிறது.

மேற்கத்திய நாடுகளில் வியாபார மந்தம் ஏற்படும் போதெல்லாம், 'ஏற்றுமதி செய்: இல்லாவிட்டால் செத்துப் போ'' என்று கோஷங்கள் கிளப்பினர். அதோடு நின்று விடாமல், அதற்கு ஆவனவெல்லாம் செய்து ஏற்றுமதியை விஸ்தரிக்கவே செய்தார்கள். ஆனால் நமது பாரதத்தின் நிலைமை வேறு. பேசிக்கொண்டே இருந்தால் போதும், காரியம் நடந்துவிடும் என்று நம்புவது போலவே இருக்கின்றன நடவடிக்கைகள். தொழில் வளர்ச்சிக்குப் பாதகமான வரிவகைகள் முதலியவைதான் இங்கே காணப்படுகின்றன. உற்பத்தியாளர்களுக்கும் வியாபாரிகளுக்கும் எந்தவிதத்திலும் லாபமே வரக் கூடாது என்பது போல் நடவடிக்கைகள் இருந்தால் வர்த்தகம் எப்படிப் பெருகும்? ஏற்றுமதியைச் சொல்லுவானேன், உள்நாட்டு வியாபாரம்கூட மந்தப்பட்டுத்தான் போகும்.

# அருள் வாக்கு

மனிதனுக்கு ஆண்டவன் சில விசேஷ சக்திகளைக் கொடுத்திருக்கிறார். பூச்சிகள், பறவைகள், மற்றப் பிராணிகளுக்கு இந்தச் சக்திகள் கிடையாது. மனிதன் இயல்பாகவே சிந்திக்கவும், பேசவும், தியானம் செய்யவும், இயற்கையின் ரகசியங்களை ஆராய்ந்து அறியவும் சக்தி பெற்றிருக்கிறான். அரிய கருவிகளைக் கண்டு பிடித்துப் பெரிய சாதனைகளைப் புரிகிறான் மனிதன். பொதுவாகப் பேசுமிடத்து, புழுக்கள், பூச்சிகள், பறவைகள், பிராணிகள் கூடுகளிலும், குகைகளிலும், காடுகளிலும் சந்தோஷமாக வசிக்கின்றன. அவையும் ஆகாரம் சாப்பிடுகின்றன. வளர்கின்றன. முடிவில் சாவை அடைகின்றன. அவற்றுக் கெல்லாம் சதா பயம் கிடையாது. அவற்றுக்கும் ஒவ்வொரு சமயம் காமம், குரோதம் ஏற்படுகிறது. ஆனால் மனிதனுக்குச் சதா பயம்தான். சில சமயம் கற்பனையாகவும் பயம் ஏற்படுகிறது. மனிதனுக்கு ஆசை, கோபம், துவேஷம் சகஜமாக ஏற்படுகின்றன. துக்கத்தினால் கஷ்டப் படுகிறான்.

கடவுள் சிருஷ்டியில் ஒவ்வொன்றுக்கும் பிரயோசனமிருக்கிறது. சாயங்காலத்தில் மலரும் பூக்கள் வெண் நிறமாக இருக்கின்றன. இருட்டில் பளிச்சென்று தெரியக்கூடியது வெண்மை நிறம். அவற்றைப் பார்த்து ஈக்கள், வண்டுகள் அந்தப் புஷ்பங்களை அடைகின்றன. அம்மாதிரி மனிதனுக்கு அளிக்கப்பட்ட சக்தி விசேஷங்களும் சில பிரயோசனங்களுக்காக ஏற்பட்டவை. நாமும் மற்ற சிருஷ்டிகளான பசு, பட்சிகள் போல் வளர்ந்து சாவதானால் மனிதனுக்கு இந்த விசேஷ சக்திகள் அவசியமில்லை. ஆகவே, நமக்கு ஈசுவரன் கொடுத்துள்ள புத்தியை எதற்காகக் கொடுத்தான் என்று யோசிக்க வேண்டும். இதுதான் வேதாந்தம். அவ்விதம் நாம் புத்திபூர்வமாக ஆராய்ந்தால் வாழ்க்கையின் பயன் என்னவென்று நாம் சிந்திக்க நேரிடும். பெரிய ரிஷிகள் மேதாவிகள் இதைப் பற்றிச் சிந்தித்திருக்கிறார்கள். அவர்கள் எல்லோரும் அநேகமாக ஒரே முடிவுக்குத்தான் வந்திருக்கிறார்கள். அதாவது இனிப் பிறப்பில்லாது செய்ய இந்த ஜன்மாவை நாம் பயன்படுத்த வேண்டும்.

இதை எப்படிச் செய்யலாம்? நல்லவர்களின் யோசனையைக் கேட்க வேண்டும். கெட்ட எண்ணங்களை ஒழிக்க வேண்டும். நன்மையையே சிந்திக்க வேண்டும். நன்மைகளுக்கெல்லாம் காரணபூதமான தத்துவத்தைப் பற்றிச் சிந்திக்க வேண்டும். இந்த வாழ்விலேயே இதை வெற்றிகரமாகச் சாதிப்பவன் மேற்கொண்டு பிறப்பில்லாமல் தடுக்கப்படுகிறான்.

— ஸ்ரீ சங்கராச்சாரியார், காஞ்சீ காமகோடி பீடம்.




## செயலாளர் கடிதம்

கல்கி 4–5–58 இதழில் "குழந்தைகள் பலி" என்ற தலைப்பில் வெளியாகியுள்ள கடிதத்தைக் கண்டு எங்களுடைய யூனியன் ரொம்பவும் வருந்துகிறது. திருவல்லிக்கேணியில் எந்த இடத்தில் குழந்தைகள் பலியாயின என்பதைக் கண்டறிய நாங்கள் எவ்வளவோ முயற்சி செய்தும் பலனில்லை. மேலும் தொடர்ந்து போலீஸ் ஸ்டேஷனிலும் தகவல் கேட்டோம். அவர்களும் தங்களுக்குத் தெரியாது என்று கூறி விட்டார்கள். எங்கள் யூனியன் தூதுக் குழு போலீஸ் கமிஷனரைப் பேட்டி கண்டபோது, 'கல்கி'யைக் காண்பித்து விளக்கம் கேட்டோம். அவர் "போலீசுக்கு அந்த மாதிரியான தகவல் கிடைத்ததாக ஞாபகமில்லை" என்றார்.

இந்தச் செய்தியின் காரணமாக, போலீஸ் அதிகாரிகள் பிரதி தினம் தொடர்ந்து டிவிஷன்கள் தோறும் நூற்றுக்கணக்கான வழக்குகளைப் பதிவு செய்து மாடுகளைப் பட்டியலில் அடைத்தும், கறவை மாடுகளை வைத்துக் காப்பாற்றுபவர்களை ஏராளமான ரூபாய்கள் அபராதம் விதித்துப் பணம் இழக்கும்படியும் செய்து விட்டார்கள். எனவே, இச் செய்தியால் மக்களிடையே பரவியுள்ள தப்பபிப்பிராயத்தைப் போக்கத் தாங்கள் ஆவன செய்வீர்களென நம்புகிறோம்.

சென்னை
29-5-58

கே. சி. முனுசாமி (செயலாளர்)
ராஜ்ய பால் உற்பத்தியாளர் யூனியன்.

['குழந்தைகள் பலி' என்ற தலைப்பில் வெளியான கடிதத்தில் இரு பெண்மணிகள் கையெழுத்திட்டு உள்ளதை உருக்கும்படியாக எழுதியிருந்தார்கள். அந்தக் கடிதத்தைப் படித்ததும் ஏற்பட்ட நெகிழ்ச்சியில் எழுதியவர்களின் விலாசம் முழுதும் இருக்கிறதா என்றுகூடப் பார்க்கத் தோன்றாமல் கடிதத்தை வெளியிட்டோம். இப்பொழுது ராஜ்ய பால் உற்பத்தியாளர் யூனியன் செயலாளர் அந்தச் செய்தியை வைத்துத் தாம் மேற்கொண்ட முயற்சிகளை உருக்கமாக எழுதியுள்ள கடிதத்தை மேலே வெளியிட்டிருக்கிறோம். அந்தக் கடிதத்திலிருந்து, 4–5–58 கல்கி இதழில் வெளியான கடிதத்தின் மேல் சர்க்கார் நடவடிக்கை எடுத்திருப்பது, அப்பகுதியில் வாழும் பால்காரர்களுக்குப் பெருந் தொல்லையாக விளைந்திருப்பதாகத் தெரிகிறது. சட்டத்தை அன்புடனும் அனுதாபத்துடனும் பயன்படுத்தினால் அத்தொழிலாளர்களுக்குப் பெரும் உதவியாக இருக்கும்; அப்பகுதி மக்களுக்கும் நலமாக இருக்கும். —ஆசிரியர்]

## அருள்வாக்கு

ஒவ்வொரு வாரமும் தொடர்ந்துவிடாமல் தாங்கள் பிரசுரித்து வரும் காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜகத்குரு சங்கராச்சாரியாரின் உன்னதமான பொன்மொழியான 'அருள் வாக்கு' என் மனத்தை மிகவும் கொள்ளை கொண்டு விட்டது. அதில் வரும் ஒவ்வொரு வார்த்தையும் ஒவ்வொருவரையும் நல் வழியில் நடப்பதற்குத் தூண்டுகோலாக இருக்கின்றது. ஜகத்குருவின் பொன்மொழிகளைத் தொடர்ந்து பிரசுரித்து வரும்படி கேட்டுக் கொள்கிறேன்.

தஞ்சாவூர்
28-5-58

ராஜாராமன்

## ஆமை வேகம்!

எங்கள் கிராமத்துக்கு வரும் தபால்கள் ஒரு வாரம் கழித்துப் பட்டுவாடா ஆகின்றன. அதுவும், நேராக வந்து கொடுப்பதில்லை. அடுத்த கிராமத்தார் கையில் கொடுத்தனுப்புகிறார்கள். அவர்கள் நான்கு நாட்கள் கழித்து அனுப்புகின்றனர். உதாரணமாக, எனக்கு வரும் கல்கி பத்திரிகை வியாழன்தோறும் தபால் ஆபீசுக்கு வருகிறது. எனக்குக் கிடைப்பது அடுத்த திங்கள் அல்லது செவ்வாய்க்கிழமைதான்! 11—5—58 கல்கி வருமுன் 18-5-58 கல்கி வந்தது. அதன் பின்தான் 11-5-58 கல்கி கிடைத்தது. 2-5-58ல் கல்கி ஆபீஸ் முத்திரையுள்ள சந்தாப் பண ரசீது 18-5-58ல் தான் எனக்குக் கிடைத்தது. ஆமை வேகத்தில் செல்கிறது, எங்கள் தபால் ஆபீஸ். சம்பந்தப்பட்டவர்களுக்குத் தெரியப்படுத்தியும் பதில் இல்லை. இந்த நிலை மாறுமா?

அருணாசலபுரம்
22—5—58

ஏ. எஸ். சுந்தரராஜன்

## இலக்கியச் சங்கம்

சமீப காலமாகத் தமிழ் மக்களிடையே தமிழ் இலக்கியங்களைப் படித்தறிய வேண்டுமென்ற ஆர்வம் ஏற்பட்டிருக்கிறது. இலக்கியங்களைச் செவ்வனே படித்தறிந்தால் மாந்தரிடையே நற்பண்புகள் ஓங்கும். இலக்கியங்களைப் போற்றி, அதன் உண்மைகளை அறிந்து, அவைகளில் கூறப்பட்டுள்ள அறிவுரைகளை வாழ்க்கையில் கடைப்பிடிக்க முயற்சி செய்வது பண்பட்டதோர் சமுதாயம் ஏற்பட உதவுகிறது.

ஆதலால் பல இலக்கியங்களிலும் கூறப்பட்டுள்ள நற்கருத்துக்களை மக்களெல்லாம் அறிந்து கொள்ளச் செய்ய வேண்டியது கற்றோரின் கடமையாகும். இப்பணியைச் செவ்வனே புரிய, தமிழகம் முழுவதிலும், தமிழ்நாடு இலக்கியச் சங்கம் ஒன்று ஏற்பட வேண்டும். அதன் கிளைகள் தமிழகத்தின் எல்லா ஊர்களிலும் ஏற்படுத்தப்பட வேண்டும்: அங்கே பாமர மக்களுக்கான இலக்கிய வகுப்புகள் நடத்தப்பட வேண்டும். விருப்பு வெறுப்பின்றி அச்சங்கம் இலக்கியத் துறையில் மட்டுமே பணி புரிய வேண்டும்.

கானாடுகாத்தான்
26-5-58

கே. சுந்தரராமன்

# மேஜை



## பரீட்சை மார்க்குகள்

**ப**ள்ளியில் படிக்கும் ஒவ்வொரு மாணவனுடைய பெற்றோரும் தம் மகன் பரீட்சையில் எவ்வளவு மார்க்குகள் பெற்றுள்ளான் என்பதை அறிய விரும்புவார்கள். மேலும் சர்வகலாசாலை மேல்வகுப்புகளில் சேரும் காலத்தில், இம் மார்க்குகளைக் கொண்டுதான் மாணவன் மேற்கொள்ளக்கூடிய படிப்பின் பிரிவினை நிர்ணயிக்கப்படுகிறது. தவிர, ப்ரீ யுனிவர்ஸிடி வகுப்பில் வாங்கும் மார்க்குப்படிதான் மாணவர்கள் தற்போது உத்தியோகக் கல்லூரிக்கு அனுமதிக்கப்படுகிறார்கள். சர்வகலாசாலையாரால் ப்ரீ யுனிவர்ஸிடி வகுப்பு மாணவர்களுக்கு மார்க்கு வழங்கப்படுவதில்லை. அதற்குப் பதிலாக A,B,C,D என்ற தரப்படி மாணவர்கள் பிரிக்கப்படுகிறார்கள். இதனால் 35% வாங்கிய ஒரு மாணவனும், அதே பிரிவில் 50% வாங்கிய மற்றொரு மாணவனும் ஒரே தரமாகக் கருதப்படுகிறார்கள். மேலும் இவ்வாறே 75% வாங்கும் மாணவனும் அதே பாகத்தில் 100% வாங்கும் மாணவனும் சமமாகின்றனர். இவ்வாறு பிரிக்கப்படுவதின் உட்கருத்து என்ன? இந்நிலையில் இந்த அடிப்படையில் உத்தியோகக் கல்லூரிகளுக்கு மாணவர்களைத் தேர்ந்தெடுக்கும் தேர்வு எப்படி நியாயமாக இருக்க முடியும்? இம்மாணவர்களின் மார்க்குகளை வெளியிடுவதிலுள்ள சிரமம்தான் என்ன?

தஞ்சாவூர்
27-5-58

ப. மாதவன்

## "நாய்ச் சாமி"

**க**ல்கி மே 25ந் தேதி இதழில் ராஜாஜி எழுதியுள்ள நாய்ச்சாமி என்ற தத்துவக் கதையைப் படித்தேன், மகிழ்ந்தேன். துறவி என்று சொல்பவன் எப்படிப் பற்று, பாசம் இல்லாமல் வாழ வேண்டும் என்பதை மிகவும் அழகாகவும் தெளிவாகவும் மக்கள் தெரிந்து கொள்ளும் முறையில் எழுதியிருக்கிறார்கள். துறவி என்ற சொல்லுக்குச் சரியான விளக்கமாக நாய்ச்சாமி அமைந்து விட்டது. ராஜாஜி அவர்கள் தொடர்ந்து வாரா வாரம் கல்கியில் இதுபோன்ற தத்துவக் கதைகள் எழுத வேண்டும் என்று விரும்புகிறேன்.

கும்பகோணம்
23—5—58

கோ. சந்தானம்

## ஆலைத் துணியும் விற்பனை வரி நீக்கமும்

**செ**ன்ற 1957ம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் ஒரு குறிப்பிட்ட தேதி முதல் ஆலையில் உற்பத்தி செய்யப்பட்ட மில் ஜவுளித் துணிகளுக்குப் பலமுனை விற்பனை வரி கிடையாது எனப் பாரத சர்க்கார் அறிவித்துள்ளனர். அந்த உத்தரவு மின்சாரத்தால் இயங்கும் ஆலைகளில் உற்பத்தி செய்யப்பட்ட துணிகளுக்கு மட்டும்தான். விசைத்தறிகளில் உற்பத்தியாகும் பனியன் வகைகளுக்கும், பாவாடை நாடா வகைகளுக்கும் எப்போதும் போல் இரண்டு சதவிகிதம் விற்பனை வரி துணி, நாடா போன்ற விசைத்தறித் துணிகள் கிடைக்கும். உண்மை நிலை இவ்வாறு இருக்கையில் அதிகம் எழுதப் படிக்கத் தெரியாத பெரும்பாலான சிறிய வியாபாரிகள் விற்பனை வரி நீக்கப்பட்ட போதும் தனித்தனியே கணக்குகள் வைக்க வேண்டியிருக்கிறது.

ஆலைத் துணிகளுக்கு மட்டும் பல முனை விற்பனை வரி கிடையாது என உத்தரவிடும் பாரத சர்க்கார், ஏன் அம்முறையை விசைத்தறித் துணிகளுக்கும் அமுல் செய்யக்கூடாது? இவ்வாறு செய்தால்தான் அரசாங்கத்துக்கு மேற்படி கணக்குகளைத் தனியே தணிக்கை செய்யும் அநாவசிய வேலைகளும், விசைத்தறித் துணிகள் உற்பத்தி செய்வோர், அவற்றை விற்பனை செய்வோர் ஆகிய இருவகையினருக்கும் விற்பனை வரிக் கணக்குகளைத் தனியே தொடர்ந்து எழுதிவரும் அல்லல்களும் நீங்கும்.

அதிராம்பட்டணம்
20—5—58

அ. உலகநாதன்

## "உயிரோட்டம்"

**க**ல்கி இதழில் 25-5-58ல் வெளிவந்த "உயிரோட்டம்" என்னும் பரிசுக்கதை படிப்போர்களின் கவனத்தைக் கவர்ந்திருக்கும். கதையின் போக்கும், அதன் நடையும் ஒரு தனிச் சிறப்புடன் அமைந்துள்ளது. அன்றாட வாழ்க்கையில் நிகழும் ஒரு சிறு சம்பவமாயிருப்பினும் அதை அமைத்திருக்கும் அழகு, அதன் ஆசிரியரின் திறமையைக் காட்டுகிறது.

திருச்சிராப்பள்ளி
23-5-58

மு. இராமமூர்த்தி

## விவசாயம் உருப்படுமா?

**உ**ணவுப் பற்றாக்குறையுள்ள நமது நாட்டில் விவசாயத்தை அதிகப்படுத்தவும் தானிய அளவை அதிகப்படுத்தவும் சர்க்கார் எத்தனையோ விவசாய ஆபீஸ்களை ஏற்படுத்தியிருக்கின்றனர். இந்த இலாக்காவில் எத்தனையோ மேஸ்திரிகளையும் வேலைக்கு அமர்த்தியிருக்கின்றனர். இருந்தும் பலனில்லை. கோவை ஜில்லா இணைத்துக்கடவு பிர்க்காவில் சென்ற வருடம் பூச்சிகளால் நிலக்கடலை விளைவு பூரணமாகக் குறைந்து விட்டது. இவ்வருடமும் பூச்சித் தொல்லை ஆரம்பமாகி விட்டது. இவ்விஷயமாக, சர்க்கார் நியமித்துள்ள மேஸ்திரிகள் எந்தவித நடவடிக்கையும் எடுத்துக் கொண்டதாகத் தெரியவில்லை. விவசாய இலாக்கா இந்த நிலைமையில் இருந்தால், விவசாயம் எப்படி உருப்படும்?

இணைத்துக்கடவு
22—5—58

என். என். ஐ. கே. சாமி
வி. என். மணி
கே. அப்பாசாமி

இப்பொழுது நடைபெறுகிறது






# பிள்ளைக் கனியமுது

தயாரிப்பு
P.S.வீரப்பா

டைரக்ஷன்
M.A.திருமுகம்

## 33

துஷ்டருடைய தீய பேச்சை எதிர் மலையாமல் பொறுத்துக் கொள்ளும் மக்கள் சம்சாரிகளாயினும் அவர்கள் துறவிகளே ஆவர். ஒருவன் சந்நியாசம் பூண்டு காவித் துணி உடுத்த வேண் டியதில்லை. பொறுமை விரதத்தைக் காத்தால் இல்லறத்தில் இருந்து கொண்டு துறவியின் விரதத்தையும் காத்தபடியாகும்.

> துறந்தாரின் தூய்மை
> உடையர் இறந்தார்வாய்
> இன்னாச்சொல் நோற்கிற்
> பவர்.

இறந்தார் வாய் இன்னாச் சொல்—தருமம் என்கிற வரம்பைத் தாண்டி நடந்து கொள்ளும் மக்களுடைய பேச்சு – தீங்கு இழைக்கும் சொற்கள் —அவற்றைப் பொறுப்பது ஒரு விரதம் அல்லது நோன்பு ஆகும். பொறுத்த வன் நோற்றவன் ஆவான். இன்னாச் சொல்லை எதிர்மலையாமல் பொறுத் துக் கொள்வது துறவியின் விரதம் போன்ற ஒரு பெரிய விரதம். துஷ் டர்களுடைய இன்னாச் சொல்லைப் பொறுத்துக் கொள்பவர்கள் துறவிக ளுடைய தூய்மையைப் போன்ற தூய்மையை உடையவர் ஆவார்கள்.

உணவு இன்றி விரதம் காப்பது கடினம். அது போற்றத் தக்கது. ஆனால் அதைவிடப் போற்றத்தக்க விரதமாகும், பிறருடைய இன்னாச் சொல்லைப் பொறுத்தல்.

> உண்ணாது நோற்பார்
> பெரியார்; பிறர்சொல்லும்
> இன்னாச்சொல் நோற்பாரின்
> பின்.

அவர்களும் நோற்பாரே. இவர்களும் நோற்பாரே. ஆனால் இவர்களுக்குப் பின்னால்தான் அவர்கள் நிற்கவேண் டும். இது முதல்தரமான தவம், அது இரண்டாம்தரமான தவம்.

அறியாமையாலும் பிறவிக் குணங் களின் காரணமாயும் தகாத முறையில் பிறர் நம்மைப் பற்றிப் பேசுவார்கள். அதனால் நாம் கலங்கலாகாது. அது ஒரு சோதனை. நம்முடைய பொறு மையைப் பரீட்சை செய்கிறது. இதில் தேறும் இல்லறத்தான் துறவியே ஆவான். துறவியை விடமேலானவனும் ஆவான். இல்லறத்தின் சுகங்கள் துறவிக்கு இல்லை. அந்தச் சுகங்களுக்கு ஈடாகச் சில சோதனைகள்—துறவிக்கு ஏற்படாத சோதனைகள் — இல்லற வாழ்க்கையில் இருப்பவனுக்கு ஏற் படும். அந்தச் சோதனைகளைப் பொறுத் துக்கொண்டு வெற்றி பெறுவது சம் சாரியின் கடமை.



### கன்னடத்தில்

# சக்கரவர்த்தித் திருமகன்

எஸ். வி. எஸ்.

உலகில் சற்றும் எதிர்பாராத அதிசயங்கள் நிகழ்கின்றன. அப்படிப்பட்டதோர் அதிசயம் தான் சென்ற மாதம் கன்னட ராமாயண வெளியீட்டு விழாவுக்கு நான் போனது.

தமிழ் நாட்டு விழா, தமிழில் நடக்கும் விழா, அல்லது ஆங்கிலத்தில் நடக்கும் விழா என்றால் நான் போவதற்கு அர்த்தமுண்டு. எனக்குச் சற்றும் புரியாத கன்னட மொழியில் நடைபெறும் ஒரு விழா! இதற்கு நான் போய்ச் சேருவது என்றால் அதை அதிசயம் என்று சொல்லாமல் வேறு எப்படிச் சொல்லு வது என்று எனக்குத் தெரியவில்லை.

ஆனால் இந்தக் கன்னட விழாவுடன் இரண்டு முக்கியமான விஷயங்களில் தமிழ் நாட்டு மக்களுக்கும் கல்கி வாசகர்களுக்கும் நேரிடைத் தொடர்பு உண்டு. அதைப் பற்றி அவர்கள் பெருமைப்படலாம்.

கல்கியில் வாரந்தோறும் வெளியாகி வந்த சக்கரவர்த்தித் திருமகன்தான், இப்போது கன்னடத்தில் மொழி பெயர்க்கப்பட்டுப்புத்தக வடிவில் வெளியாகியிருக்கிறது. அதன் வெளி யீட்டு விழா தான் பெங்களூரில்நடைபெற்றது. தமிழர்கள் படித்துச் சுவைத்து வரும் அருமை யான நூலைக் கன்னடியர்கள் விருப்பமாக வாங்கப் போகிறார்கள் என்பது பெருமைப் படத்தக்க விஷயம் அல்லவா!

அடுத்தாற்போன்ற விஷயம் தமிழ் நாட்டுத் தலைவர் ராஜாஜி இந்த விழாவில் கலந்து கொள்கிறார் என்பதுதான்.

ராஜாஜி எத்தனையோ விஷயங்களைப் பற்றி எத்தனையோ மேடைகளில் பேசி யிருக்கிறார்; கேட்டிருக்கிறோம் என்றாலும், மகாபாரதம், ராமாயணம் முதலியவை சம்பந்தமாக ராஜாஜி நிகழ்த்தும் உரைகள் தனித்தன்மை பெற்றவை அல்லவா? அவற்றை நேரில் கேட்கவேண்டும் என்ற ஆவலினால் உந்தப் பட்டு, பெங்களூருக்குச் சென்றேன்.

தமிழ் நாட்டில் எத்தனையோ திருநாட் களைப் பெரு விழாக்களாகக் கொண்டாடு கிறோம். கம்பன் விழா, வள்ளுவர் விழா, பாரதிவிழா, தமிழ்விழா,-இளங்கோ விழா என்று எத்தனையோ விழாக்கள் கொண்டாடு கிறோம். இவற்றோடு ஒரு புது விழாவும் சேர்ந்திருக்கிறது. ஒவ்வொரு புஸ்தகம் வெளி யிடும்போதும் பிரகாரகர்த்தர்கள் விழாக் கொண்டாடி வருகிறார்கள். இந்தப் புதுப் பழக்கத்தை ஏற்படுத்திய பெருமை தமிழ் நாட்டுக்குத்தான் உரியது என்று நினைக்கி றேன். இதைப் பெங்களூர் பிரகாரகர்த்தர் ஸ்ரீ ஜீ. சீனிவாசனும் பின்பற்றத் தொடங்கி யிருக்கிறார்!

ராஜாஜியின் சக்கரவர்த்தித் திருமகனை, பெங்களூர் ஜீ. எஸ். விச்வா அண்டு கம்பெனி யார் பிரசுரித்திருக்கிறார்கள். இந்த நூலை ஸ்ரீ சம்பத்கிரிராவ் மொழிபெயர்த்திருக்கிறார்.

ஸ்ரீமான் சம்பத்கிரிராவ் அவர்கள், சில மாதங்களுக்குமுன் கல்கிஅட்டையைஅலங்கரித் தார் என்பது நேயர்களுக்கு நினைவிருக்கலாம். பெங்களூரில் தேசபக்தி யூட்டும் சிறந்த பள் ளிக்கூடத்துக்குத் தலைமை ஆசிரியராக இருந்து அரும்பணி யாற்றி விட்டுச் சமீபத்தில்தான் ஓய்வுபெற்றார். இப்பொழுது, ராஜ்சியில் ஒரு பெரிய பள்ளிக்கூடத்தின் பிரின்ஸ்பாலாக இருக்கி றார். இலக்கியத்தில் நிறைந்த புலமையும் ஆர்வ மும் உள்ளவர்.

பிரகாரகர்த்தர் ஸ்ரீ ஜீ. சீனிவாசன் அவர்களைப் பற்றியும் ஒரு வார்த்தை இங்கு சொல்ல வேண்டும். தமிழ் நாட்டிலுள்ள ஒரு சில பிரகாரகர்த்தர்களைப் போலில்லாமல் முற்றும் மாறுபட்டவராக இருக் கிறார். அதாவது, தான் பிரசுரிக்கும்புத்தகம்இன்ன புத்தகம், இன்ன ஆசிரியரு டையது என்பதை நன்கு தெரிந்தவராக இருக்கிறார்! தமிழ் நாட்டில் புத்தகங் கள் விற்பனையாவதுபோல் அவ்வளவு வேகமாகக் கன்னடத்தில் விற்பனை யாவதில்லை. இருந்தாலும், ஸ்ரீமான் ஜீ. சீனிவாசன், ராஜாஜியின் ராமாயணத் தைக் கன்னட மொழி



விழாத்தலைவர் ஸ்ரீ டி. வி. குண்டப்பா அவர்களிடமிருந்து மைசூர் முதன் மந்திரி திரு ஜெட்டி சக்கரவர்த்தித் திருமகனை விலை கொடுத்து வாங்கிக்கொள்கிறார்.

யில் வெளியிட வேண்டும் என்று ஆசை கொண்டு வெளியிட்டிருக்கிறார். வியாபார நோக்கமின்றி, ஆசை பற்றி வெளியிட்டார். அதனால் நான் ராஜாஜி, இந்தக் கன்னட நூலுக்கு என்று எழுதிய விசேஷ முன்னுரையில் பின்வருமாறு தமிழில் எழுதியிருக்கிறார்:

"என்னுடைய புஸ்தகத்தைச் சம்பத் கிரிராயர் கன்னட மாக்கித் தந்திருக்கிறார். பிரபல பிரசுராலயத்தார் இதை நல்ல முறையில் வெளியிட்டிருக்கிறார். இருவர்களுடைய சேவையும் ராம சேவை. பிராட்டி சீதை படிப்போர்களை அருளுடன் பார்ப்பாள்.

8—5—58 இராஜகோபாலாச்சாரி.



பெங்களூர் முதல் பிரமுகர் முதல் பிரதியை வாங்குகிறார்.

இதைப் பிரசுரகர்த்தர், அப்படியே பிளாக் செய்து புத்தகத்தில் சேர்த்திருக்கிறார். இப்படிக் கன்னடப் புத்தகத்தில் தமிழ் மணம் கமழ்வது நமக்குப் பெருமையாக இருக்கிறது.

அழகுக்குப் பெயர் போன நகரம் பெங்களூர்; அந்த நகரத்திலுள்ள மிக அழகான மண்டபம் ஸ்ரீ புட்டண்ண செட்டி மண்டபம். அதன் கம்பீரமான தோற்றமும், உள்ளே நுழைந்தால் நாற்புறமும் துலங்கும் வண்ண ஓவியங்களும், அழகிய நாற்காலிகளும், மேடையும் கலைத்தேவி வாசம் செய்யும் நகரம் இந்தப் பெங்களூர்தான் என்ற எண்ணத்தை உறுதிப்படுத்துகின்றன.

இந்த அழகிய மண்டபத்தின் முகப்பில், சென்ற மே மாதம் 25-ம் தேதி மாலை ஐந்து மணிக்கு இனிமையான நாதஸ்வரம் கேட்டது. உள்ளே நுழைந்தால் சீதா லட்சுமணர், ஆஞ்சநேயர் கூடிய ஸ்ரீ கோதண்டராமரே எல்லோருக்கும் முன்னால் சபையில் கம்பீரமாக எழுந்தருளியிருந்தார். அவருக்கு ஒரு கும்பிடு போட்டுவிட்டு நாற்காலியில் அமர்ந்தேன். உள்ளூர்ப் பிரமுகர்கள், நீதிபதிகள், வியாபாரிகள், வக்கீல்கள், எம். எல். ஏ.க்கள், இப்படிப் பலதரப்பட்டவர் கூட்டம் கூட்டமாக வந்து சேர்ந்தனர். மண்டபம் நிரம்பிவிட்டது.

மேடையிலும் அன்றைய விழாவுக்கு முக்கியமானவர்கள் வந்து சேர்ந்து விட்டார்கள். விழாத் தலைவர் ஸ்ரீமான் குண்டப்பா, ஸ்ரீமான் மாஸ்தி வெங்கடேசய்யங்கார், ராஜாஜி ஸ்ரீமான் சம்பத்கிரிராவ் முதலியவர்கள் வந்து அமர்ந்து விட்டார்கள். இந்த விழாவுக்கு மைசூரின் புது முதன் மந்திரி ஸ்ரீ ஜெட்டியும் வந்திருந்தார். பெங்களூர் நகர மேயர் ஸ்ரீ ராமச்சந்திராவும் வந்திருந்தார். இப்படிப் பெங்களூர் நகரின் பிரமுகர்களில் யாருமே விடப்படவில்லை என்று சொல்லும்படி வந்து இவ்விழாவைச் சிறப்பித்தார்கள். இப்படி அனைவரும் வந்து குழுமியதற்குக் காரணம் சொல்லவும் வேண்டுமா?

ஸ்ரீமதி ரங்கநாயகி கோஷ்டியார் இனிய குரலில் ஸ்ரீராமபிரான் மீது பதினைந்து நிமிஷங்களுக்குப் பாடினார்கள். பிறகு விழா தொடங்கியது.

ஸ்ரீமான் மாஸ்தி வெங்கடேசய்யங்கார் கன்னடத்தில் வெளுத்து வாங்கினார். சபையோர்கள் எல்லாம் ரொம்பவும் அனுபவித்தார்கள். எனக்குக் கூடப் புரிந்தாற்போல் இருந்தது. அதை இங்கே சொல்லிவிட்டு, "எனக்கு ஒன்றும் புரியவில்லை" என்ற உண்மையை வெளிப்படுத்துவானேன்!

அதற்குப் பிறகு ராஜாஜி பேச எழுந்தார். "நான் தமிழில் பேசட்டுமா?" என்று கேட்டார். 'என் தமிழ் உங்களுக்குப் புரியும்' என்றுகூடச் சொல்லிப் பார்த்தார். சபையோர் ஆங்கிலத்தில்தான் பேச வேண்டும் என்று வற்புறுத்தவே, ஆங்கிலத்தில் பேசினார் ராஜாஜி.

ராஜாஜி அன்று சுமார் அரைமணி நேரம் தான் பேசினார். அந்த அரைமணி நேரத்தில் அரை விநாடிகூட விட முடியாதபடி அவ்வளவு உயர்ந்த விஷயங்களை ஒன்றன்பின் ஒன்றாக முத்துக் கோப்பது போல் சொல்லிக் கொண்டு வந்தார். சபையோர் கட்டுண்ட நாகம் போல் கேட்டுக் கொண்டிருந்தனர். இந்த ஒரு பிரசங்கத்தைக் கேட்க, சென்னையிலிருந்து என்ன காஷ்மீரிலிருந்துகூட வரலாமே என்ற எண்ணம்தான் உண்டாயிற்று!

அந்தப் பிரசங்கத்தில் ராஜாஜி சொன்ன அத்தனை கருத்துக்களையும் இங்கு சொல்வது என்பது சாத்தியமல்ல என்றாலும் சிலவற்றை என் நினைவிலிருந்து சொல்கிறேன்.

"நான் சின்னஞ்சிறு குழந்தைகளுக்காக ராமாயணக் கதையைச் சொல்ல ஆரம்பித்தேன். ராமாயணக் கதையில் அவ்வப்போது புலவர்களாலும், கதா காலட்சேபக்காரர்களாலும், சினிமாக்காரர்களாலும் சேர்க்கப்பட்ட அனாவசியக் கதைகளை ஒதுக்கி வால்மீகி சொன்ன கதையை நேரே சொல்ல வேண்டும் என்று ஆரம்பித்தேன். குழந்தைகளுக்குப் புரிய வேண்டும் என்று அவர்களுடைய பாஷையில் சொல்ல ஆரம்பித்தேன். எந்தப் பெரிய



*விழாவுக்கு விஜயம் செய்த பிரமுகர்கள். ராஜாஜிக்கு இடது புறம் இருப்பவர்கள், பிரசுரகர்த்தர் ஜி. சீனிவாசன், மாஜி மந்திரி ஹனுமந்தையா, ஸ்ரீ கவாத்தின ராமராவ்.*

முக்கியமான விஷயத்தையும் எளிய நடையில் குழந்தைகள் பேசும் பாஷையில் பேசிவிட முடியும். புரிய வேண்டாத, அவசியமில்லாத விஷயத்தைச் சொல்லத்தான் அடுக்குத் தொடர்கள் பாஷையின் விசேஷ நடை யாவும் வேண்டும்!''

''ராமாயணக் கதை யார் சொன்னாலும் கேட்க சுவாரஸ்யமாக இருக்கிறது. மூன்றாந் தரக் கதா பிரசங்கி சொன்னால்கூட மக்கள் கேட்கக் கூடுகிறார்கள். இது ஏன் என்றால் ராமாயணக் கதையின் சத்தான விஷயம் அப்படிப்பட்டது. அது எந்த மொழியில் சொன்னாலும் சுவையாக இருக்கிறது. இதற்குக் காரணம் பாரத மக்களின் உயர்ந்த பண்பாட்டிலிருந்து இந்தக் கதை மூளைத் திருப்பதுதான். ஆகவே, இந்த ராமாயணக் கதையை நான் சொன்னதற்குப் பாராட்டு வதற்குமுன், இந்தக் கதையைக் கொடுத்த பாரத மக்களை, அவர்களுடைய மேதா விலா சத்தைப் பாராட்ட வேண்டும். பிறகு இந்தக் கதையை நமக்குச் சொன்ன ரிஷியைப் பாராட்டி வணங்க வேண்டும்.

''ஒரு புத்தகத்தின் தரத்தை எப்படி மதிப் பது? அந்தப் புத்தகத்தைப் படித்து முடித்து விட்ட பின்னர் நாம் உயர்ந்த முறையில் நடந்து கொள்ள வேண்டும் என்ற உணர்ச்சி ஏற்பட்டால் அப்போது அந்தப் புத்தகம் நல்ல புத்தகம் என்று கருத வேண்டும். இப்போது வெளி வரும் புத்தகங்களைப் பற்றி அப்படிச் சொல்ல முடியுமா? ஒரு நாளும் முடியாது. ஆனால் ராமாயணத்தையோ, பாரதத்தையோ ஒருதரம் படித்து முடித்தால் நாம் நல்லவனாக நடந்து கொள்ள வேண்டும் என்ற உணர்ச்சி ஏற்படும்! இதுவே நல்ல புத்தகத்தின் அடை யாளம். இதுவே மனப் பண்பு உயர வழி.

''இந்தக் காலத்தில் மக்கள், முதன் மந்திரி யின் வீட்டு வாசலிலோ, அல்லது சர்க்கார் காரியதரிசியின் காரியாலய அறையிலோ, அவருக்குக் கீழுள்ள தாசில்தார் வீட்டுவாச லிலோ ஒரு சிறு உதவியை நாடி மணிக் கணக்கில் காத்துக் கிடக்கிறார்கள். ஆனால் வால்மீகியும் வியாசரும், மக்கள் வீட்டு வாச லில் காத்துக் கிடக்கிறார்கள்! சற்று மனக் கதவைத் திறந்து இந்த மகான்களுக்கு உள்ளே இடம் தாருங்கள். அவர்கள் உங்கள் வாழ்க் கையை, உங்கள் மனத்தைத் தூய்மைப் படுத்தி விடுவார்கள்!'' என்றார். இந்தக் கருத்தை வெளியிட்டபோது சபையோருக்குப் புல்லரித்து விட்டது.

மற்றொரு கருத்தைப் பாருங்கள்.

''வால்மீகி காலத்து மக்கள் பண்பாடு இன் றும் நம்மிடையே இருக்கிறது. சற்று முயன் றால் அந்தப் பண்பாடு வெளிப்பட்டுத் தொழிற்படும்.

''ராமனைப் போல் ஒருவேளை நம்மால் வாழ முடியாமற் போகலாம். அவன் ரொம்பவும் லட்சிய புருஷன். அந்த அளவுக்குத் தியாக வாழ்க்கை, அல்லது லட்சிய வாழ்க்கை வாழ முடியாமற் போகலாம். ஆனால் சற்று முயன் றால், பரதன், லட்சுமணன், ஹனுமான் இவர் களைப் போல் வாழலாம். ஆனால் நம்மிடையே ஆண்களுக்கு, தாங்கள் ராவணன், கும்ப கர்ணன், இப்படிப்பட்டவர்களோ என்ற சந்தேகம் எழலாம். ஆனால் நம் பெண்களைப் பற்றி மட்டும் ஒரு சந்தேகமில்லை. அவர்கள் அத்தனைபேரும் இன்றும் சீதைகளே! அதனால், இளைஞர்களுக்கு ஒரு வார்த்தை இங்கு சொல்லவிரும்புகிறேன். ஒவ்வொரு இளைஞ னின் உள்ளத்திலும் இன்றும் ஹனுமான் குடிகொண்டிருக்கிறான். எப்பொழுதாகிலும் ஒரு பெண்ணைப் பார்த்தீர்களானால் அவளைச் சீதை என்று கருதுங்கள்!'' என்றார் ராஜாஜி.

தற்கால இளைஞர்களுக்கு அவசியம் கொடுக்க வேண்டிய புத்திமதி என்று சபை யோர் ஆமோதித்தனர். பெண்கள் ஆண்க ளோடு சரிநிகர் சமானமாக எல்லாத்தொழில் களிலும் ஈடுபட்டு வேலை செய்யும் காலம். அதனால் அவர்கள் வெளியில் அதிகமாக நட மாட நேருகிறது. அப்போது பஸ் ஸ்டாண்டி லும், பொது இடங்களிலும் பல தொல்லை

களுக்கு அவர்கள் உள்ளாகும்போது, இளைஞர்கள் ஹனுமானாக மாறி அத்துயர் தீர்க்க வேண்டியது அவர்கள் பொறுப்பல்லவா?

ராஜாஜி 'நம்மால் ராமனைப்போல் வாழ முடியாமற் போகலாம்' என்று சொன்னது எனக்கு அவ்வளவு சரியாகப் படவில்லை. ராஜாஜியைப் பார்த்த பிறகும் ராமன் நம்மிடம் இல்லை என்று எப்படி ஒப்புக் கொள்ள முடியும்?

இவ்வாறு அன்று ராஜாஜி உதிர்த்த கருத்துக்களை எண்ணி முடியாது! சொல்லி முடியாது! அவ்வளவும் அரை மணி நேரத்துக்குள்! இப்படிப் பேச ராஜாஜியைத் தவிர பாரத நாட்டில் வேறு யார் இருக்கிறார்கள்?

ராஜாஜி பேசி முடித்ததும், பிரசுரகர்த்தர் ஜி. சீனிவாசன், ராஜாஜிக்குக் கன்னட ராமாயணத்தின் முதல் பிரதியை வழங்கினார். ராஜாஜியின் கையில் புத்தகத்தைக் கொடுத்து விட்டு, அப்படியே ராஜாஜியின் பாதங்களில் விழுந்து வணங்கினார். சபையோரின் மெய் சிலிர்த்து விட்டது. அடுத்தாற் போல், அந்த மேடையின் ஓரத்தில் அமர்ந்திருந்த நமது தந்தையின் பாதங்களிலும் விழுந்து வணங்கினார். நாம் பிறந்த பயனும், புத்தகப் பிரசுரத் தொழிலில் புகுந்த பயனும் அன்று நாம் பெற்றதாக அவர் நினைத்தார் என்பதைக் காட்ட இவற்றைவிட வேறு அத்தாட்சி என்ன வேண்டும்!

இந்தப் பிரசுரகர்த்தர் ரொம்பவும் கெட்டிக்காரர். தமது அச்சுத் தொழிலாளர்கள் வாழ்க்கையிலும் இந்த நன்னாள் என்றும் நினைவிருக்கும்படி ஒரு காரியம் செய்தார். தொழிலாளர்கள் ஒவ்வொருவருக்கும் தங்கப் பதக்கங்கள் பரிசுகளாக வழங்கினார். ராஜாஜியின் திருக் கைகளினால் அவற்றை வழங்க ஏற்பாடு செய்து விட்டார்.

இப்படி இவர்கள் எல்லாம் ராஜாஜியின் கையினால் பெற்றுக் கொள்வதைப் பார்த்து விட்டுத்தானோ என்னவோ, பெங்களூர் மேயர் ஸ்ரீ ராமச்சந்திரா ஒரு காரியம் செய்தார். அவர் ராஜாஜியின் கன்னட ராமாயணத்தின் முதல் பிரதியைத் தம் பையை விட்டு இரண்டரை ரூபாய் எடுத்துக்கொடுத்து ராஜாஜியின் கைகளிலிருந்து வாங்கிக் கொண்டார். பெங்களூர் நகரின் முதல் பிரஜையாகிய மேயர், ராஜாஜியின் கன்னட ராமாயணத்தின் முதல் பிரதி வாங்கியது ரொம்பப் பொருத்தமாக இருந்தது. இவர் இப்படி வாங்குவதைப் பார்த்ததும், முதன் மந்திரி திரு ஜெட்டியினால் சும்மா இருக்க முடியவில்லை. அவரும் பைக்குள் கையை விட்டு இரண்டரை ரூபாய் எடுத்துக்கொடுத்து விழாத் தலைவர் திரு டி. வி. குண்டப்பா அவர்களிடமிருந்து இரண்டாவது பிரதியைப் பெற்றுக் கொண்டார்.

பொதுவாகப் பெரிய மனிதர்கள் இத்தகைய விழாக்களுக்கு வந்தால், தங்கள் கையை விட்டுப் பணம் கொடுத்து, புத்தகம் வாங்குவது கௌரவக் குறைவு என்று நினைப்பார்கள். அதுமட்டுமல்ல, பிரசுரகர்த்தர் அன்பளிப்பாக ஒரு பிரதியைக் கொடுக்க வில்லை என்றால் அவர்களுக்குக் கோபங்கூட வரும். இந்த வழக்கத்துக்கு மாறாக, மேற்கண்ட விதமாக நடைபெற்றது விழாவுக்கே தனி கவர்ச்சியளித்தது. புத்தக வெளியீட்டு விழா தமிழ் நாட்டிலிருந்து போனாலும், இந்த நல்ல பழக்கத்தைக் கன்னடப் பிரமுகர்கள் தமிழ் நாட்டுக்கு அளித்ததாகக் கொள்ளலாம்!

இப்படி மேடை மேலேயே பிரதிகளுக்குப் போட்டி ஏற்படுவதைப் பார்த்தபோது ராஜாஜியின் ராமாயணம் கன்னட மொழியில் பல்லாயிரம் பிரதிகள் விற்பனையாகும் என்ற நம்பிக்கை பிறந்தது'! கல்கியில் வந்த சக்கரவர்த்தித் திருமகனைப் பல லட்சக்கணக்கான தமிழ் மக்கள் வாசித்தார்கள். புத்தகமாக, மலிவுப் பதிப்பாக வெளி வந்த பிறகு பல்லாயிரக்கணக்கான பிரதிகள் விற்பனையாகியுள்ளன! ஆங்கிலத்திலும் பல்லாயிரக்கணக்கான பிரதிகள் விற்பனையாகியுள்ளன. இப்பொழுது கன்னடத்தில் வெளியாகியிருக்கிறது.

இந்த விழாவில் மற்றொரு செய்தியையும் கேள்விப்பட்டேன். இதை உருது மொழியில் மொழிபெயர்க்க விரும்புவதாக ஒரு அன்பர் கூறினார். அதற்கு ராஜாஜியும் சம்மதம் அளித்திருப்பதாக அறிவித்தார்.

கல்கியில் வெளியான நூல் இப்படிப் பல மொழிகளிலும் வெளியாவதைக் கண்ட நான் பெருமிதம் அடைந்தேன்! இதில் உங்களுக்கும் பங்குண்டல்லவா?




"லலிதா! சீக்கிரம் வேறு புடவையை மாற்றிக் கொள்ளம்மா. இன்னும் ஒரு மணி நேரத்துக்குள் பிள்ளை வந்து விடுவான்!" என்று கூறிக் கொண்டே உள்ளே வந்தார் லலிதாவின் மாமா சிதம்பரம்.

லலிதாவுக்கு எரிச்சலாகத்தான் வந்தது. இவ்வளவு நாட்களாக மாமாவுக்கு எதிர்ப் பேச்சு பேசாதவள், இன்று சற்றுக் கோபத்துடனேயே, "மாமா! எவ்வளவு நாட்கள் தான் இந்த விளையாட்டைத் தொடர்ந்து நடத்துவது? இன்று வரப் போகிறவர்களும் என் தோஷங்களைத்தான் எடுத்துக் கூறி விட்டுப் போகப் போகிறார்கள். மாமா நான் கறுப்பாகப் பிறந்தது ஒரு குற்றம்; அடுத்தது இளம் வயதிலேயே தந்தையை இழந்து விட்டது பெருங் குற்றம். நாதியற்றவள் என்று கூறி விட்டுப் போகும் மனிதர்களிடம் என்னை விளம்பரப்படுத்திக் கொள்ள எனக்கு விருப்பமே இல்லை!" என்றாள்.

சிதம்பரம் சற்று அதிர்ச்சியுற்று நின்று விட்டார். லலிதா கூறுவது முற்றிலும் உண்மை என்பதை அவர் நன்கு அறிவார். லலிதா கறுப்பாக இருந்ததோடு, தந்தையற்ற பெண்ணாயிற்றே என்று பலரும் அவளை வெறுத்து விட்டனர். ஆனால் உலகில் எல்லோருமே ஒரே குணம் படைத்தவர்கள் என்று எப்படிச் சொல்லிவிட முடியும்? அதனால் லலிதாவுக்கு வரன் தேடுவதில் அவர் தம் முயற்சியைத் தளர்த்தவில்லை. சிதம்பரம் லலிதாவை அருகில் அழைத்துத் தேறுதல் கூறினார். "இன்று வரப் போகும் பையன் இவ்விதத் தோஷங்களைக் கற்பிக்க மாட்டான்!" என்று உறுதி கூறினார். லலிதா சற்று மனம் தேறினாள்.

லலிதா சிறு வயதிலேயே தந்தையை இழந்து விட்டாள். சிதம்பரம் எவ்வளவு கூறியும் கேளாமல் அவள் தாயார் சங்கரி, தன் பெண்ணுடன் கிராமத்திலேயே வசித்து வந்தாள். ஆனால் சிதம்பரத்தின் மனைவி பாக்கியம், தன் ஒரே மகள் லீலாவை விட்டு விட்டுக் கண்களை மூடியபோது, அண்ணன் குடும்பத்தை நிர்வகிப்பதற்காகக் கிராமத்தை விட்டு அவள் நகரத்துக்கு ரயிலேறி வந்து சேர நேர்ந்தது.

மாமாவின் வீட்டில் நுழைந்தபோது, லலிதாவுக்கு லீலாவின் போக்கே விசித்திரமாக இருந்தது. லீலா இயற்கையிலேயே சிவந்த மேனி. அவ்விதமிருந்தும் ஏன் இவ்வளவு மாவை அள்ளி அள்ளிப் பூசிக் கொள்கிறாள் என்று வியந்தாள் லலிதா. கையில் அழகாக மருதாணி இட்டுக் கொள்ளாமல், விலை கொடுத்து வாங்கி ஏன் சாயம் பூசிக்கொள்ள வேண்டும்? உதடுகளில் தடவிக் கொள்வது என்ன? நிமிஷத்துக்கு நிமிஷம் புடவை மாற்றவேண்டிய அவசியம் என்ன?—இவையெல்லாம் லலிதாவுக்குப் புரியாத புதிராகவே இருந்து வந்தன.

அதே சமயம் லீலா, லலிதாவைப் பட்டிக்காட்டுப் பெண் என்று, ஜாடையாக அலட்சியம் செய்து பரிகசிக்கும் போதெல்லாம் சங்கரி மனம் குமுறுவாள். லலிதா அவள் பரிகசிப்பை விளையாட்டாக நினைத்துச் சிரித்து வந்தாள். ஆனால் மாமா அவளுக்கு மணம் முடிக்க நிச்சயித்ததும், அவளைப் பார்த்த ஆணழகர்கள் கூறிய மொழிகளைக் கேட்டதும்தான் அவளுக்கு 'மாய' உலகம் நன்கு புரிந்தது.

சிதம்பரத்துக்கு லலிதாவின்மீது தனிப்பட்ட பாசம் உண்டு. வியாபாரத்தில் அவருக்குப் பணம் கொட்டிக் கொழித்தது. தம் கையை விட்டுப் பணம் செலவழித்து லலிதாவைப் பெரிய இடத்தில் விவாகம் செய்து கொடுக்க நிச்சயித்தார். ஆனால் அதில் இவ்வளவு கஷ்டங்கள் வரும் என்று அவர் எதிர்பார்க்கவில்லை. அவளைப் பார்க்க வந்த பணக்காரர்கள் எல்லோரும் பெண் கறுப்பு என்றனர்; ஆபத்துக் காலத்தில் உதவத் தந்தை இல்லையே என்று குறை கூறினர். லலிதாவுக்கோ விவாகப் பேச்சை எடுத்தாலே அதிக வெறுப்பு தோன்றியது.

அன்றும் வழக்கம்போல் பிள்ளையை அழைத்து வந்தார். பையனுக்கு மூர்த்தி

என்று பெயர். இல்லியில் இன்ஜினியராக இருந்தான். நல்ல சிவந்த மேனி. பார்க்க மிக அழகாக இருந்தான்.

''லலிதா!'' என்று குரல் கொடுத்தார் சிதம்பரம். லலிதா வெளியே வந்தாள். அவ்விருவரையும் நமஸ்காரம் செய்துவிட்டுச் சட்டென்று உள்ளே சென்றுவிட்டாள்.

இச்சமயம் கல்லூரியிலிருந்து திரும்பி வந்த லீலா சற்றும் கூச்சமின்றி மூர்த்தியின் எதிரில் போய் ஒரு நாற்காலியில் அமர்ந்தாள். ''என்னப்பா, லலிதாவுக்கு வரனா? லலிதா 'சினிமா ஷோ' காட்டுவதுபோல், தன்னைக் காட்டிவிட்டு உள்ளே ஓடி விட்டாளாக்கும்! ஏன் அப்பா, அவளைச் சிறிது நேரம் நீங்கள் தான் இங்கே உட்காரச் சொல்லக்கூடாதா?'' என்று கேட்ட லீலா, பிறகு கலகலவென்று சிரித்துப் பேசிக் கொண்டிருந்தாள்.

சிதம்பரம் மூர்த்தியைக் காரில் திருப்பி அழைத்துச் செல்லும்போதே, அவன் தன் முடிவைத் தெரிவித்து விட்டான். ''ஸார்! நீங்கள் சொன்ன பெண் கறுப்பு. மேலும் கௌரவ இடமாகச் சொல்லிக் கொள்ளத் தந்தையும் இல்லை. உங்கள் பெண்ணை நிச்சயம் செய்வதாக இருந்தால் விவாகம் செய்து கொள்கிறேன்'' என்று மனத்திலுள்ள விஷயத்தைத் தெளிவாகக் கூறிவிட்டான்.

வீடு திரும்பிய சிதம்பரம் கோபத்துடன், ''ஏ லீலா! உன்னை யார் அந்தப் பையன் எதிரில் வரச்சொன்னது?'' என்றார். லீலா பயந்துகொண்டே, ''ஏன் அப்பா?'' என்றாள்.

மூர்த்தி கூறியதெல்லாம் கூறி, ''நீ நடுவில் நுழைந்ததால்தான் இந்தக் கேடு விளைந்தது!'' என்று பல்லைக் கடித்தார் சிதம்பரம்.

லீலா கர்வத்துடன் சிரித்தபடி, ''அவர் உண்மையைச் சொன்னார். உங்களுக்கென்ன கோபம்?'' என்றாள்.

திடுக்கிட்ட சங்கரி, தந்தைக்கும் மகளுக்கும் லலிதாவின் காரணமாகச் சண்டை வளர்வதை விரும்பாமல் இருவரையும் சமாதானம் செய்து வைத்தாள். சங்கரியின் நச்சரிப்பில் சிதம்பரம் கடைசியில் மூர்த்திக்கு லீலாவை விவாகம் செய்து கொடுக்க நிச்சயித்தார்.

லீலாவின் விவாகத்தின்போது லலிதா அதிகமாக வெளியே வரவில்லை. விவாகம் முடிந்து விருந்தினர் எல்லோரும் வீடு சென்ற பிறகுதான் அவள் பாடு திண்டாட்டமாகி விட்டது. லீலாவும் மூர்த்தியும் உள்ளக் களிப்பு எய்திக் கொட்டமடித்துக் கொண்டிருந்தனர். லலிதாவுக்கு அதைக் காணச் சகிக்கவில்லை.

மூர்த்திக்கு ஒரு மாத லீவு கழிந்த பிறகு லீலாவும் கூடவே புறப்பட்டாள். புறப்படும் போது லீலா, ''லலிதா! இல்லியிலேயே உனக்கு நல்ல மாப்பிள்ளையாகத் தேடுகிறேன். கலங்காதே'' என்று கூறினது லலிதாவுக்குப் புண்ணில் கோலிட்டது போல் இருந்தது.

★

''லலிதா! லலிதா!'' என்று குரல் கொடுத்தாள் லீலா. லலிதா அருகில் சென்றாள். லீலாவின் நிலையைப் பார்த்ததும் அவளுக்கு அழுகை வந்து விட்டது. பிரசவம் லீலாவை இவ்வளவு தூரம் பாதிக்கும் என்று அவள் நினைக்கவில்லை. ஜுரத்தினால் துவண்டு கிடந்த அவள் உடம்பைப் பார்த்துப் பார்த்து உருகினாள் லலிதா. மரண நிலையிலிருந்த அவள்மீது லலிதாவுக்குப் பச்சாத்தாப உணர்ச்சி ஏற்பட்டது. அவள் கூறிய சுடு வார்த்தைகள் ஒன்றும் லலிதாவின் நினைவுக்கு வரவில்லை. லீலாவும் 'லலிதா லலிதா' என்று அடிக்கொருதரம் கூப்பிட்டுக் கொண்டிருந்தாள்.

''லலிதா! இனி நீதான் குழந்தையைப் பார்த்துக் கொள்ள வேண்டும்'' என்றாள் லீலா. தாய்மை ஸ்தானத்தை அடைந்து விட்ட அவள் லலிதாவிடம் கெஞ்சவும் ஆரம்பித்து விட்டாள்.

''சீ, லீலா! கன்னாபின்னா வென்று பிதற்றாதே. நீ நிச்சயம் பிழைத்து விடுவாய்!'' என்றாள் லலிதா.

லலிதா சொன்னதற்காக, அவள் உயிர் பிழைத்து விடவில்லை.

★

சில மாதங்கள் சென்றன.

''ஏன், இளையாள் என்றால் அவள் கறுப்பா, சிவப்பா? அப்பா உண்டா இல்லையா? ஒன்றும் பார்ப்பதில்லையோ?'' — இவ்வாறு குத்தலாக லலிதா கேட்டாள்.

''லலிதா, இதென்ன இப்படிப் பேசுகிறாய்?'' என்று கடிந்து கொண்டாள் அவள் தாயார் சங்கரி.

''பின் என்ன அம்மா? முதன் முதலில் என்னைப் பார்த்தபோது கறுப்பு என்று தொடிப்பு சொல்லி மூர்த்தி லீலாவைக் கைப்பற்றினாரே! இப்போ என் கறுப்பு எங்கே போய் விட்டது? இளையாள் என்ற அலட்சியமோ!'' என்றாள் லலிதா.

''லலிதா! வாயை அடக்கு. மூர்த்தி நினைத்தால் வேறு எவ்வளவோ பெண்களை விவாகம் செய்து கொள்ளலாம். ஆயினும் குழந்தைக்காக உன்னையே அவன் வாய் திறந்து கேட்கிறான். நீ மரியாதையில்லாமல் பேசுவது நன்றாக இல்லை'' என்றாள் சங்கரி.

இதற்குள் சிதம்பரம், ''சங்கரி! லலிதாவைத் திட்டாதே. அவளுக்குக் கோபம் வர நியாயமிருக்கிறது...லலிதா, இதோ பார், நன்றாக யோசித்துப் பதில் சொல். உனக்கு இஷ்டமில்லாவிடில் உன்னை ஒருவரும் வற்புறுத்தவில்லை. மூர்த்ியே இதையும் எழுதியிருக்கிறான். ஆனால், இந்தப் பச்சைக் குழந்தைக்காக, நீ அவனையே விவாகம் செய்து கொண்டால் எல்லோருக்கும் சந்தோஷமாக இருக்கும்'' என்றார்.

இதற்குள் குழந்தை ரவி தவழ்ந்து வந்து லலிதாவின் மடியில் உட்கார்ந்து கொண்டான். இதைப் பார்த்ததும் லலிதாவின் கண்களில் நீர் மல்கியது. இறக்கும்போது லீலா அவளிடம் குழந்தையை ஒப்புவித்த காட்சி கண்முன் தோன்றியது.

'குழந்தைக்காகத் தன்னைத் தியாகம் செய்யத்தான் வேண்டும்...' என்று தீர்மானித்தாள் லலிதா. அதோடு, 'தன்னைத் தூற்றியதோடு மட்டுமில்லாமல் தியாக வாழ்க்கையில் ஈடுபடுத்திய மூர்த்தியின் வாழ்க்கையை அங்கு இருந்துகொண்டே நாசம் செய்தால் என்ன?' என்ற எண்ணமும் அவள் மனத்தில் உண்டாயிற்று.

''மாமா! சம்மதம் என்று எழுதிவிடுங்கள்.'' தொண்டை அடைக்கக் கூறினாள் லலிதா.

அன்று இரவு முழுவதும் லலிதாவுக்குத் தூக்கமே வரவில்லை. குழந்தையை அடிக்கடி அணைத்து, ''உனக்காகத் தியாகம்...உனக்காக...'' என்று அவள் முணுமுணுத்துக் கொண்டேயிருந்தாள்.

மறு முகூர்த்தத்தில் எளிய முறையில் லலிதா மூர்த்தியின் கரம் பற்றினாள். அன்று இரவே இருவரும் ஆகாய விமானத்தில் குழந்தையுடன் டில்லிக்குப் புறப்பட்டு விட்டனர்.

★

மேஜையின்மீது 'டக்'கெனக் காப்பியைக் கொண்டு வந்து வைத்தாள் லலிதா. காப்பி ஆறிக் கிடந்தது.

அவள் கரம் பற்றிய மூர்த்தி, ''லலிதா! இன்னும் நீ என்னை மன்னிக்கவில்லையா? பணமும், அழகுமே பிரதானம் என்று எண்ணி லீலாவை மணந்து, நான் வேண்டிய வரையில் கஷ்டப்பட்டு விட்டேன். பிடிவாதமும் கொடூரமும் நிறைந்த அவள் என்னைப் படாத பாடு படுத்தி விட்டாள். உன்னை முதலில் மணக்காத குற்றத்துக்கான தண்டனையை அனுபவித்து விட்டேன். நான் முன்பு செய்த தப்புக்கு இன்னும் எனக்கு மன்னிப்பு இல்லையா?'' என்றான்.

''ம்...மன்னிப்பா? இளையாள் என்ற காரணத்தினால் என்னை மணந்துகொண்ட உங்கள் வஞ்சக எண்ணம் தெரியாதா? நான் உங்களை விரும்பி மணம் புரிந்து கொண்டதாகக் கற்பனை செய்ய வேண்டாம். இந்தப் பச்சிளம் குழந்தைக்காக உங்கள் கரம் பிடித்தேன்'' என்றாள் லலிதா கொடூரமாக.

மூர்த்தி ஒன்றும் பதில் கூறவில்லை. அவன் கண்களில் நீர் மல்கியது. அப்பொழுதே எழுந்து வெளியே சென்று விட்டான்.

லலிதா மூர்த்தியுடன் குடும்பம் தொடங்கி மூன்று மாதங்கள் ஆகிவிட்டன. அவன் எவ்வளவோ அன்பாக ஒரு குறையும் வைக்காமல் அவளை நடத்தினான். ஆனால் லலிதாவோ கடுகடுப்பாகவே இருந்தாள். அவன் நேசமாகப் பேச வருவான்; அவள் அவனைக் கடுமையாகத் தாக்கி அனுப்புவாள். அவன் பேச்சுக்குப் பேச்சு மன்னிப்பு கேட்பான். அவளோ சொல்லால் சுடுவாள். அவன் நகையும் புடவையும் வாங்கி அவளை மகிழ்விக்க முயற்சிசெய்வான்; அவள் அவற்றை எடுத்துப் பார்க்க மாட்டாள். அவளுடைய தாக்குதலைச் சகியாமல் அவன் மௌனமாக வெளியே சென்று விடுவான். மீண்டும் திரும்பி வந்ததும் யாவற்றையும் மறந்து அவளுடன் பேச முற்படுவான். அவன் பணிந்து செல்லச் செல்ல அவள் கடுமை அதிகமாகியது.

அன்றும் வழக்கம்போல் லலிதா தாக்கிப் பேசவே மூர்த்தி வெளியே சென்றுவிட்டான். ஆனால் வெளியேயிருந்து திரும்பி வந்த அவன் வழக்கம்போல் அவளுடன் பேசவில்லை. தன் படுக்கையை எடுத்து வெளியே விரித்துக் கொண்டான். அன்றுதான் முதன் முதலாக லலிதாவின் மனத்தில் சங்கடம் பரவியது.

மறுநாளாவது வழக்கம்போல் மன்னிப்பு கேட்டுத் தன்னுடன் பேச வருவான் என்று லலிதா எதிர்பார்த்தாள். ஆனால் அன்றும் அவன் பேசவில்லை. 'போதும், வேண்டாம்' என்றுகூடக் கூறாமல் சாப்பிட்டு விட்டு ஆபீசுக்குச் சென்று விட்டான். மாலையில் வரும்போது வழக்கம்போல் கையில் கதம்பத்துடன் தான் வந்தான். ஆனால் தினம்போல் அவளைக் கெஞ்சி அவள் தலையில் பூ வைக்க ஓடவில்லை. பூவை மேஜையின்மீது வைத்துவிட்டு, ''ரவி! லலிதாவைப் பூவை எடுத்துக் கொள்ளச் சொல்'' என்றான். லலிதாவுக்கு நெஞ்சை அடைத்தது. ஏதோ ஒன்றை இழந்து விட்டதுபோன்ற பிரமை ஏற்பட்டது. ரவியை மையமாகக் கொண்டே இரண்டு மாதங்கள் உருண்டோடின.

அதன் பலனாக லலிதாவின் மனம் நாளுக்கு நாள் வேதனை அடைந்தது. மூர்த்தியைப் பழி வாங்கும் எண்ணம் அவள் மனத்தை விட்டு மெதுவாக அகன்றது.

★

அன்று லலிதாவைச் சினிமாவுக்கு அழைத்துச்செல்லத் தோழிகள் சிலர் வந்திருந்தனர். குடும்ப நிலையை வெளிக்காட்டாமலே பல சிநேகிதிகளுடன் பேசிப் பழகிக் கொண்டிருந்தாள் லலிதா.



''பிரேமா! இந்தப் புடவை அழகாக இருக்கிறதடி'' என்றாள் வேதாசேகர்.

''ஆமாம், என் வீட்டுக்காரர் கூடச் சொல்லிச் சொல்லி மாய்ந்து விட்டார். அவர் தான் எனக்காக ஸ்பெஷலாகக் காஷ்மீரத்திலிருந்து வரவழைத்தார். இதைத் தான் உடுத்திக் கொள்ள வேண்டும் என்று பிடிவாதம் பிடித்தார்'' என்றாள் பிரேமாசங்கர் பெருமையாக.

''எங்கள் வீட்டுக்காரரும் அப்படித்தான். ஏதாவது நகையோ, புடவையோ வாங்கி வந்து அதை உடனே அணிய வேண்டும் என்று பிடிவாதம் பிடிப்பார்'' என்று தன் பங்கைக் கூறினாள் மீனா ஸ்ரீதர்.

''சரி! இன்று லலிதா மூர்த்தி சினிமாவுக்கு வர முடியாதாம். நாம் போகலாம்'' என்று கூறிவிட்டு அவர்கள் கிளம்பிவிட்டனர்.

அவர்கள் சென்றதும் லலிதாவுக்கு விக்கி விக்கிஅழவேண்டும்போல் இருந்தது. ''ஊஹும்! லலிதா மூர்த்தி என்ற பெயருக்கு மட்டும் குறைவில்லை. ஆனால் சாரமற்ற பெயர். மற்றவர்களது கணவர்கள் அவர்களைக் கண்டு ஆனந்திக்கிறார்கள். கொஞ்சிக் கெஞ்சிப் பேசுகிறார்கள்... ஆனால் லலிதாவைக்கண்டுமகிழ்ந்து இன்று யார் ஒரு வார்த்தை பேசுகிறார்கள்? 'எல்லாம் உன்னால் வந்ததுதானே!' என்று லலிதாவின் மனமே லலிதாவை இடித்துக் காட்டியது.

அவளுக்கு இப்பொழுதுகூட நினைவுக்கு வந்தது. விவாகமாகித் தில்லிக்கு வந்த மறுநாள், இதேபோல் இளம் பச்சையில் ஒரு காஷ்மீர் சில்க் புடவையை வாங்கி வந்த மூர்த்தி, ''லலிதா! இது என் அன்பளிப்பு'' என்றான். சட்டென முகத்தைத் திருப்பிக் கொண்ட அவள், ''ம்...அன்பளிப்பா, இளையாள் மோகமா? இந்தக் கருப்புப் பெண்ணுக்கு இதெல்லாம் தேவையில்லை'' என்று கொடூரமாகக் கூறியதும், மூர்த்தி அவளிடம் மன்னிப்பு கேட்டதும் இப்பொழுதும் நினைவுக்கு வந்தது. இன்றையச் சூழ்நிலையில் அதே நிகழ்ச்சியின் நினைவுச் சுழல், அவள் கண்களில் கண்ணீரை வரவழைத்தது.

சட்டென்று ஒரு எண்ணம் தோன்றியது. மூர்த்தி ஆபீஸிலிருந்து வருவதற்குள், அதே பச்சைப் புடவையை அவனுக்குப் பிடித்தபடி அணிந்து கொண்டால், ஒருகால் மீண்டும் பழையபடி பேச வருவானோ? நம்பிக்கை ஊற்று பசுமை கண்டது. தொலைத்து விட்டதாகக் கருதிய வஸ்துவை அடைய வழி புலப்படுவதுபோல் தோன்றியது. மறு நிமிஷம் அவள் உடலில் அந்தப் பச்சைப் புடவை மிளிர்ந்தது.

இரவு ஏழு மணிக்குத்தான் மூர்த்தி வீடு திரும்பினான். லலிதாவைப் பார்த்ததும் அவன் முகம் சற்றுப் பிரகாசமடைந்தது. உதட்டில் ஒரு புன்முறுவல் தோன்றியது; ஆனால் வார்த்தைகள் வெளிவரவில்லை. தன் உடுப்புகளைக் கழற்றிவிட்டு நேராகத் தன் அறைக்குச் சென்றான். பிறகு ''ரவி! எனக்கு ஒரே தலைவலியாக இருக்கிறது. எனக்குச் சாப்பாடு வேண்டாம் என்று சொல்லிவிடு'' என்றான்.

லலிதாவின் உள்ளம் துடிதுடித்தது. பச்சைப் புடவையின்மீது வைத்திருந்த நம்பிக்கையை மறந்தாள்; அவன் சமரசப் பேச்சுக்கான ஏக்கத்தை மறந்தாள். 'ஐயோ தலைவலியாமே! உடம்பு சுடுகிறதோ! ஒரு நாளும் இதுபோல் தலைவலி கூட வந்ததில்லையே! அவனைத் தொட்டுப் பார்க்கக் கைகள் துடித்தன. ஆனால் ஏதோ ஒன்று தடுத்தது. உடுத்தியிருந்த சில்க் புடவையை எடுத்து எறிந்து விட்டு ஒரு கந்தலை உடுத்திக் கொண்டாள். மூர்த்தி சாப்பிடாத சாப்பாடு அவளுக்கு வேண்டியிருக்க வில்லை. படுக்கையில் படுத்துத் திரும்பித் திரும்பிப் புரண்டாள். எப்பொழுது தூக்கம் வந்தது என்று அவளுக்கே தெரியவில்லை.

காலையில் அவள் கண் விழித்த பொழுது, பொழுது புலர்ந்து வெகு நேரமாகி யிருந்தது. லலிதாவால் எழுந்திருக்க முடிய வில்லை. உடலெல்லாம் எரிவது போல் இருந்தது. தலை பாரமாகக் கனத்தது. இரவு முழுவதும் கொந்தளித்த மனம், உடலுக்கு ஜுரத்தைக் கொடுத்து விட்டது.

இதற்குள் மூர்த்தி காப்பி தம்ளருடன் வந்தான். அதை அவள் அருகில் வைத்து விட்டு, ''ரவி! இந்தக் காப்பியைக் குடிக்கச் சொல்லு. அவளுக்கு ஜுரம் போல் இருக்கிறது. அதனால் நானே சமையலை முடித்து விட்டேன். டாக்டரை அழைத்து வருகிறேன்'' என்று கூறியவாறே வெளியே சென்று விட்டான்.

ஸ்பஷ்டமாகப் பேசத் தெரியாத குழந்தையை மையமாக வைத்துக் கொண்டு அவன் பேசிய ஒவ்வொரு வார்த்தையும் லலிதாவுக்குச் சாட்டையால் அடிப்பது போல் இருந்தது.

டாக்டர் வந்தார். பரிசோதித்து விட்டு மருந்து எழுதிக் கொடுத்தார். மூர்த்தி மருந்து வாங்கி வந்தான். பிறகு ஆபீசுக்குப் போகும்போது, ''ரவி! அடுப்பில் கஞ்சி வைத்திருக்கிறேன், குடிக்கச் சொல். வேளை தவறாமல் மருந்து குடிக்கச் சொல்லு'' என்று கூறி விட்டுச் சென்று விட்டான்.

மறுநாளும் இதே போல் நடந்தது. லலிதாவுக்கு ஜுரம் குறையவில்லை. மூர்த்தியின் போக்கு அவள் வேதனையை அதிகரித்தது.

மூன்றாம் நாள் இரவு. அசதியினால் சீக்கிரம் கண் அயர்ந்தாள் லலிதா. நடு இரவில் சற்று விழிப்பு கொடுத்தது. அறையில் அவள் கட்டிலுக்குக் கீழே ஒரு பாயில் மூர்த்தி படுத்திருப்பதைப் பார்த்ததும் அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது. இவர் எப்பொழுது என்னுடைய அறைக்கு வந்தார்?

மீண்டும் லலிதா சற்றுக் கண்களை மூடிய போது, மிருதுவான கரம் அவள் நெற்றியைத் தொட்டுப் பார்த்ததை உணர்ந்தாள். அவள் உடலில் ஒரு இன்பக் கிளர்ச்சி தோன்றியது.

நன்றாகக் கண் விழித்துப் பார்த்த போது மூர்த்தி தன் படுக்கையில் படுக்கை கொள்ளாமல் உட்கார்ந்திருப்பது தெரிந்தது. அவளுக்கு ஒரு உண்மை நன்றாகப் புலப்பட்டது. தன்னைப் போலவே அவன் மனமும் கொந்தளிப்பில் ஆழ்ந்து தவிக்கிறது. இருவரும் ஒரே நிலையில் இருக்கும் போது, இனி இருவரும் எதற்குப் போலி கௌரவம் கொண்டாட வேண்டும்? அவன் மன சஞ்சலமே அவளுக்கு ஆறுதலை அளித்தது.

சட்டென்று ஆவேசம் வந்தவள் போல் எழுந்தாள் லலிதா. ஓடிச் சென்று மூர்த்தியின் மடியில் விழுந்தாள். உள்ளத்து உணர்ச்சிகள் கரை வெடித்து வெளிப்பட, அவன் மார்பில் முகத்தைப் புதைத்துக் கொண்டு விக்கி விக்கி அழுதாள். மூர்த்தி ஸ்தம்பித்து விட்டான்.

''லலிதா...லலிதா!''

''இனி இப்படியே கூப்பிடுவீர்களா? சொல்லுங்கள், 'லலிதா, லலிதா' என்று கூப்பிட்டு என் தாகத்தைத் தணிப்பீர்களா? இனி நான் உங்களுக்கு, நீங்கள் எனக்கு.'' அதற்கு மேல் லலிதா பேசவில்லை.

தம்பதிகளின் இதயம் மேற்கொண்டு பல விஷயங்கள் பேசின. உள்ளமும் உள்ளமும் பிணைந்து விட்டபோது லலிதாவின் மனத்தில் பழி வாங்கும் எண்ணம் தோற்று ஓடியது. அவள் உள்ளத்தில் மூர்த்தி ஸ்திரமான இடம் பெற்றுவிட்டான்.



# தூய்மையான நறு மணத்திற்கு...

ஒரு பிரத்தியேக கலப்புள்ள, சருமத்திற்கு வன்மையூட்டும் தாவர எண்ணெயும், சுத்தமான மைசூர் சந்தன தைலமும் சேர்க்கப்பட்டு இருப்பதால் கடைகளில் சோப்புகளிலே மிகச் சிறந்தது கோத்ரெஜ் சந்தன சோப்பு என வழங்கப் படுகிறது.

அபரிமிதமான நுரையுடன் சருமத்திற்கு குளுமையான சுகமளிக்கிறது. இதன் தூய்மையான சுகந்தம் நாள் முழுவதும் உங்களை நறுமணம் கமழும் எழிலுடன் விளங்கச் செய்கிறது.

விலைக்கு விலை, எடைக்கு எடை, மற்றும் சிக்கனமானதும் கூட!

கோத்ரெஜ் சந்தன சோப்பில் மிருகக் கொழுப்பு கிடையாது




இப்போது புதிய கவர்ச்சி தரும் பெட்டிகளில் கிடைக்கின்றன

Godrej கோத்ரெஜ் உங்களுக்காக உயர்தர சோப்புகளை தயாரிக்கிறது
டாய்லெட்டுக்கும் - சலவைக்கும் - ஷேவரத்திற்கும்
ஹேர்டானிக், டாய்லெட் பவுடர்...

அவ்வளவு சிக்கனம்! ஒரு முறை தேய்த்தால்

# கால்கேட் டெண்டல் கிரீம்

## 85% கிருமிகளை ஒழிக்கிறது

சொத்தையும் மற்றும் துர்நாற்றமும் ஏற்படுத்தும் கிருமிகள் அவை




மிகச் சிறந்த பலனுக்கு எப்பொழுதும் உபயோகியுங்கள்!

# கால்கேட் டூத் பிரஷ்

---



## நீண்ட, அடர்ந்த ஒளிக்கூந்தலுக்கு

இளமையின் ஒளியும் அற்புத ஜ்வலிப்பும் பெற கூந்தலுக்கு கால்கேட் பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயிலை தடவுங்கள். கூந்தலின் இயற்கை அழகை அது எடுத்துக் காட்டி எல்லோரையும் பிரமிக்கச் செய்யும்.




எக்கானமி சைலை வாங்கி பணத்தை மிச்சப் படுத்துக.

# கால்கேட்

## பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில்

# பாவை விளக்கு

### அத்தியாயம் 11

## எழுத்தின் அழைப்பு

கடற்கரை மணலில் முட்டி மோதிக் கொக்கரித்த பேரலைகள் தணிகாசலம் தன் வீட்டுக்குச் சென்ற பிறகும் அவனைத் துரத்திக் கொண்டு வந்தன. படுக்கையில் படுத்து நள்ளிரவுப் போர்வைக்குள் ஒளியப் பார்த்தவனை, வெளியில் இழுத்து வந்து துரும்பாகத் தங்கள் மடியில் போட்டுக் கொண்டு, அவை இங்குமங்கும் இழுத்தடித்தன. 'அவள் கொடுத்த அந்தக் கற்பனை எங்கே? ஏன் அதை நீ ஒளித்து வைத்திருக்கிறாய்? அவளுக்கு நீ தகுதியானவன் இல்லை என்றால் அதை வெளிப்படையாய்ச் சொல்லி விடுவதுதானே? உண்மையை மறைத்து வெளி வேஷம் போடாதே! சொல்லி விடு; உமாவிடம் சொல்லி விடு! நீ இந்த உலகத்தின் சாதாரண ஆசாபாசங்களில் முழுகியவன் என்பதையும், உனக்கு மனைவியான பிறகு அவள் மன வாழ்வு வாழ முடியாதென்பதையும் சொல்லிவிடு!'

தணிகாசலம் உமாவுக்கு ஒரு நீண்ட கடிதமாக அந்தக் கற்பனையை எழுதினான். அந்தக் கடிதத்தில் என்ன விலாசத்தை எழுதுவது? அதை எப்படி அவளிடம் அனுப்புவது?—இந்தக் கவலை அவனுக்கு அதை எழுதும் போது தோன்றவில்லை. எழுதுகிற ஒவ்வொரு எழுத்தும் எங்கேயோ கண்காணாத இடத்தில் ஒளிந்து கொண்டிருக்கும் உமாவின் உள்ளத்தில் பதிந்து விடப் போகிறது என்று அவனுக்கொரு நம்பிக்கை. உயிரில்லாத வானொலிப் பெட்டி எங்கோ பேசுவதை வேறு எங்கோ ஒலிபரப்பும் போது, உயிருள்ள மனத்துக்கு இந்த வலிமை கூடக் கிடையாதா? பிசிராந்தையார் என்ற ஒரு மனிதர் பழந்தமிழ் நாட்டில் இருந்தாராமே? முன்பின் செய்தி இல்லாமலே தம்முடைய நண்பரின் மரணத் தறுவாயில் அவரைக் காண ஓடோடியும் வந்தாராமே? அந்த நிகழ்ச்சி ஒரு போதும் பொய்யாக இருக்க முடியாது. இந்த எழுத்துக்களுக்கு வலிமையிருந்தால் அவள் உள்ளத்தில் போய்த் தைக்கட்டும். அவளுடைய அமைதியைக் குலைக்கட்டும். அவளை இங்கே ஓடி வரச் செய்யட்டும்......

இரவைப் பகலாக்கி அதை 'எழுதி முடித்த பிறகு, பகலில் அதைத் திரும்பவும் தனக்குத்தானே படித்துப் பார்த்தான். வெறி பிடித்த மனிதனின் உளறல்களைப் போலச் சொற்கள் கட்டுக்கடங்காமல் சீறிப் பாய்ந்து கொண்டிருந்தன. அது கடிதமாகவும் இல்லை, கதையாகவும் இல்லை, கட்டுரையாகவும் இல்லை, ஏதோ ஒரு கதம்பக்



கூத்து. செங்கமலத்தின் பம்பாய் நடனம் போல், எழுத்துக்கள் உணர்ச்சித் திவலை களைப் பரப்பி நடனம் புரிந்தன. மறு முறை படிப்பதற்குப் பயந்து கொண்டு, தனக்குள்ளே உள்ள மற்றொரு மனிதனை நேருக்கு நேர் சந்திப்பதற்கு வெட்கப்பட்டுக் கொண்டு, பேசாமல் அதை மடித்து மேசைக்குள் தள்ளினன். 'நல்லவேளை! கதை என்ற பெயரில் வாசகர்களுக்கு இதைப் படிக்கும் துர்ப் பாக்கியம் ஏற்பட வேண்டாம். வாசகர்கள் என்ன பாவம் செய்தார்கள், என் துன்பச் சுமையை அவர்கள் தலை களில் சுமந்துவதற்கு?'

வழக்கம்போல் உமாவைத் தேடும் படலம் மறு பக்கத்தில் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருந்தது. பம் பாய்த் தோழி கொடுத்த விலாசங்களில் உமா இல்லை. சந்திரசேகரன் அங்கெல் லாம் போய் அலைந்து விட்டு வெறுங் கையுடன் திரும்பி வந்தார். தணிகா சலமும் தனக்குத் தோன்றிய ஊர்களுக் குச் சென்று வந்தான்.

'வெளி ஊர்களுக்கு அவள் சென்றிருப் பாளா?' என்ற நினைவே இப்போது சந்தேகத்துக்கு வந்து விட்டது. 'லட்சக்கணக்கான மனிதர்கள் கூட்டங் கூட்டமாய் அலைமோதும் இந்தச் சென்னை நகரத்துக்குள் ஏதாவது ஒரு தெருவில் அவள் இருக்கமாட்டாளென் பது என்ன நிச்சயம்? எனக்குத் தெரியா மல் ஒளிந்துகொண்டு என்னைக் கண் காணித்து வரும் தெய்வீகமாக அவள் ஏன் மாறி யிருக்கக் கூடாது? எந்த நேரமும் ஏதோ இரண்டு கண்கள் என்னை மறைவிலிருந்து பார்த்து வரு வதுபோல் உள்ளுணர்ச்சி சொல்கிறதே! இந்தக் கண்கள் பொல்லாத கண்கள்; வட துருவத்தின் பனிப் பாறைகளுக்குப் பின்னே இருந்து கொண்டு கூடக் கவனிக்கக் கூடிய கண்கள்!

தணிகாசலம் சும்மா யிருக்க வில்லை. சென்னை நகரத்து தெருக்களில் அவ ளைச் சல்லடை போட்டுச் சலித்தெடுத்தான். கடைத்தெருக்கள், நடை பாதைகள், மோட்டார்கள், மின் வண்டிகள், கடற்கரை இவ்வெல்லாம் இடித்துப் புடைத்துக் கொண்டு புறங் கும் கூட்டத்தில் உமாவைக் காணோம். நடைபாதைகளில் கலகலவென்று சிரித் துக் கொண்டு துள்ளல் நடைபயிலும் மங்கையர் கூட்டங்களிடையிலோ, தனி மையில் விரைந்து செல்லும் யுவதி களில் ஒருத்தியாகவோ உமா இல்லை. தூரத்துப் பார்வைக்கு உமாவைப் போல் தோற்றமளித்த பெண்கள் சிலர் அருகில் போய்ப் பார்த்தவுடன் அவ னுக்கு ஏமாற்றமே தந்தனர்.

குமாரசாமி ஒருநாள் செங்கமலத்தை அழைத்துக் கொண்டு தம்முடைய மக னோடு அவனைப் பார்க்க வந்திருந்தார். செங்கமலத்தின் முகத்தில் அன்றலர்ந்த செந்தாமரையின் சிரிப்பு குடிகொண் டிருந்தது. மிடுக்கு நடையுடன் வந்த அவள், மகனின் கையைப் பிடித்துக் கொண்டு, மறைக்க முடியாத மகிழ்ச்சிப் பெருக்குடன் வீட்டுக்குள் நுழைந்தாள். தணிகாசலத்தைப் பார்த்த அவள் கண் களில் நன்றி சுரந்து சொட்டியது. அவனுக்குக் கைகூப்பி விட்டு, கல்யாணி அம்மாளிடம் சென்று, "உங்கள் மகனல் தானம்மா என் மகனுக்கு அவன் அப்பா கிடைத்தார். அண்ணு ஏற்றி வைத்த விளக்கு என்னுடைய மறு வாழ்வு'' என்று தன்னுடைய தொண்டையடைக் கக் கூறினள் செங்கமலம்.

அவளும் அவள் கணவனும் தணிகா சலத்தின் பொருளாதார நிலை பற்றித் தங்களுக்குள் பேசிக்கொண்டு வந்திருப் பார்கள் போல் தோன்றியது. வீட்டுக் குள் வளைந்து சென்ற செங்கமலம் தன் கூரிய கண்களால், இலக்கியப் பணி என்ற பொன்னடைக்குள்ளே விற் றிருந்த பற்றாக்குறை என்ற எலும்புக் கூட்டைக் கண்டு கொண்டாள். வெளி உலகத்து மனிதர்களிடம் வெளிச்சம் போடலாம்; விதி, தன்னிடம் இருப் பதையும் இல்லாததையும் பளிச்சென்று காட்டி விடுமே! "என் வீட்டுக்கார ருடைய ஒரு நாள் செலவு கூட உங்க ளுக்கு மாத வருமானமாய் வராது போலிருக்கிறதே!'' என்று கல்யாணி அம்மாளிடம் கேட்டாள் செங்கமலம். "எங்களை விட எத்தனையோ பேர்கள்





அவதிப் படுகிறார்கள்'' என்று அவனுக்குப் பதில் வந்தது.

குமாரசாமியும் அவனை விடவில்லை ''இதுவரையில் எங்களிடமிருந்து ஒதுங்கி நின்று குறை கூறினீர்கள்; இனிமேல் உடனிருந்து உழைத்து வளர்ச்சி தேடுங்கள்!'' என்றார். ''இதுவும் கலைத் தொழில்தான்; இலக்கியத்துக்கும் இதற்குமே சேர்ந்து வேலை செய்யலாம். இன்றைக்கே இரும்புத் தொழிற்சாலையை விட்டு விலகிக்கொள்ளுங்கள். அந்த நேரத்தை இதற்குச் செலவிடலாமல்லவா?''

வட' நாட்டிலும் மேலை நாடுகளிலும் பல எழுத்தாளர்கள் இப்படி வாழ்வதைக் கண்ட தணிகாசலம், குமாரசாமியின் யோசனையை ஏற்றுக் கொண்டான். தன்னைத்தானே கவனித்துக் கொள்ளாத எழுத்தாளர்கள் சிலரை இந்த நாடு குப்புறத் தள்ளியது அவனுக்கு எச்சரிக்கையாக விளங்கியது. அவர்களுடைய எழுத்துக்கும் கருத்துக்கும் கூட இங்கு ஆதரவு கிடைப்பதில்லை. திரு வி. க வும், பாரதியாரும் என்ன ஆனார்கள்?

பொனுடஷா தமிழ் நாட்டில் பிறந்திருந்தால் ஒன்று, பட்டினியால் செத்துப் போயிருப்பார்; அல்லது குமாஸ்தாவாக மாறிப் பழைய 'பைல்'களுக்குத் தமது மூளையைக் குத்தகைக்கு விட்டிருப்பார். அரசியலுக்கும் இலக்கியத்துக்கும் வேற்றுமை தெரியாத இளைஞர்களையும், பழைய தமிழுக்குப் பின் தமிழ் செத்துப் போய்விட்டதென்று பெரு

மூச்சுவிடும் முதியவர்களையும் கொண்ட நாடு இது. 'இலக்கியத்தைப் படிக்கும் முறை எது? படித்துப் பலனடைவது எப்படி?' என்று ஒரு தமிழ் நூலைக் கூடக் கல்லூரிகளில் பாடமாக வைக்காதவர்கள் தமிழ் வளர்க்கிறார்களாம், தமிழ்!

இந்த நாட்டை வளர்ப்பதிலும் தேய்ப்பதிலும் பங்கு கொண்டுள்ள பல சக்திகளின் இடைவிடாப் போராட்டத்தைத் தணிகாசலம் சீர்தூக்கிப் பார்த்தான். திரையுலகமும் மனிதர்களின் அன்றாட வாழ்வில் கலந்துவிட்ட ஓர் மாபெரும் சக்தி என்பதை அவனால் புறக்கணிக்க முடியவில்லை. அந்தச் சக்தியின் அழைப்பை அவன் தாராளமாக ஏற்றுக் கொண்டான்.

'வீட்டுக்கொரு நூல் நிலையம் வேண்டும்' என்ற தன் ஆவலை, முதன் முதலில் தன்வரையில் தீர்த்துக் கொண்டான் தணிகாசலம். குமாரசாமி கொடுத்த பணத்தில் ஒரு பாதி புதிய புத்தகங்களுக்கும் புத்தக அலமாரிகளுக்கும் சென்றது. அவனுடைய அறையில் திரும்பிய பக்கமெல்லாம் கவிஞர்களும், இலக்கிய ஆசிரியர்களும், சிந்தனையாளர்களும் செருக்குடன் வீற்றிருந்தார்கள். பெட்டி நிறையத் தங்க நாணயங்களைக் கண்டு மகிழும் கஞ்சனின் மன நிலை அவனுக்கு.—கொடுக்கக் கொடுக்க வளரும் செல்வங்கள் அவை.

"இவ்வளவையும் நீங்கள் எந்தக் காலத்தில் படித்து முடிக்கப் போகிறீர்கள்?" என்று கேட்டாள் கௌரி.

"இந்த இடத்துக்கு வந்தாலே எனக்குப் பணிவும் பண்பும் நினைவுக்கு வருகின்றன. என்னுடைய அறியாமையை உணரும் இடம் இது. என்னால் படிக்க முடியாவிட்டால் கூட நம்முடைய பையன் பரமசிவம் இவற்றைப் படித்துப் பார்ப்பானல்லவா?"

"பணத்தைப் பாழாக்குகிறீர்கள்" என்றாள் கௌரி.

"இன்னும் பணம் வந்தால் ஊருக்கு ஒரு நூல் நிலையம் ஏற்படுத்துவேன்!"

"மனக் கோட்டைகள் போதும்; முதலில் பிழைக்கிற வழியைப் பாருங்கள்" என்றாள் கௌரி.

'பிழைக்கத் தெரிந்தவர்களால் என்றைக்குமே உலகம் உருப்பட்டதில்லை; பிழைக்கத் தெரியாதவர்களால்தான் உலகம் இன்னும் சாகாமல் இருக்கிறது' என்று நினைத்துக் கொண்டு, கம்பீரமாக அந்த அறைக்குள் சுற்றி வந்தான் தணிகாசலம். மிகப் பெரிய சிந்தனையாளர்களுக்கு மத்தியிலிருக்கும் பெருமிதம் அவனை ஆட்கொண்டது. திடீரென்று அவன் உமாவை நினைத்துக் கொண்டான். 'இந்தக் காட்சியைக் கண்டு எவள் பரவசப்பட வேண்டுமோ, அவள் இங்கு இல்லையே!'

தணிகாசலத்துக்கு அப்பொழுது கதறி அழவேண்டும் போலிருந்தது. முதன் முறை பசுபதியால் ஏற்பட்ட ஏமாற்றத்தின்போது அவள் அருகில் இருந்தாள். பல துன்பங்களும், தொல்லைகளும் வறுமையும் அவனை வாட்டியபோது அவள் அருகில் இருந்தாள். இன்னலைப் பகிர்ந்து கொண்டவள் நன்மையைக் காண இப்போது அருகில் இல்லை. தோல்வியின் சுமைதாங்கியாக நின்றவள் வெற்றிக்கு இன்று வாழ்த்துக் கூற வேண்டாமா? வறுமையைக் கண்டு கண்ணீர் வடித்தவள், செல்வத்தை வரவேற்பதற்கு இல்லாமல் எங்கே போய் விட்டாள்?

'உமா! அன்றைக்கு உன்னிடம் செங்கமலத்தால் ஏற்பட்ட ஏமாற்றத்தைச் சொல்லி அழுதேன். இன்றைக்கு அவள் கொடுத்த பணத்தால் இந்த அறை முழுவதும் புத்தகங்களாய் நிரம்பியிருக்கின்றன. ஓடி வந்து இத்தனை புத்தகங்களையும் உன் கையால் எடுத்துப் பார்! ஒரே ஒரு புத்தகத்தை எனக்காகப் படித்துக் காட்டு! சொற்களைத் தனித்தனியே உயிர் கூட்டி உச்சரிக்கும் உன் குரலை இனி நான் என்று கேட்கப் போகிறேன்!'

இந்த நேரம் பார்த்து உமாவின் அப்பா அங்கு வந்து சேர்ந்தார். அவர் முகத்தை ஏறிட்டுப் பார்த்தவுடன் ஏற்கெனவே இருந்த கலக்கம் அவனுக்கு இரு மடங்காயிற்று. பேராசிரியர் அவனுடைய படிப்பு அறையைச் சுற்றிப் பார்த்துப் பாராட்டவில்லை. ஓடிப் போய்ப் புத்தகங்களை எடுத்துப் புரட்டவில்லை. மற்றச் சமயங்களாக இருந்திருந்தால் துள்ளிக் குதித்திருப்பார்.

"குழந்தை உயிரோடிருக்கிறாளா அல்லது செத்துப் போய் விட்டாளா என்று தெரியவில்லை."

தணிகாசலம் வேறு பக்கம் தன் முகத்தைத் திருப்பிக் கொண்டான். கிணற்றுக்குள்ளிருந்து பேசுவது போல் அவர் குரல் ஒலித்தது. "கடைசி கடைசியாக ஒருயோசனைக்கு வந்திருக்கிறேன்; அதையும் செய்து பார்த்து விட்டுக் கையைக் கழுவிவிட வேண்டியதுதான்" என்று கூறினார் அவர்.

"என்ன?"

"இந்தாருங்கள்" என்று உமாவின் புகைப்படம் ஒன்றையும், கையால் எழுதிய விளம்பரம் ஒன்றையும் அவனிடம் கொடுத்தார். "இதை நீங்கள் கதை எழுதும் பத்திரிகையில் கதைக்கு அடுத்தாற்போல் போடச் சொல்லுங்கள். இதற்கும் அவளோ அவள்

கடிதமோ வராவிட்டால்...அப்புறம்... அப்புறம்.........''

விக்கி விக்கி அழுதார் பேராசிரியர். உமா செத்துப் போய் விட்டாளோ என்ற சந்தேகம் அவர் மனத்தில்விழுந்து விட்டது. விளம்பரத்தில், அவளை உடனே வரச் சொல்லியும், வந்த பிறகு அவள் மனம் போல் தாராளமாக வாழலாம் என்றும் குறிப்பிட்டிருந்தார்.

''இப்படி விளம்பரம் செய்தால் நாலு பேர்கள் நாலு விதமாக நினைப்பார்களே என்று தயங்கினேன். இனித் தயங்கிப் புண்ணியமில்லை. யார் எப்படி நினைத்தால் என்ன?''

''வேண்டாம்; விளம்பரம் போட வேண்டாம்'' என்று தடுத்தான் தணிகாசலம். ''உமாவின் பெயர் சாதாரண மனிதர்களால் தூற்றக் கூடிய பெயரில்லை. தன் முதுகு தனக்குத் தெரியாத மந்தைக் கூட்டம் இந்த மனிதர்க் கூட்டம். ஒவ்வொரு ஆணும்பெண்ணும் தாங்கள் செய்யும் காரியங்களைத் தவிர, மற்றவர்கள் செய்வதெல்லாமே அக்கிரமம் என்று சாதிப்பவர்கள்.''

தணிகாசலம் பிறகு மௌனமாக யோசனை செய்து, ''எனக்காக இன்னும் சில வாரங்கள் பொறுத்துக் கொள்ளுங்கள்'' என்று சொல்லி அவரைத் தேற்றி அனுப்பி வைத்தான்.

'பளிச்'சென்று அவன் மனத்தில் ஓர் மின்னல் வெட்டியது. முன்பொரு நாள் நள்ளிரவில் எழுதிப் போட்ட கதம்பக் குறிப்பை எடுத்துப் படித்தான். 'வீண் பழி அவருக்கு எதற்கு? அதை நானே சுமந்திக் கொள்ளுகிறேன்' என்று முடிவு செய்து, அதற்கு ஒரு முன்னுரையும் எழுதினான்.

'என் வாசகர்களுக்காக இதை எழுதவில்லை. இந்த நாட்டில் எங்கோ ஒரு இடத்தில் ஒளிந்து கொண்டிருக்கும் ஒரே ஒருத்திக்காக மட்டும் எழுதுகிறேன். அவள் உயிருடன் இருந்தால் இதைப் படித்து விட்டு என்னிடம் திரும்பி வரட்டும். வாசகர்கள் என்னை மன்னித்துக் கொள்ள வேண்டும்.'

இந்த முன்னுரைக்கு அடுத்தாற்போல் அந்தக் 'கதை' ஒரே உளறல் மயமாக இருந்தது. சொற்கள் எதற்கும் கட்டுப்படவில்லை. உணர்ச்சிப் பேரலைகள் அங்கே உறுமிக் குமுறின. பத்திரிகாசிரியருக்கு இதை எந்தப் பகுதியில் வெளியிடுவதென்றே விளங்கவில்லை. கதையா, கட்டுரையா, கடிதமா, உரைநடையா, உரைநடைக் கவிதையா, உளறலா?

''சந்தனக் கட்டையை நறுக்கி நான் அடுப்பில் போட்டுச் சாம்பலாக்க மாட்டேன். கல்யாணமும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம். உன்னுடைய மனத்தின் மணம் எனக்குப் போதும். உடனே ஓடி வா'' என்று முடித்திருந்தான்.

பத்திரிகாசிரியர் அதைத் தட்ட முடியாமல் வாங்கிக் கொண்டு, ''உங்களுக்காக இதை வெளியிடப் போகிறேன்; இதில் எனக்கு ஒன்றும் புரியவில்லை'' என்று கூறினார்.

''இரண்டு பேருக்குப் புரியும்'' என்றான் தணிகாசலம்.

''உங்களுக்கும் கடவுளுக்குமா?'' என்று கேட்டு விட்டுச் சிரித்தார் அவர். ''இப்படித்தான் மேல் நாட்டில் உங்களைப் போல் ஒரு எழுத்தாளர் இரண்டு பேருக்கு மட்டும்—அவருக்கும் கடவுளுக்கும் மட்டும், புரியக் கூடிய கட்டுரை ஒன்று எழுதினாராம். எழுதும் வேளையில் இருவருக்குமே புரியும் என்றிருந்த நம்பிக்கை, அதை எழுதி முடித்தவுடன் அவருக்குப் போய் விட்டதாம். எழுதிய ஆசிரியருக்கே அது புரியவில்லை. கடவுளுக்கும் அது புரிந்திருக்குமோ என்னவோ, தெரியவில்லை?''



விளம்பரத் தொகை என்று அவர் கேட்காத வரையில், அவர் என்ன கேலி செய்தாலும் சரி என்று பொறுத்துக் கொண்டிருந்தான் தணிகாசலம். எப்படியாவது பிரசுரமானால் போதும்.

கதையும் வெளிவந்துவிட்டது. எந்தக் கதைக்கும் வராத அளவுக்குப் பாராட்டுக் கடிதங்கள் வந்து குவிந்தன. ஆசிரியரும் வாசகர்களுடன் சேர்ந்து கொண்டு அவனைப் பாராட்டத் தயங்கவில்லை.

ஆனால் உமாவிடமிருந்து அதற்குப் பாராட்டும் வரவில்லை; பழிப்பும் வரவில்லை. அதை அவள் படித்தாளா இல்லையா என்பதும் தெரியவில்லை. உயிருடன் இருந்தால் அவள் படிக்காமல் இருந்திருக்க மாட்டாள்.

கண்ணபுரத்திலிருந்து தேவகி அந்தக் கதையைக் கண்டித்துக் காரசாரமாக

ஒரு கடிதம் எழுதியிருந்தாள்: "கதையா அது? வெறும் பிதற்றல்! உனக்குச் சிறிதாவது சொந்த புத்தி இருந்திருந்தால் நீ அதை எழுதியிருக்க மாட்டாய். உன்னை அதற்காக நேரில் என் கோபம் தீரத் திட்ட வேண்டும். உடனே புறப்பட்டு வா; நாளைக்குச் சாயங்காலம் நீ பட்டணத்தி லிருந்து புறப்படுகிறாய். வேறு எந்தச் சாக்குப் போக்கும் என்னிடம் வேண்டாம். இதைத் தந்தி என்று நினைத்துக் கொள்."

தேவகி எழுதியதுதான் உண்மை என்று அவனுக்குத்தோன்றியது. கண்ணபுரத்துக்கு உடனே கிளம்பினான்.

## அத்தியாயம் 12

# இலக்கியத்தின் சிகரத்தில்

கண்ணபுரம் ரயிலடிக்குத் தேவகி வந்து காத்து நிற்பாள் என்று தணிகாசலம் எதிர்பார்க்கவில்லை. வழக்கமாக வீட்டை விட்டு வெளியில் வராதவள் அவள். தணிகாசலத்துக்கும் அந்த ஊரோ, அவள் வீடோ புதியவையல்ல. பிறகு எதற்காகத் தேவகி அங்கு தனியாக வந்து நிற்க வேண்டும்? தணிகாசலம் தன் பெயரைச் சொல்லி யாரோ அழைத்ததைக் கண்டு திரும்பிப் பார்த்தான். பிளாட்பாரத்து மரத்தடியில் ஒதுங்கி நின்று கொண்டு அவனைத் தேவகி கூப்பிட்டாள். சுப்பையாவின் மகனைக்கூட அவள் துணைக்கு அழைத்து வரவில்லை. ஒரு வேளை பையன் பள்ளிக்கூடத்துக்குப் போயிருக்கலாம்.

"எனக்கு வீடு தெரியாதா என்ன? நீங்கள் எதற்காக இங்கே வந்தீர்கள்?" என்று கேட்டான். தேவகி பதிலளிக்கவில்லை. தனக்குள் சிரித்துக்கொண்டாள்.

அவன் கடிதத்தைக் கண்டதிலிருந்து அவனை வாட்டி வதைத்து வந்த முக்கியமான கேள்வி, அடுத்தாற்போல் அவன் தொண்டை வரையில் வந்து விட்டு, அதே இடத்தில் நின்றது. 'உமா இங்கேதான் இருக்கிறாளா?' இதை அவன் அவளிடம் வாய் திறந்து கேட்கவில்லை. ரயிலில் வரும்போது முதன் முதலாகத் தேவகியிடம் இதைத்தான் அவன் கேட்க வேண்டுமென்று எண்ணி யிருந்தான். எண்ணம் மாறி விட்டது. உமா அங்கே இருந்திருந்தால் ரயிலடிக்குத் தேவகியுடன் வராமல் இருக்க மாட்டாள். திடீரென்று கேள்வி கேட்கப் போய், தேவகியும் தனக்குத் தெரியாதென்று கைவிரித்து விட்டால், அந்த ஏமாற்றத்தைத் தாங்கும் தெம்பு அவனிடம் சிறிதும் இல்லை. வீட்டுக்குப் போய்ச் சேர்ந்த பிறகு பேசிக் கொள்ளலாம் என்று அவன் தன் மனத்தை அடக்கிக் கொண்டான்.

தேவகியும் உமாவின் பேச்சை எடுக்கவில்லை. பட்டணத்தில் குடும்ப நலனை விசாரித்தாள். பையன் பரமசிவத்தைக் கேட்டாள். அந்த ஒரு விஷயத்தைத் தவிர வேறு எதையெல்லாமோ பேசினாள். அவனுடைய கதையைப் படித்து விட்டு, அதற்காக நேரில் திட்டவேண்டுமென்று அழைத்தவள் அதையும் செய்யவில்லை. ஒருவனைக் கோபித்துக்கொள்வதற்காகவா சென்னையிலிருந்து கண்ணபுரத்துக்குப் புறப்பட்டு வரச் சொல்லியிருப்பாள்?

தணிகாசலத்துக்கு எரிச்சல் வந்தது. "வாருங்கள், போகலாம்" என்று வெளியில் அழைத்தான்.

"பொறு; கூட்டம் கலைந்த பிறகு கடைசியில் போவோம்." அங்கு கிடந்த மரப் பெஞ்சியில் உட்கார்ந்து கொண்டு, அவனையும் உட்காரச் சொன்னாள் தேவகி. பிறகு, "நாங்கள் எல்லோரும் பட்டணத்துக்கே குடிவந்து விடப்போகிறோம்" என்றாள். "அண்ணாவைச் சிக்கிரத்தில் பட்டணத்துக்கு மாற்றப் போகிறார்களாம். உத்தரவு இன்னும் வரவில்லை. எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார். சமஸ்தானந்தான் தனியாக இல்லாமல் இப்போது சென்னையுடன் இணைந்து விட்டதே?"

'உமா பட்டணத்துக்கு வருவாளா?' என்ற துடிப்புடன் இருந்தவனுக்கு இந்தச் செய்தி அவ்வளவு உற்சாகம் தரவில்லை. என்றாலும், "வந்து சேருங்கள்; நானும் வீடு பார்க்கிறேன்" என்றான்.

"அப்புறம் இன்னொரு விஷயம்: என் சொத்துக்களை உயில் எழுதி வைத்து விட்டேன். என் அண்ணா மகனுக்குப் பாதி; என் தம்பி மகன் பரமசிவத்துக்குப் பாதி; என்ன, நான் சொல்வது புரிகிறதா? உன்னுடைய மகனுக்குப் பாதிச் சொத்து."

"ஒரு சொத்தும் அவனுக்கு வேண்டாம்" என்றான் தணிகாசலம். "எனக்கு யாரும் சொத்து வைத்துவிட்டுப் போகவில்லை; அவனுக்கு மட்டும் சொத்து எதற்கு?" என்று கேட்டான்.

"நீ யார் அதைச் சொல்வதற்கு?" என்று கேட்டாள் தேவகி. தணிகாசலத்தின் எரிச்சல் அதிகமாகியது. அதைக் கண்ட தேவகி, "வேண்டாம்; ரயிலடி

# போர்ஹான்ஸ்

## டூத்பேஸ்ட்

## அநேக முக்கிய விதங்களில் மேம்பட்டது!

**1 ஈறுகளுக்குச் சிறந்தது :** ரத்தம் கசியும் ஈறுகள், வீங்கிய ஈறுகள், புண்ணானதும், கூசும் ஈறுகள் இவைகளுக்கு போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் கொண்டு இலேசாக தேய்க்கவேண்டும். அவைகள் உடனேயே கெட்டியான ஆரோக்கிய நிலைக்கு வந்துவிடும். போர்ஹான்ஸ் டூத்பேஸ்டில் மட்டுமே, டாக்டர் ஆர். ஜே. போர்ஹான்ஸ் பக்குவப்படுத்திய பல நோய்களிலிருந்து விசேஷ பாதுகாப்பு அளிக்கும் துவர்ப்புப் பொருள்கள் சேர்ந்துள்ளன. இதனால்தான் போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட், ஈறுகள் சம்பந்தமான கொடிய நோய்களிலிருந்து சிறந்த பாதுகாப்பு அளிக்கும்.

**2 பற்களுக்குச் சிறந்தது :** விசேஷ துவர்ப்புப் பொருள் கொண்ட போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் கொண்டு அன்றாடம் பல் விளக்கினால், சொத்தைக்கு காரணமான கிருமிகள் முற்றிலும் அழிந்துவிடும். இந்தியாவில் சமீபத்தில் நடைபெற்ற போர்ஹான்ஸ் போட்டியில், திடமாயும், ஆரோக்கியமாயும் பற்களுள்ள 45-லிருந்து 93-வயதிற்குட்பட்டவர்களும் கலந்து கொண்டனர். தங்களுடைய பற்களின் சிறப்பிற்கு, தாங்கள் அன்றாடம் தவறாமல் போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் உபயோகித்து வருவதே காரணமென அவர்கள் யாவரும் கூறினர்.

**3 வாய்க்கு மணமூட்டுவதில் சிறந்தது :** போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட், வாய் நாற்றத்தை அகற்றி உங்கள் வாயை முற்றிலும் சுத்தமாக வைக்கும். வாய்க்கு நறுமணமூட்ட உங்கள் நாக்கும், மேல்வாயும் கூட சுத்தமாக இருக்கவேண்டும் என்பதை ஞாபகத்தில் வையுங்கள். உங்கள் நாக்கின் மீது சிறிது போர்ஹான்ஸ் டூத்பேஸ்டை வைத்து, ஒரு டூத்பிரஷ் அல்லது விரலினால் மிருதுவாய் குழப்பவும். போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் உணவுத்துணுக்குகள் மற்றும் கிருமிகளை விரைவில் அகற்றும்.

**4 உங்கள் புன்னகையை எடுத்துக் காட்டுகிறது :** போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட், பற்களின் எனாமல் சிதைய விடாமல், பற்களை அவைகளின் இயற்கை நிலையில் வைப்பதுபோல சுத்திகரிக்கும் குணம் வாய்ந்த வழுவழுப்பான டூத்பேஸ்டாகும். பற்களின் ஆரோக்கியத்தை தவறாமல் பேணி வருவதன் மூலம் உங்கள் புன்னகையை ஒளி வீசச் செய்யலாம். போர்ஹான்ஸ் டூத்பேஸ்டைத் தவறாமல் உபயோகியுங்கள்.




ஒரு பல் வைத்தியரால்
தயாரிக்கப்பட்டது

GEOFFREY MANNERS & CO.
PRIVATE LTD.

H 115

யில் நின்று கொண்டு நீ என்னிடம் சண்டைக்கு வராதே; வா, வீட்டுக்குப் போவோம்'' என்றாள்.

அவள் கொண்டு வந்திருந்த ஒற்றை மாட்டு வண்டி மாதத்துக்குக் காதவழி போகிற வண்டி. ஆமை வேகத்தில் அது நகர்ந்தது. அதில் ஏறிக்கொண்டவுடன், ''என்னை எதற்கு இவ்வளவு அவசரமாய் இங்கே வரவழைத்தீர்கள்?'' என்று அவளிடம் கேட்டான்.

''வீட்டுக்குப் போனவுடன் அதற்குப் பதில் சொல்கிறேன்.''

அதற்குமேல் அவனுக்குத் தாங்கவில்லை. ''எங்கே சொன்னால் என்ன? உமா எங்கே இருக்கிறாள்?''

தேவகி திடுக்கிட்டு விழித்தாள். அவன் குரலில் இருந்த கடுமை அவளைக் கலக்கி விட்டது.

''என்ன அக்கா விழிக்கிறீர்கள்? உமா இருக்கும் இடம் உங்களுக்குத் தெரியுமா, தெரியாதா?''

''தெரியும்!'' வண்டி 'டங்' கென்று அவன் தலையில் மோதியது.

''முன்பே தெரியுமா? அல்லது இப்போதுதான் தெரியுமா?''

''பட்டணத்தை விட்டு வந்ததிலிருந்து அவள் என்னிடந்தான் இருக்கிறாள்.''

தணிகாசலத்தின் உதடுகள் துடித்தன. ''நீங்கள் கூட எனக்குப் பொய்க் கடிதம் எழுதினால் நான் இந்த உலகத்தில் யாரை நம்புவது?''

அவன் முகத்தைப் பார்ப்பதற்குப் பயந்து கொண்டு தேவகி தலை கவிழ்ந்தாள். அது மாத்திரம் வண்டியாக இல்லாவிட்டால் அவன் தன் மனம் போனபடி கத்தித் தீர்த்திருப்பான். விழிகள் இரண்டும் தேவகியைக் கொன்று கொண்டிருந்தன. ''பொய்! பொய்! எவ்வளவு மோசமான பொய்! நீங்களா மனம் துணிந்து இவ்வாறு பொய் சொல்வது?''

வண்டி பள்ளத்தில் இறங்கியதால் மறுமுறையும் தணிகாசலத்தின் தலையை அது பதம் பார்த்து விட்டது. பேசா மடந்தையாக வீற்றிருந்த தேவகியிடம், ''நீங்கள் மெதுவாய் இந்த வண்டியில் வந்து சேருங்கள்; நான் இறங்கி ஓடப் போகிறேன்'' என்று கூறி அவன் கீழே குதிக்கப் போனான்.

தேவகியின் கரங்கள் அவனைத் தடுத்தன. ''இன்னும் நீ சிறு பிள்ளைதான்; உனக்கு நிதானமே கிடையாது. தெருவில் இறங்கி ஓட உனக்கென்ன பைத்தியமா?''

''ஏன் அவள் உங்களுடன் ரயிலடிக்கு வரவில்லை?'' என்று கேட்டான்.

'நீ வரப் போவது அவளுக்குத் தெரியாது'' என்றாள் தேவகி.

''தெரியாதா! இதிலென்ன ரகசியம்? ஒரு பொய்யை மறைப்பதற்கு ஒன்பது பொய்யா?''

''ஆமாம்; பொய் சொல்வதால் யாருக்காவது கஷ்டத்தைக் குறைக்க முடிந்தால், அதையும் சொல்லித்தான் தீர வேண்டும். வழியில் என்னிடம் சண்டை போடாதே. வீட்டுக்கு வந்து உன்னுடைய கண்களால் நடப்பதைத் தெரிந்து கொண்டு, பிறகு என்னை நீ கொன்று போட்டாலும் சரி.''

''நீங்கள்தான் என்னை உங்கள் கடிதத்தால் உயிரோடு வதைத்து விட்டீர்கள். அவளை ஒளித்து வைத்துக் கொண்டே இல்லை என்று எழுதலாமா?''

''வேண்டுமென்றுதான் மறைத்தேன். எனக்கு உன்னிடமுள்ள பாசத்தால்தான் அந்தப் பொய்யைச் சொன்னேன்.



அவள் என்னைத் தேடிக்கொண்டு வந்த நிலையில், அவள் இருப்பிடம் உனக்குத் தெரிந்தாலும் அவள் அப்பாவுக்குத் தெரியக் கூடாது. அப்பா என்ற சொல்லையே அவள் வெறுத்தாள். நீயும் அவரும் ஒரே இடத்தில் இருக்கிறீர்கள். உனக்கு மட்டும் சொல்லி, உன் வாயால் அவரிடம் பொய் சொல்லத் தூண்ட வேண்டுமா? உனக்கு எதற்கு அந்த வீண் பழி? ஒரே பழியாய் அது என் தலையில் விடிந்தால் போதுமென்று நினைத்தேன். இப்போது என்னைத்தானே உமாவின் வீட்டார்கள் தூற்றுவார்கள்? உன்னைத் தூற்ற மாட்டார்களே!''

தணிகாசலம், அது வீடாக இருந்திருந்தால், அவள் கால்களில் விழுந்து மன்னிப்பு கோரியிருப்பான். அவனுக்கு அவள் உதவிகள் செய்தது பெரிதல்ல; உமாவுக்குப் புகலிடம் தந்தது

கூடப் பெரிதல்ல; அவனுடைய பழி பாவத்தைச் சுமந்து கொண்டு விட்டாளே! அவனுக்குக் கெட்ட பெயர் வரக்கூடாதென்று, அதைத் தானாக வாங்கிக் கொண்டாளே!

உமா அங்கு வந்ததிலிருந்து நடந்த விஷயங்களைக் கேட்டான் தணிகாசலம். சுருக்கமாகக் கூறினாள் தேவகி. உமாவை அவளுடைய சுய புத்திக்குக் கொண்டு வருவதற்குச் சரியாக ஒரு மாதமாயிற்றாம். சௌந்தரத்தம்மாளும் பேராசிரியரும் அவளைத் தேடிக் கொண்டு வந்து இழுத்துச் செல்வதுபோல் கனவுகள் கண்டு பதறினாளாம். பகல் பொழுதெல்லாம் தணிகாசலத்தைப் பற்றியும், குழந்தை கல்யாணியைப் பற்றியுமே பன்னிப் பன்னிப் பேசினாளாம்.

"பிறகு அவள் கவிதைகள் எழுதத் தொடங்கினாள்" என்று ஆரம்பித்தாள் தேவகி. கவிதை உணர்ச்சி எப்படியெல்லாம் அவளை ஆட்டி வைத்துச் சிரழித்தது என்பதைக் கேட்க அவனுக்கு நடுக்கமாக இருந்தது. உணவை மறந்து, உறக்கத்தை மறந்து, உலகத்தையே மறந்து, அவள் சிந்தனை செய்வதும் எழுதுவதுமாக இருந்தாளாம். தணிகாசலம் முன்பு படித்த அதே அறையில் அவன் உபயோகப்படுத்திய அதே மேசை நாற்காலிகளை வைத்துக் கொண்டு அவள் எழுதினாளாம். பெரும்பாலும் அந்த அறையை உட்பக்கம் அவள் தாழிட்டுக் கொள்வாளாம்.

"சில வேளைகளில் மேசையில் தலையைக் கவிழ்த்துக் கொண்டு அவள் யோசனை செய்யும்போது பார்த்திருக்கிறேன். மேசையெங்கும் ஒரே கண்ணீர் மயம். திடீரென்று ஆவேசம் வந்தவள் போல் சில வரிகளை எழுதி விட்டு மறுபடியும் அழுவாள். என்னைக் கண்டு விட்டால் ஓடி வந்து கட்டிக் கொள்வாள்."

"அவள் இப்போது என்ன சொல்கிறாள்?" என்றுகேட்டான் தணிகாசலம்.

"அவளுக்கு என்ன தெரியும் சொல்வதற்கு? நான்தான் அவளிடம் சொல்லி வைத்திருந்தேன். தினமும் அவளைக் கரைவாய்க் கரைத்து உன்னைக் கல்யாணம் செய்து கொள்ளச் சொன்னேன். சம்மதித்து விட்டாள். — இன்னும் பத்து நாட்களில் நானே உனக்கும் அவள் அப்பாவுக்கும் எழுதுவதாக இருந்தேன். அதற்குள்......"

பிற்பகுதிப் பேச்சை அவன் காதில் போட்டுக் கொள்ளாமல் முரட்டுத்தனமாய் அந்த யோசனையை எதிர்த்தான். உண்மையில் அவளுக்கு அதில் விருப்பமில்லையென்றும், தன்னுடைய பிளாட்டோ ஆராய்ச்சியையும், சந்தனக் கட்டைக் கற்பனையையும் எடுத்துத் தேவகியிடம் கூறினான். அவற்றை விவரமாய் விளக்கினான்.

"நீ ஒரு முட்டாள்!" என்று சினந்து கூறினாள் தேவகி. "கற்பனை செய்வதற்கும் ஒரு அளவு வேண்டும். உலகத்தில் நடப்பவைகளை மறந்துவிட்டு என்ன தத்துவம் வேண்டிக் கிடக்கிறது? வெண்ணெய் திரண்டு வருகிற சமயத்தில் நீ தான் தாழியை உடைத்து விடுவாய் போலிருக்கிறது." தேவகி அவனிடம், கௌரி குற்றாலத்தில், செண்பக மரத்தடியில் கூறிய அதே யோசனைகளையும், உமாவின் சித்தி சந்திரலேகா கூறிய விஷயங்களையும் கூறினாள். இனிமேல் கல்யாணத்தைத் தவிர வேறு எந்த முடிவும் கிடையாதென்றாள்.

"உன்னிடம் கேட்பதற்காக அவள் ஏங்கித் தவித்த சமயத்தில் நீ இந்தக் கதையை எழுதிக் கொடுத்து விட்டாய். அதைப் படித்தவுடன் படுக்கையில் இருந்தவள் இன்னும்எழுந்திருக்கவில்லை. 'அவர் ஒருகாலும் சம்மதிக்கமாட்டார், அக்கா!' என்று என்னிடம் கண்ணீர் வடிக்கிறாள். நான் அவளுக்கு என்ன தைரியம் சொன்னாலும் அவள் நம்பவில்லை. அவள் பேச்சுக்கு ஏதாவது எதிர்ப் பேச்சு பேசினால், நீ அவளுடைய பிரேதத்தைத் தூக்கிக்கொண்டு பட்டணத்துக்குப் போக வேண்டியதுதான்."

முந்தானையால் கண்களைத் துடைத்துக் கொண்டாள் தேவகி. "சம்மதம் என்று மனதாரச் சொல்லிவிடு. அதற்கு மேல் அவள் பிழைப்பதற்கு வழி இருக்கிறது. இருதய பலவீனத்தால் அவள் தினமும் செத்துப் பிழைத்துக் கொண்டிருக்கிறாள். நீ எழுதியிருக்கும் கதை பொய்க் கதை என்று சொல்லிவிடு."

**வீ**ட்டுக்கு வந்தவுடன் வாசலில் அவளை வழிபார்த்துக் கொண்டிருந்த வேலைக்காரியிடம், "டாக்டர் அம்மாள் வந்தார்களா?" என்று கவலை தோய்ந்த முகத்துடன் கேட்டாள் தேவகி.

"நீங்கள் போனவுடன் வந்தாங்க; தூக்கத்துக்கும் சேர்த்து மருந்துகொடுத்திருக்காங்க. அவுங்களா எழுந்திருக்கிற வரையில் யாரும் அம்மாளை எழுப்பக் கூடாதாம்."

தணிகாசலம் மாடிக்கு ஓடத் துடிதுடித்தான்.

"இப்போது போய் நாம் அவளை எழுப்பாமல் பார்த்து விட்டு வரலாம். நீ வரப் போவதாய் நான் அவளிடம் சொல்ல வில்லை. சொல்லியிருந்தால் உன்னை எதிர்பார்த்துக் கொண்டே தன்

உடம்பை அலட்டிக் கொள்வான். நான் எழுதாமல் நீயாக எதேச்சையாய் வந்ததாக அவளிடம் பிறகு சொல்லிக் கொள்ளலாம். திடீரென்று உன்னைப் பார்த்தால்கூட அவள் இருதயம்அதைத் தாங்காது. அவள் எழுந்தபிறகு நான் விஷயத்தைச் சொல்லிவிட்டு உன்னை அழைத்துக் கொண்டு போகிறேன்.''

சந்தடி செய்யாமல் இருவரும் உமாவின் அறைக்குள் நுழைந்தார்கள். பற்பல ஆண்டுகளுக்கு முன்பு அவன் வசித்த அதே அறை; அவன் மிதித்த அதே படிகள். கீழே காற்றோட்டமுள்ள கூடம் இருந்தும் உமா இந்த அறையில் தான் தங்க வேண்டுமென்று பிடிவாதம் பிடித்தாளாம்.

புதிய மரக்கட்டில் ஒன்றில் உமா கண்ணயர்ந்து கொண்டிருந்தாள். தலையணை முழுவதும் அவள் கூந்தல் பரந்து கிடந்தது. நெற்றியின் இடது புருவத்துக்கு மேல் முத்து முத்தாக வேர்வைத் துளிகள் மின்னிக் கொண்டிருந்தன. கடைந்தெடுத்த அவள் மூக்கையும், சிவந்த மிருதுவான இதழ்களையும், மூடியிருந்த இமைகளையும் கண் கொட்டாமல் நோக்கினான் தணிகாசலம். மூச்சின் இழையால் போர்வை அசைந்து கொண்டிருந்தது. அவள் மார்பகத்தில் குப்புற விரிந்து கிடந்த 'மலர்க்கொத்து' பத்திரிகையை மெல்ல எடுத்தான். அவன் எழுதிய அதே பக்கங்கள்! அந்தக் கதையின் முடிவுக்குக் கீழே, தன் கையால் ஒரு பெரிய கேள்விக் குறியை வரைந்திருந்தாள் உமா.

'இந்த கேள்விக் குறிக்கு என்ன பொருள்?'

குபீரென்று அவன் கண்களில் நீர் பெருகியது. இப்படி எழுதி வைத்திருப்பவனிடம், எப்படிப் போய்க் கல்யாணம் செய்து கொள்ளச் சொல்வது என்று உமா கேட்கிறாளா? 'உமா! உன் கண்களைத் திறந்து என்னைப் பார்; உன் வாயைத் திறந்து உன்னுடைய கேள்விக்கு என்ன பொருளென்று சொல்ல மாட்டாயா?'

அவள் கண்களைத் திறக்கும் வரையில் அந்த முகத்தை விட்டுத் தன் கண்களை அவன் அகற்ற மாட்டான்போல் தெரிந்தது. தேவகி அவனிடம் சைகை செய்து அறையை விட்டுப் போகச் சொன்னாள். அவன் கேட்கவில்லை. அவன் காதருகில் போய், ''காரியத்தைக் கெடுத்து விடாதே! விழித்தவுடன் அவளைப் பார்த்துக் கொள்ளலாம், வா'' என்று அழைத்தாள் தேவகி.

திரும்ப நினைத்தவனுக்கு அருகில் மேசை மேலிருந்த உமாவின் பேனாவும் ஒரு நோட்டுப் புத்தகமும் கண்களில் பட்டன. அந்த நோட்டுப் புத்தகத்தில் அவள் எழுதிய கவிதைகள் இருக்கவேண்டும். 'தாஜ்மஹால்' என்று அதன் அட்டையில் அவள் எழுதியிருந்தாள். கவிதைகளுக்குத்தலைப்பு தாஜ்மஹாலா?

'இந்தப் பாழாய்ப் போன தாஜ்மஹால் என்ற தலைப்பில் இவள் ஏன் எழுதுகிறாள்? எனக்குப் பிடிக்காத, நான் மனதார வெறுக்கும், பயங்கரப் பெயராயிற்றே அது? அன்றைக்கு நான் கண்ட அதே காட்சி இப்போதும் என் கண்ணெதிரில் தோன்றுகிறதே! வேண்டாம், வேண்டாம், நான் அதைப் பார்க்க மாட்டேன்!'

தணிகாசலம் அந்த நோட்டைப்பற்றி எடுத்துக் கொண்டு, தன் கண்களை இறுக மூடிக்கொண்டு, கீழே இறங்கி வந்தான். அவனுடைய மூடிய கண்களுக்குள்ளே தாஜ்மஹாலின் உருவம் தெரிந்தது. அதில் அவன் கண்ட முதற் காட்சி நிலைத்து நின்றது. பளிங்குச் சித்திரமல்ல அது; பயங்கரச் சித்திரம். காதற் கனவு மாளிகையா அது? கவிதைக்குரிய தலைப்பா அது? உமா ஏன் அதைப் போய்த் தன் தலைப்புக்கென்று தேடிப் பிடித்தாள்? ஏன் தன் கையால் அதன் பெயரை எழுதினாள்? முட்டாள்!

கவிதைகளைத் தணிகாசலம் படித்துப் பார்த்தபோது, எந்த இலக்கியத்தின் சிகரத்தைத் தன்னால் எட்டிப் பிடிக்க முடியவில்லை என்று ஏங்கிக் கொண்டிருந்தானோ, அதன் உச்சியில் உமா ஏறி நிற்பதைக் கண்டான். ஆண்டாளின் அடி வாரிசாகவே உமா மலர்ந்திருந்தாள்.

(தொடரும்)

# தமிழ் கூறும் நல்லுலகம்

பம்பாய் மாதுங்காவில் உள்ள ஆஸ்திக சமாஜத்தில் ஸ்ரீராமநவமி உத்சவம் வெகு விமரிசையாக நடந்தேறியது. பத்து நாட்கள் உத்சவத்திலும் கதா காலட்சேபங்களும் உபன்யாசங்களுமாக ஸ்ரீராம நாமம் ஒலித்துக் கொண்டே இருந்தது. ஸ்ரீராமநவமியன்று ஆஸ்திக சமாஜத்தில் புதிதாக நிறுவிய ஸ்ரீ அனுமார் வாகனத்தில் எம்பெருமான் எழுந்தருளினார். பம்பாயிலுள்ள பக்த கோடிகள் புடைசூழ எம்பெருமானின் வீதி உலாக் காட்சி கண்கொள்ளாக் காட்சி.

செம்பூர் தென்னிந்திய பஜனை சமாஜத்தினரும் ஸ்ரீராமநவமி உத்சவத்தை வெகு விமரிசையாகக் கொண்டாடினார்கள். இந்த உத்சவத்தில் கர்நாடக இசையும், வாத்திய இசையும், பரத நாட்டியமும் இந்துஸ்தானி சங்கீதமும், உபன்யாசங்களும் இன்னும் சில நிகழ்ச்சிகளும் நடைபெற்றன. ஆஞ்சநேய உத்சவம் மிகச் சிறப்பாக இருந்தது.

குமாரி விமலாவின் பரத நாட்டியமும் ஒரியண்டல் நடனமும் நன்றாக இருந்தன.

★

காந்தி நகர் கல்கி நினைவு மண்டபத்தில் உற்சாகம் மிகுந்த சில இளைஞர்கள் ஒரு கலைக் கழகத்தை மே மாதம் 18உ ஆரம்பித்திருக்கிறார்கள். அன்று கலாக்ஷேத்திராவைச் சேர்ந்த திரு பசுபதி இறைவணக்கம் பாடினார். கலைக்கழகத்தின் தலைவர் திரு சுப்பராயஅய்யர் வந்திருந்த அனைவரையும் வரவேற்றார். கலைக் கழகத்தை ஸ்ரீமதி ஆனந்தி துவக்கி வைத்தார். இவ்விழாவுக்குத் தலைமை வகித்த திரு கி.வா. ஜகந்நாதன் கலைக் கழகத்தின் அவசியத்தைப் பற்றிப் பேசினார். குமாரி வசந்தாவும் சியாமளாவும் நடன விருந்தளித்தனர். ஓரங்க நாடகங்கள் இவ்விழாவில் இடம் பெற்றிருந்தன. காரியதரிசி திரு ஆர். ராமானுஜம் விழாவுக்கு வந்திருந்தோர் அனைவருக்கும் நன்றி கூறினார்.

★

செகந்திராபாத் தென்னிந்தியர் கழகத்தினர் பதினேழாவது ஆண்டுவிழாவை வெகு விமரிசையாகக் கொண்டாடினர். தமிழ்நாட்டின் பிரபல எழுத்தாளரான திரு பி. எஸ். ராமையா அவர்களின் 'பிரெசிடெண்ட் பஞ்சாட்சரம்' என்ற ஹாஸ்ய நாடகம் மேற்படி கழகத்தின் நாடகக் குழுவினரால் நடிக்கப்பட்டது. மேடை அனுபவம் அதிகம் இல்லாமலிருந்தபோதிலும் எல்லா வேஷங்களையும் கழக அங்கத்தினர்களே ஏற்றுத் திரு டி. பி. கிருஷ்ணமூர்த்தி அவர்களின் டைரக்ஷனில் வெகு நன்றாக நடித்துப் பெயர் பெற்றார்கள். திரு எஸ். ஆர். பாலசுப்பிரமணிய அய்யர் அவர்களின் தலைமையில் நாடகம் துவக்கப்பட்டது. அவர் தமது தலைமையுரையில் நாடகத்தில் பங்கு கொண்ட நடிகர்களைப் பாராட்டினார். இவ்விழாவை முன்னிட்டுப் பல பிரமுகர்களின் ஆசிகளும் கட்டுரைகளும் அடங்கிய "நினைவு மலர்" ஒன்றும் வெளியிடப்பட்டது.

நாடகத்தின் உயர்ந்த தரத்தைப் பாராட்டி, திரு ஏ. மென்னிஸ் என்பவரும், திரு பேரை சுப்பிரமணியன் என்பவரும் வெள்ளிக் கோப்பைகளைப் பரிசாக அளித்தனர்.

★

பம்பாய் ரிசர்வ் பாங்க் தமிழ் நூல் நிலையத்தினர் ஏழாவது ஆண்டு விழாவைப் பத்மபூஷண் திரு எம். கணபதி அவர்கள் தலைமையில் கொண்டாடினர். குமாரி ஜெயலட்சுமி இறை வணக்கம் பாட விழா துவங்கியது. வாழ்த்துரைகளையும், ஏழாவது ஆண்டு அறிக்கையையும் செயலாளர் திரு வெங்கடகிருஷ்ணன் படித்தார். திரு சி. வி. சுப்ரமண்யம் அரிய சொற்பொழிவொன்றை நிகழ்த்தினார். தொடர்ந்து குமாரி சகுந்தலா கோஷ்டியினரின் இன்னிசைக் கச்சேரி நடைபெற்றது. திரு ஆனந்ததீர்த்தனின் நன்றி உரையுடன் விழா இனிது நிறைவுற்றது.

★

தேவகோட்டை சன்மார்க்க சங்கத்தின் ஆதரவில் சமீபத்தில் ஸ்ரீ வால்மீகி ராமாயணத்தின் பூரண சாரமான 'சக்கரவர்த்தித் திருமகன்' என்ற வசன காவியம், மேற்படி சங்கக் காரியதரிசி திரு வை. கோபால கிருஷ்ணய்யர் அவர்களால் படிக்கப்பட்டது. 14-5-58ந் தேதியன்று ஸ்ரீ ராமர் பட்டாபிஷேகம் வெகு சிறப்பாக நடைபெற்றது. மேற்படி நற்காரியத்தை வாழ்த்திச் சிருங்கேரி ஜகத்குரு அவர்களிடமிருந்தும் காஞ்சி காமகோடி ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகளிடமிருந்தும் கிடைத்த ஆசிச் செய்திகள் படிக்கப்பட்டன. சங்கத் தலைவர் திரு ஆவி. ராம. மெய்யப்ப செட்டியார் அவர்கள் ராமாயண காவிய பாத்திரங்களைப் பற்றி அரிய கருத்துக்களை எடுத்துரைத்து நன்றி கூறினார். ஜகத்குரு அவர்களின் மந்திராக்ஷதை பிரசாதம் முதலியன வழங்கப்பட்டு இராமர் பட்டாபிஷேகம் இனிது நிறைவேறியது.

★

கொழும்பு பாரதி இளைஞர் சங்கத்தின் இலக்கியச் சொற்பயிற்சி வகுப்பின் நான்காவது கூட்டம் திரு வி. முத்து தலைமையில் சிறப்பாக நடைபெற்றது.

அறிஞர் அ. தங்கவேலனார் தமிழ் மறையின் "நீத்தார் பெருமை" என்னும் அதிகாரம் குறித்து விரிவுரை ஆற்றினார்.

திருவாளர்கள் அ. பட்டையா, டி. பி. இருதயராசு, வி. தம்பிராசன், செ. பொ. பாலையா ஆகியவர்கள். "நட்பு" என்னும் பொருள் குறித்துப் பேசினார்கள்.

சங்கத் தலைவர் நயமணி திரு கல்கிதாசனார் பொதுவியல் விமரிசனம் செய்தார்.

திரு டி. பி. இருதயராசு இணைச் செயலாளராகவும், திரு வி. முத்து கௌரவ அங்கத்தினராகவும் தெரிவு செய்யப்பட்டார்கள்.

# "உங்கள் பற்களை பாதுகாருங்கள்!"

விஸ்டம் பல் வைத்தியர் எப்படி என்று கூறுகிறார்













உங்கள் பற்களை ஆரோக்கியமாய் வையுங்கள். இரவிலும் காலையிலும் விஸ்டம் ப்ரஷால் துலக்குங்கள்! துலக்க சுலபமாயிருக்க அதன் சிறிய தலை மற்றும் வளைந்த கைப்பிடியமைப்பால் வாயில் மூலை முடுக்குகளிலும் புகுத்தலாம்; அதன் விருப்பமான நைலான் குச்சங்கள் பல இடுக்குகளில் நுழையும். பொருத்தமான வடிவம் கொண்ட 'விஸ்டம்' டூத் ப்ரஷை உபயோகியுங்கள்!

காலாகாலத்தில் உங்கள் பல் வைத்தியரை காணுங்கள்






## 9. மத சுதந்திரம்

விவசாய சகாப்தத்தில் மற்றச் சுதந்திரங்களைக் காட்டிலும் மத சுதந்திரத்துக்காகவே மக்கள் அதிக தியாகம் செய்ய வேண்டி வந்தது. ஐரோப்பிய சரித்திரத்தின் முக்கிய பாகம் மதப் போராட்டமும், அதன் பெயரால் செய்யப்பட்ட அக்கிரமங்களுமே. பாரதத்தைப் போலவே, ஆதி கிரேக்க, ரோம நாகரீகங்களில் பல தெய்வங்கள் வணங்கப்பட்டன. எல்லோருக்கும் தம் இஷ்டப்பட்ட மதத்தை ஏற்கவும், அதன்படி பூஜை செய்யவும் உரிமை இருந்தது. கிறிஸ்தவ மதம் தோன்றியதும் இந்த நிலைமை மாறியது. கிறிஸ்துவையும், அவருடைய உபதேசங்களையும் ஏற்காதவர்களுக்குச் சுவர்க்கமில்லை, நரகமே என்ற கொள்கையைக் கிறிஸ்தவர்கள் நம்பிப் பிரசாரம் செய்தனர். அவர்களுடைய சங்கியை அதிகரிப்பதைக் கண்டு ரோம சாம்ராஜ்யத்தார் அவர்களைப் பலாத்காரமாக அடக்க முயன்றனர். அடக்கு முறைகளுக்கு அஞ்சாமல் ஆதிகிறிஸ்தவர்கள் முகமலர்ச்சியுடன் சகலவித கஷ்டங்களையும், சித்திரவதைகளையும், மரணத்தையும் ஏற்றனர். முடிவில் ரோம சக்கரவர்த்திகளும் அம்மதத்தை ஏற்றனர். பிறகு கிறிஸ்தவர்களின் போக்கு முற்றிலும் மாறியது. தாம் துன்புறுத்தப்பட்டது போலவே, கிறிஸ்தவரல்லாதாரைத் துன்புறுத்தி அவர்களைப் பலாத்காரமாகத் தம் மதத்தில் சேர்த்துக் கொண்டனர். அதன் பிறகு, கிறிஸ்தவர்களிடம் பல மத பேதங்கள் தோன்றின. ஒவ்வொரு கிளை மதமும் அரசாங்க பலத்தைக் கொண்டு மற்றக் கிளைகளை ஒழிக்க முயன்றன. ரோமன் கத்தோலிக்கக் கிளை வலுப்பெற்றுப் பல நூற்றாண்டுகள் ஐரோப்பாவின் முக்கிய மதமாக இருந்தது. அதன் கொள்கைகளிலிருந்து சிறிது மாறுபட்டவர்களைத் தூக்கிலிட்டும், தீயில் போட்டும், மற்றும் பலவித கொடிய முறைகளாலும் மத பேதங்களைத் தடுக்க முயன்றனர். போப்பாண்டவர் தலைமையில், கத்தோலிக்க மதம் ஒரு மத சாம்ராஜ்யமாகி விட்டது. கிறிஸ்தவ வேதமாகிய பைபிளில் கூறியிருக்கும் சிருஷ்டி, வானசாஸ்திரம் முதலியவற்றை ஏற்காத விஞ்ஞானிகள் கூட இக்கொடுமைக்கு ஆளாயினர்.

சுமார் ஐந்நூறு வருஷத்துக்கு முன் கத்தோலிக்கக் கொள்கைகளையும், போப்பாண்டவரின் அதிகாரத்தையும் எதிர்த்து லூதர், கால்வின் முதலியோர் பிராடெஸ்டெண்ட் மதத்தை ஸ்தாபித்தனர். சில அரசர்களும் புதிய மதத்தை ஏற்று. இரண்டு கிளை மதங்களுக்கும் கொடிய போர் பல நூற்றாண்டுகள் நடைபெற்றது. பிரிட்டன், ஜெர்மனி, ஹாலண்டு முதலிய ராஜ்யங்கள் பிராடெஸ்டெண்டு மதத்துக்காகவும், ஸ்பெயின் பிரான்ஸ் முதலிய அரசாங்கங்கள் கத்தோலிக்க மதத்துக்காகவும் ஏராளமான சைனியங்களைத் திரட்டி அஹிம்சையையும், அன்பையும் போதிக்க கிறிஸ்துவின் பெயரால் ஐரோப்பாவைப் போர்க்களமாகச் செய்தன. சுமார் இருநூறு வருஷங்களுக்கு முன் மதத்தையே எதிர்த்து, நாஸ்திகமும், விஞ்ஞானம் ஓங்கியபொழுதே இந்தப் போர் முடிவு பெற்றது.

யூதர், முஸ்லிம் மத சரித்திரங்களும் இப்படியே. அவைகளும் ஒரு மதத்திலேயே எல்லா உண்மைகளும் கூடியிருக்கின்றன, மற்ற மதங்களெல்லாம் முழுப் பொய்கள், மனிதனின் ஆத்மாவை உண்மையான மதத்துக்குத் திருப்புவதற்காக அவன் உடலை அழிப்பது நியாயம் என்ற கொள்கை கொண்டிருந்தன. கிறிஸ்துவைச் சிலுவையிலிட்டதற்காக யூதர்களைக் கிறிஸ்தவர்கள் இம்சிப்பது சகஜமாக இருந்தது. அரேபியாவில் இஸ்லாம் மதம் ஸ்தாபிக்கப்பட்ட நூறு வருஷங்களுக்குள் ஆசியாவிலும், ஆப்பிரிக்காவிலும் பெரும் பாகங்கள் முஸ்லிம் சைனியங்களின் வெற்றிகளால் முஸ்லிம் பிரதேசங்களாக்கப்பட்டன. ஐரோப்பாவில் ஒரு பாகம்கூட முஸ்லிம் ஆதிக்கத்துக்குட்பட்டது. ஆனால் அங்கு நிலைபெற முடியவில்லை.

பாரதம், சைனா இவ்விரண்டு நாடுகளின் சரித்திரம் இதற்கு முற்றிலும் மாறாக இருந்திருக்கிறது. பல மதங்கள் தோன்றிய போதிலும், அவைகளுக்காகப் பலாத்காரத்தை உபயோகிக்கவில்லை. சிற்சில காலங்களில் சில்லறைக் கலகங்கள் ஏற்பட்டதுண்டு. ஆனால் அரசன் ஓர் மதத்தை ஏற்றாலும் பிற மதங்களுக்குச் சுதந்திரமளித்ததுமன்றி, ஆதரவளிப்பதுகூட வழக்கமாக இருந்தது. ஓர் சமயம் வட இந்தியாவில் பெரும்பாலோர் புத்த மதத்துக்கு மாறினர். பிறகு இந்து மதத்துக்குத் திரும்பினர். அசோகர் போன்ற புத்த மதத்தைச் சேர்ந்த அரசர்கள் இந்து மதத்தையும் ஆதரித்தனர். இந்து மன்னர்கள் புத்த மதத்துக்குத் தானங்கள் செய்தனர். தென்னிந்தியாவிலும் ஓரளவு புத்த ஜைன மதங்கள் பரவியிருந்த போதிலும், மக்கள் பெரும்பாலும் சைவ, வைஷ்ணவ சித்தாந்தங்களையே பின்பற்றி வந்தனர். அபூர்வமாக, இவர்களுக்குள் கலகங்களும், அக்கிரமங்களும் ஏற்பட்ட போதிலும், சிநேகத்துடனேயே வாழ்ந்து வந்திருக்கின்றனர். தமிழ்நாடு முழுவதும் விஷ்ணு கோவில்களும், சிவாலயங்களும் சேர்ந்து இருப்பதே இதற்குப் போதிய அத்தாட்சியாகும்.

சைனாவில், புத்தமதம் எவ்வித எதிர்ப்புமில்லாமல் பரவியது. அதைத் தவிர அந்த நாட்

வண்டிக்காரர் (குதிரையிடம்) 'தயவு செய்து பின்னாலே போங்க' என்று



உன்னைச் சொல்லலேடா ராஜா... வண்டியிலே இருக்கிறவங்களைச் சொன்னேன்!

டின் புராதன மதங்களும் எவ்விதத் தடையுமின்றி இருந்தன. பாரதத்திலாவது ஒரு குடும்பத்தில் பல மதஸ்தர்கள் இருப்பதில்லை. அந்த நிபந்தனைகூடச் சைனாவில் இல்லை.

கொள்கைகளைப் பற்றியே ஐரோப்பிய மதப் பூசல்கள் ஏற்பட்ட போதிலும், மத ஸ்தாபனங்களுக்குப் பெருகிய செல்வமும் அதற்குப் பெரும் தூண்டுகோலாக இருந்தது. பரலோகத்தில் நன்மை பெறுவதற்காக, இம்மையில் தமது சொத்தை மதத்துக்குத் தானம் செய்வது எங்கும் வழக்கமாக வந்திருக்கிறது. ஆனால் மனிதனுக்கு ஒரே பிறப்பு. அதன் முடிவில் ஒன்று பரமபதம் அல்லது நரகம், மத குருக்கள் இதை நிர்ணயிப்பதற்கு அதிகாரம் பெற்றிருக்கின்றனர் என்பது பொதுவாகக் கிறிஸ்தவ மதத்துக்கும், விசேஷமாகக் கத்தோலிக்கக் கிளை மதத்துக்கும் கொள்கைகளானதால், கத்தோலிக்கக் கோவில்களுக்கும், மடங்களுக்கும் ஏராளமான நிலங்களும், இதர பொருள்களும் சேகரிப்பது சுலபமாகி விட்டது. மதகுருக்கள் பிரபுக்களைக் காட்டிலும் ஆடம்பரமாக வாழ்ந்தனர். இந்தச் சொத்தை யெல்லாம் அபகரிப்பதற்காகவே பல ஐரோப்பிய மன்னர்கள் பிராடஸ்டெண்ட் கொள்கைகளை வரவேற்றனர்.

இந்த நாட்டிலும், மத ஸ்தாபனங்களுக்கு ஏராளமான சொத்துக்கள் வழங்கப்பட்டன. தமிழ் நாட்டில் இருக்கும் கோவில், மடங்களின் நிலம், நகை முதலிய சொத்துக்களின் மதிப்பு கோடிக் கணக்கில் போட வேண்டும். ஆனால் இங்கு மதத்துக்குப் பெரிய கேந்திர ஸ்தாபனங்களோ, கோடிக்கணக்கான மக்கள் வணங்கும் மதகுருக்களோ, மடாதிபதிகளோ ஏற்படவில்லை. ஆங்காங்கு சிறிய பிரதேசத்திலோ, சிறிய கூட்டத்தாருக்கோ சேர்ந்திருந்தன. ஆதலால், மத சொத்துக்களினால் மக்களைத் துன்புறுத்தக்கூடிய புரோகித வர்க்கம் ஏற்படுவதற்கு வழியில்லாமல் போயிற்று.

விஞ்ஞான வளர்ச்சியாலும், தேசிய உணர்ச்சியாலும் உலகெங்கும் மதப்பற்று குறைந்து தனக்கு இஷ்டப்பட்ட மதக் கொள்கைகளையும், அனுஷ்டானங்களையும் பின்பற்ற எம்மனிதனுக்கும் சுதந்திரமுண்டு என்ற விதி அநேகமாக எல்லா நாடுகளிலும் நிலைபெற்று விட்டது. ஆனால் பலவிடங்களில் சமூக நிர்ப்பந்தங்கள் இந்தச் சுதந்திரத்தை ஓரளவு கட்டுப்படுத்துகின்றன. அரசியலிலும் சில நிபந்தனைகள் இருக்கின்றன. பிரிட்டிஷ் அரசன் பிராடஸ்டெண்ட் கிளையைச் சேர்ந்த கிறிஸ்தவராக இருக்க வேண்டும். பாகிஸ்தான் தலைவர் பதவி வகிக்க முஸ்லிம்களுக்கே உரிமையுண்டு என்று சமீபத்தில் இயற்றப்பட்ட பாகிஸ்தான் அரசியல் சட்டத்தில் விதிக்கப்பட்டிருக்கிறது.

மத ஸ்தாபனங்களின் சொத்துரிமைகளைப் பற்றியேதான் இக்காலத்தில் ஓரளவு குழப்பம் இருக்கிறது. ஜமீன்தார்கள், இதர நிலச்சுவான்தார்கள் நிலங்களை ஈடு கொடுத்தோ, கொடுக்காமலோ பறி முதல் செய்தாலும் மத ஸ்தாபனங்களின் நிலங்களை அவ்விதம் செய்யலாகாது என்று நம் நாட்டில் வாதிக்கப்படுகிறது. நிலம் விவசாயிக்குச் சேர வேண்டும் என்ற கொள்கைக்கு மதம் குறுக்கிடலாகாது என்று சீர்திருத்தக்காரர்கள் கூறுகின்றனர். மத ஸ்தாபனங்களின் வருமானத்துக்கு வரி விதிப்பதில்லை. பொது நன்மைக்காக ஏற்பட்ட எல்லா ஸ்தாபனங்களுக்கும் இவ்விலக்கு இருப்பதால், மத ஸ்தாபனங்களுக்கும் இந்தச் சலுகை காட்டப்படுகிறது. மத சுதந்திரத்தை ஏற்ற போதிலும், மதத்தால் எவ்வித நன்மையுமில்லை என்ற அரசியல் கட்சி அதிகாரத்துக்கு வந்தால் இவ்விலக்கு நீடித்திருக்குமா என்பது சந்தேகம்.

விவாகம், சொத்து விபாகம், கல்வி முதலிய சமூகக் காரியங்களைப் பற்றிப் பல மதங்களில் சம்பிரதாயங்கள் ஏற்பட்டு, அவை சட்ட பூர்வமாக அமுல் செய்யப்பட்டு வருகின்றன. இந்து மதப்படி ஒரு புருஷனுக்குப் பல மனைவிகள் இருக்கலாம். இதை மாற்றி இப்பொழுது ஏக பத்தினி விதி செய்து விட்டனர். ஆனால் முஸ்லிம் சம்பிரதாயப்படி நான்கு மனைவிகள் வரையிலும் இருக்கலாம். அதை மாற்றவில்லை. விவாகம் மதப் பிரச்னையில்லை, சமூகப் பிரச்னை என்றால் எல்லோருக்கும் ஏக பத்தினி விதி செய்ய வேண்டும். மதப்பிரச்னை என்றால் பாரத அரசாங்கம் இந்து மதத்தில் தலையிடக்கூடாது என்று பல இந்துக்கள் கூறுகிறார்கள். இது நியாயமான வாதமே. விவாகம் சமூகப் பிரச்னையாக இருந்த போதிலும், முஸ்லிம்கள் சிறுபாலராக இருப்பதாலும், அவர்கள் இதை ஒரு முக்கிய மதக் கொள்கையாக நம்புவதாலும், இந்துக்கள் பெரும்பாலராக இருக்கும் சட்டசபைகளைக் கொண்டு முஸ்லிம்களை நிர்ப்பந்திப்பது நல்ல ராஜதந்திரமாகாது என்பதே இந்த வித்தியாசத்தின் சமாதானமாகும். இது தர்க்கத்துக்கு எதிர் நிற்காது.

சமீபத்தில் கேரளத்தில் அதிகாரம் வகிக்கும் பொதுவுடைமைக் கட்சியைச் சேர்ந்த மந்திரி சபை அந்த ராஜ்யத்தின் கல்வி முறையைப் பற்றிய ஓர் சட்டம் இயற்றினர். அது அங்கிருந்து வரும் கிறிஸ்தவப் பள்ளிக்கூடங்களையும், அவற்றின் மூலம் இந்திய அரசியல் திட்டத்தில் கண்ட கிறிஸ்தவ மத உரிமைகளையும் பாதிக்கிறதென்று கிறிஸ்தவ சமூகத்தார் ஆட்சேபிக்கவே, அதைப் பரிசீலனை செய்ய சுப்ரீம் கோர்ட்டை ராஷ்டிரபதி கேட்டுக் கொண்டிருக்கிறார்.

குடும்ப வார்சு பாத்தியதைகளைப் பற்றிப் பாரத அரசாங்கம் சட்டம் இயற்றிப் பெண்களுக்குப் புதிய உரிமைகள் அளித்த போதும் இதே பிரச்னை எழும்பியது.

மதப் பிரசார உரிமை மத சுதந்திரத்தின் முக்கிய அம்சமாகும். பல மதத் தலைவர்கள் தமது மதத்தைச் சேர்ந்தவர்களின் நன்மைக்காக மட்டுமின்றிப் பிற மதஸ்தர்களைத் தம் மதத்துக்குச் சேர்த்துக் கொள்ளுவதற்காகவும் பிரசாரம் செய்வது தமது கடமை என்று கருதுகின்றனர். அதற்குப் பிற மதங்களின் தவறான கொள்கைகளையும், தீய ஒழுக்கங்களையும் எடுத்துக் காட்டிக் கண்டிப்பதும் தமது உரிமையென்று வாதாடுகின்றனர். இவ்விதம் எல்லா மதத்தினரும் ஆள் சேர்ப்பதிலும், மற்றவர்களைக் கண்டிப்பதிலும் ஈடுபட்டால் கலகமும், குழப்பமும் ஏற்படுவது நிச்சயம். ஆதலின், மதப் பிரசாரத்தை வரம்பின்றி அனுமதிக்க முடியாது. ஆனால், அதன் வரம்புகளை நிர்ணயிப்பதும் சிக்கலான பிரச்னையாகும்.

ஒரு மதத்தைப் பின்பற்றுவதைப் போலவே எம் மதத்தையும் ஏற்காமல் நாஸ்திகத்தைப் பின்பற்றுவதும் மத சுதந்திரமாகும். நாஸ்திகர்கள், மதங்களின் கொள்கைகளையும் சம்பிரதாயங்களையும் எதிர்த்து எவ்வளவு தூரம் பிரசாரம் செய்யலாம் என்பது இக்காலத்தில் அரசாங்கங்களுக்குக் கஷ்டமான கேள்வியாக இருக்கிறது. எல்லா மதங்களிலும் அமானுஷ சம்பவங்களும், சரித்திரத்துக்கு ஒவ்வாத வரலாறுகளும் காணப்படுகின்றன. அவைகளை எடுத்துக் காட்டுவதைத் தடுப்பது அநியாயமாகும். ஆனால் அதன் மூலம் மதங்களையும், மதத் தலைவர்களையும் பலமாகக் கண்டிக்கச் சுதந்திரம் இருந்தால், மதத்தில் அதிகப் பற்றுள்ளவர்கள் உள்ளம் கொதித்துக் கலகம் செய்வார்கள்.

மதத்தைப் பற்றிய பிரசாரங்கள் சம்பந்தமாகவும் இவ்விதப் பிரச்னைகள் எழும்புகின்றன. அவை அனைத்துக்கும் மூலகாரணம், மதம் மக்களின் ஆழ்ந்த உணர்ச்சியை ஆதாரமாகக் கொண்டிருப்பதே. வெறும் வாதத்தால், அதைப் புறக்கணிக்க முடியாது. ஆனால், ஒரு கூட்டத்தாரின் உணர்ச்சிக்காக அதில் சேராதவர்களின் சுதந்திரங்களை மறுக்கவும் முடியாது. இரண்டையும் சமாளிப்பதே சாதுர்யமுள்ள ராஜதந்திரம். அரசியல் தலைவர்களுக்கு இந்தச் சாமர்த்தியமில்லாவிட்டால், அவர்களின் ஆட்சி நிலைபெற்றிருக்காது.

## குடும்பக் கட்டுப்பாடுகள்

இதுகாறும் மானிட வாழ்க்கையின் முக்கிய சின்னம் குடும்பமேயாகும். விவசாய சகாப்தத்திலே தான் இது பிரதானத்துவம் பெற்றது. சஞ்சார சகாப்தத்திலும் ஓரளவு குடும்பக் கட்டுப்பாடுகள் இருந்திருக்க வேண்டும். ஆனால் ஓரிடத்தில் தங்காமல் காடுகளில் சஞ்சரிக்கும் கூட்டங்களிடம் அதிகமான கட்டுப்பாடுகள் இருக்க முடியாது. அவற்றை ஏற்றுக் கொள்ளாதவர்கள் எளிதில் பிரிந்து போய் விடுவார்கள். மந்தைகள் கூட்டத்துக்குப் பொதுச் சொத்தாக இருந்ததால், தாய் தந்தையரைக் காட்டிலும் கூட்டத்தின் நாயகர்களுக்குச் செல்வாக்கு அதிகம்.



**பம்பாய் பாரதிய சங்கீத, கலைக் கழகத்தின் ஆதரவில் மே மாதம் 11ந் தேதி குமாரி சித்திரலேகாவின் பரத நாட்டியம் வெகு சிறப்பாக நடைபெற்றது. பம்பாய் மாதுங்கா போதர் கல்லூரி மண்டபத்தில் நடந்த இந்த நடன நிகழ்ச்சிக்குத் திரளாக ரஸிகர்கள் வந்து குழுமியிருந்தனர். குமாரி சித்திரலேகாவின் நடன விருந்தை அனைவரும் ரஸித்துப் பாராட்டினர்.**

விவசாய சகாப்தத்தில் குடும்பம் முக்கிய ஸ்தாபனமாயிற்று. விவசாயமும், குடிசைத் தொழில்களும் ஒரு குடும்பமாகப் பாடுபட்டால் நல்ல பலன் தரும். தந்தை, தாய் மக்கள் இடை விடாமல் சேர்ந்து ஓர் வீட்டில் வசித்து, ஓர் தொழில் புரிந்து வரவேண்டியிருந்ததால் குடும்பத்தார்களுக்குள் மிகவும் நெருங்கிய சம்பந்தங்கள் ஏற்பட்டு, அவை சம்பிரதாயங்களாகப் பரிணமித்தன.

குடும்பக் கட்டுப்பாடுகள் பலவிதமாக இருந்து வந்திருக்கின்றன. ஆனால் நாகரிகம் வளர்ந்த நாடுகள் எல்லாவற்றிலும் சில நியமங்கள் பொதுவாக வழங்கி வந்தன. சிற்சில மலைப் பிரதேசங்களில் பெண்கள் குடும்பத்துக்குத் தலைமை வகித்த போதிலும், புருஷனே பெரும்பாலும் அதன் தலைவனாக இருந்து வந்திருக்கிறான். குடும்பத் தலைவனுக்குப் பல சமூகங்களில் குடும்பத்தார் மீது சர்வாதிகாரம் இருந்தது. தனது தம்பிகளையும், மனைவியையும் தர்மபுத்திரர் சூதாட்டத்தில் பணயமாக வைத்ததொன்றே இதை நிரூபிக்கப் போதுமானது. பழம் கிரேக்க, யூத இதிகாசங்களின் மூலம் அந்தச் சமூகங்களில்

மிருதங்கம் வாசிப்பது இந்தியாவின் ஓர் தலைசிறந்த கலை
இதைப்போன்ற வாத்தியத்தை மற்ற எந்த
நாட்டிலும் பார்க்க முடியாது. பல வருட சாதனைக்குப் பிறகே
இவ் வாத்தியத்தை நன்றாகக் கையாள முடியும்.
வாழ்க்கையில் நல்லதை

# எவரெவர் போற்றுகிறார்களோ

அவர்கள் மேட்டூர் மல்கள், மற்றும் லாங்கிளாத்
இவைகளின் வெண்மையையும், தரத்தையும்,
உழைப்பையும் போற்றுகிறார்கள்.
இவைகள் ஒரே விலையில் மலிவாக
விற்கப்படுகின்றன. மற்றும்

## திட்டமான
## தரமுடையவை.











## மேட்டூர் மல்கள் & லாங்கிளாத்கள்

தயாரிப்பாளர்கள்:
மேட்டூர் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்.
மில்கள்: மெட்டூர் அணை, ரெயில்வே ஸ்டேஷன், சேலம் ஜில்லா
மானேஜிங் ஏஜண்டுகள்:
W. A. பியர்ட்ஸல் & கம்பெனி (பிரைவேட்) லிமிடெட், மதராஸ்-1

தகப்பன் தனது மக்களை விற்பதும், தெய்வத்துக்குப் பலி கொடுப்பதுமுண்டென்று அறிகிறோம். ஓர் புருஷனுக்குத் தன் மனைவி மீதும், தந்தைக்கு மக்கள் மேலுமுள்ள அதிகாரம் 'சர்வதோமுகம்' அதாவது 'எல்லையற்றது' என்று வடமொழியில் கூறப்பட்டிருக்கிறது.

மனைவி பதிவிரதையாக இருக்க வேண்டுமென்ற விஷயம் அனேகமாக எல்லா இடங்களிலும் வழங்கி வந்திருக்கிறது. ஆனால் புருஷன் பல மனைவிகளை மணக்கும் வழக்கம் பல சமூகங்களில் சாதாரணமாக இருந்தது. மகம்மது நபி அவர்கள் ஒரு முஸ்லிம் நான்கு மனைவிகளுக்கு மேல் விவாகம் செய்து கொள்ளலாகாது என்று விதித்தது அச் சமயத்தில் ஓர் நல்ல சீர்திருத்தமாகக் கருதப்பட்டது. ராமன் ஏகபத்தினி விரதனாக இருந்ததே அவனுக்குப் பெரும் சிறப்பு. தம் தகப்பனுக்கு முக்கியமாக மூன்று மனைவிகளும், மற்றும் பல மனைவிகளும் இருக்க, நான்கு சகோதரர்களுக்கு மட்டும் ஒரு மனைவி இருந்தது. ராமாயண சரித்திரம் தோன்றிய காலத்தில் இது ஓர் முக்கிய சமூகப் பிரச்னையாக இருந்திருக்கக் கூடுமென்று நாம் ஊகித்தறியலாம்.

எங்கும் ஒரு புருஷன், அவன் மனைவிகள் மக்கள், பேரப்பிள்ளைகள் ஒரே வீட்டில் வசிப்பது வழக்கமாக இருந்தது. தகப்பன் இறந்த பின்னரும் சகோதரர்கள் ஏக குடும்பமாக வசிப்பதுமுண்டு. குடும்பத்தின் அங்கத்தினர்கள் சம்பாத்தியங்களெல்லாம் அதன் பொது வருமானமாகக் கருதப்பட்டது. ஆதலால் குடும்பத்தின் கிழவர்கள், குழந்தைகள், நோய்ப்பட்டவர்கள் எல்லோரையும் போஷிப்பது குடும்பத்தின் பொறுப்பாக இருந்தது. இதனால் பெரிய குடும்பங்களில் சுதந்திரம் குறைவாக இருந்தாலும் அங்கத்தினர்கள் கவலையற்று வாழ வசதியிருந்தது.

தொழில் பயிற்சி, கல்வி, மதம் அனைத்தும் குடும்ப விவகாரங்களாகவே யிருந்தன. குடும்பத் தலைவன் மதம் மாறினால் அவனுடைய குடும்பமும் சாதாரணமாக மாறிவிடும். ஆசாரங்களும், பழக்க வழக்கங்களும் குடும்பப் பாரம்பரையாக நெடுநாட்கள் நிலைபெற்று இருந்தன.

குடும்பத்தின் ஒற்றுமையும், சம்பிரதாயங்களும் சீர்குலையாமல் இருப்பதற்கு விவாக உறவுகளிலும், உணவு முறைகளிலும் கடுமையான கட்டுப்பாடுகள் தேவையாக இருந்தன. பாரதத்தில் மநு ஸ்மிருதியில் கூறப்பட்ட வர்ணாசிரம தர்மம் ஒன்றிரண்டு அம்சத்தைத் தவிர, பெரும்பாலும் நடைமுறையில் நிலவவில்லை. உணவு, விவாகங்களை அடிப்படையாகக் கொண்டே வகுப்பு வித்தியாசங்கள் பாராட்டப்பட்டன. இவ்விதம் உண்டான வகுப்புகள் ஓர் விதத் தொழிலைச் செய்து வந்த பொழுது தனி சாதி அல்லது வர்ணமாகக் கருதப்பட்டது. இல்லாவிடில் ஒரு சாதியிலுள்ள கிளை வகுப்பினர்கள் தமக்குள்ளும் உண்ணாமை, பெண் கொள்ளாமை என்ற நியதிகள் ஏற்பட்டிருக்க முடியாது. தமிழ் நாட்டில் சமீபகாலம் வரையில் பிராமணர்களுக்குள் வைஷ்ணவர்களும் ஸ்மார்த்தர்களும் சேர்ந்து உண்ணுவதில்லை. இவ்விரண்டு வகுப்

## வால் எங்கே ?



பாரும் விவாகத்துக்காகப் பல கூட்டங்களாகப் பிரிந்திருக்கின்றனர்.

சாதிப்பிரிவினைகள் சில நாடுகளில் தீவிரமாகவும், மற்றத் தேசங்களில் மிதமாகவும் இருந்தன. ஆனால் விவசாய சகாப்தத்தில் எல்லா நாகரிகங்களிலும் அவை இருந்து வந்தன. கிறிஸ்தவ, முஸ்லிம் மதங்கள் அவைகளை ஒழித்து எல்லோருக்கும் சமூகத்தில் சம அந்தஸ்து கொடுக்க முயன்றன. கிறிஸ்தவ சமூகத்தில் அது அதிகமாகப் பலிக்கவில்லை. ஐரோப்பியப் பாதிரிகள் வெளியூர்களில் போய்ச் சமத்துவத்தைப் பிரசாரம் செய்தனரேயல்லாது தங்கள் தங்கள் நாட்டில் அதைச் செய்யவில்லை. ஆனால் பிரிவினைகள் செல்வத்தையும், தொழிலையும் பெரும்பாலும் அடிப்படையாகக் கொண்டிருந்தன. முஸ்லிம் மதத்தினரிடமே சாதி வேற்றுமைகள் குறைவாக இருந்தன. ஆனால் போரில் தோல்வியுற்ற எதிரிகளையும் அவர்களின் மனைவி மக்களையும் அடிமையாகச் செய்யும் கொடிய பழக்கத்தை முஸ்லிம் சேனாதிபதிகள் அனுசரித்து வந்ததால், அங்கும் உண்மையான சமூக சமத்துவம் ஏற்படவில்லை.

மிகவும் சிறப்புற்ற கிரேக்க சமூகமும், ஐரோப்பியர்கள் கூட்டத்தை ஆண்ட ரோம சாம்ராஜ்யமும் அவற்றின் குடும்பக் கட்டுப்பாடுகள் குலைந்ததால் அழிந்துவிட்டனவென்று சரித்திரங்கள் கூறுகின்றன. இதற்கு மாறாக, இந்திய, சீன, யூத சமூகங்கள் அக்கட்டுப்பாடுகளின் காரணமாக எல்லாவிதக் கொடுமைகளையும், புரட்சிகளையும் சமாளித்து இன்றும் ஜீவ சமூகங்களாக இருந்து வருகின்றன.

இயந்திர சகாப்தத்தில் குடும்பத்தின் நிலை என்னவாகும் என்பதே உலகின்முன் தோன்றியிருக்கும் சமூகப்பிரச்னைகளில் முக்கியமானது. பெரும்பாலோர் ஜனநெருக்கமான நகரங்களில் ஒன்றிரண்டு அறைகளடங்கிய சிறிய கூண்டுகளில் வசிக்கின்றனர். ஒவ்வொருவர் தனியிடத்தில் வேறுவிதமான தொழில் புரிவதால், பெற்றோர்களும் மக்களும் சேர்ந்து வசிப்பதில்லை. இளம் பிராயத்திலேயே குழந்




ரேஸில் குதிரை ஓட்டுபவர் : ***இந்தப் பக்கமா குதிரைகள் ஏதேனும் போச்சா ?***

தைகளை வசிக்கும் விடுதியுள்ள பள்ளிகளுக்கு அனுப்பி விடுகிறார்கள். கணவனும், மனைவியும் வெவ்வேறு இடங்களில் வேலை செய்வதால், இரவில் மட்டுமே சந்திப்பது சாத்தியமாகிறது. அவரவர் சம்பாத்தியத்தைத் தனியாகப் பாங்கியில் போட்டுச் செலவு செய்கின்றனர். விவாகரத்தும் சுலபமாகி வருகிறது.

கிழவர்களைப் போஷிப்பதற்கும், கஷ்டங்களில் சொந்தக்காரர்களுக்கு உதவி செய்வதற்கும் அரசாங்கத் திட்டங்கள் செய்யப்பட்டு வருகின்றன.

இம்மாறுதல்களால் குடும்பமே கலைந்து விடக் கூடும். அதனால் சமூகத்துக்கு என்ன விளைவுகள் நேரும் என்பதைப் பல அறிஞர்கள் விவாதித்து வருகின்றனர். செல்வமுறையைப் போல் சமூகப் பழக்கவழக்கங்களைத் துரிதமாக மாற்ற முடியாது. இயந்திரத் தொழில் சென்ற 150 வருஷங்களில் சில நாடுகளில் பொருளாதாரத்தை அடியோடு மாற்றி விட்டது. ஆனால் அவற்றின், மக்களின் சமூக வாழ்க்கை பெரும்பாலும் விவசாய சகாப்தத்தின் சம்பிரதாயங்களை அனுசரித்தே நடைபெற்று வருகிறது. புதிய பொருளாதார முறைகளின் பலன்கள் முற்றிலும் வெளியாவதற்கு இன்னும் பல நூறு வருஷங்களாகலாம். அதன்பின் இயந்திர சகாப்தத்தில் முற்றிய நாடுகளில் குடும்பமே மறைந்து விடலாம். குழந்தைகள் கூடக் கணவனில்லாத நூதன முறைகளில் பிறக்கக் கூடும். தற்போதைய தாம்பத்திய முறை மிருக வாழ்வாகக் கருதப் படக் கூடும்.

குடும்பத்தின் கட்டுப்பாடுகள் தனி மனிதனின் சுதந்திரத்தைக் குறைத்து அவன் தலையில் பாரத்தைச் சுமத்துகின்றன. ஆனால் அதற்குப் பதிலாக நிலைபெற்ற அன்பும், ஏகாந்தமான மகிழ்ச்சியும் கொடுக்கின்றன. இரண்டையும் இழந்தால் மனித வாழ்க்கைக்கு லாபமா, நஷ்டமா என்று நிர்ணயிப்பது சுலபமல்ல. நமக்குக் குடும்ப வாழ்க்கையில்லாத சமூகத்தைக் கற்பனை செய்து கொள்ளுவது கஷ்டம். ஆனால் புத்த மதம் பெருகிய காலத்தில் ஆயிரக்கணக்கான ஆண்களும், பெண்களும் குடும்ப வாழ்க்கையைத் துறந்து வசித்தனர். நாடெங்கும் தங்களுக்கு வேண்டிய விடுதி கட்டினர். அஜந்தா ஓவியங்கள் போன்ற ஒப்பற்ற கலைகளில் தேர்ச்சி பெற்றனர். ஆசியாவில் பல நாடுகளுக்குச் சென்று புத்த மதத்தை ஸ்தாபித்தனர். குடும்பத்தினரை விட அவர்களுடைய வாழ்க்கை பலனற்றதாகவோ, இன்பமில்லாததாகவோ இருந்தது என்று எப்படி நிச்சயிப்பது?

இயந்திர சகாப்தத்திலும் குடும்பத்தைப் பாதுகாக்க வேண்டுமென்று விரும்பினால், அதற்குச் சில முக்கிய சீர்திருத்தங்கள் செய்ய வேண்டும். பெரிய நகரங்களில் லட்சக்கணக்கான மக்கள் கூடுவதைத் தடுத்துச் சிறிய பட்டணங்களில் குடும்பங்களைப் பரவியிருக்கச் செய்ய வேண்டும். நெருக்கமின்றி ஒவ்வோர் குடும்பமும் சிறிய தோட்டத்தோடு கூடிய தனி வீட்டில் இருப்பதற்கு வசதியளிக்க வேண்டும். குழந்தைகள் பதினைந்து வயது வரையிலாவது பெற்றோர்களிடமிருந்து கொண்டே கல்வி பயிலுவதற்குச் சௌகரியங்கள் செய்யப்பட வேண்டும். கூடியவரையில் கணவனும் மனைவியும் ஒரே தொழிலிலோ, அருகாமையிலோ வேலை பார்ப்பதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும்.

குடும்பம் அழியக்கூடிய நிலை பாரதத்துக்குப் பல காலம் வராது என்று எண்ணுவதற்கு இடமுண்டு. எவ்வளவு துரிதமாக நாம் முன்னேறினாலும், கிராமவாசிகளின் சங்கியை மொத்த ஜனத்தொகையில் பாதியைவிடக் குறைவதற்குச் சில நூற்றாண்டுகளாவது செல்லும். ஆயினும் பம்பாய், கல்கத்தா, சென்னை, டில்லி முதலிய தலைநகரங்களின் ஜனத்தொகை பெருகி வருவதை ஆராய்ந்தால் கவலைக்கிடமுண்டு. இந்த நகரங்களுக்கு ஐம்பது மைலுக்குள் எவ்விதப் புதிய தொழிற்சாலையோ, கல்விக் கூடமோ ஸ்தாபிக்கக் கூடாது என்ற கொள்கையைப் பாரத சர்க்கார் ஏற்றாலொழிய இம்மாநகர்கள் அமெரிக்கா அல்லது சோவியத் ருஷ்யா நாகரிகத்தின் கோட்டைகளாகி வருவதைத் தடுக்க முடியாது. அங்கிருப்பவர்களுக்கும் மற்ற மக்களுக்குமுள்ள வித்தியாசங்கள் வளர்ந்து நாட்டின் ஒற்றுமை குலைந்து போய் விடும்.

எளிய வாழ்க்கையும், மதப்பற்றும் குடும்ப வாழ்க்கைக்கு அவசியமானவை. குழந்தைகளை வளர்ப்பதற்கும், முதியோர்களைப் பராமரிப்பதற்கும் பொறுமையும், அன்பும் அவசியம் வேண்டும்.

விஞ்ஞானத்துக்குப் பொருந்தாத அம்சங்களை விலக்கி, மதக் கொள்கைகளைத் திருத்தியமைத்து, அதன் பிரசாரங்களையும் பூஜை முறைகளையும் காலத்துக்கேற்ப மாற்றுவது மிகவும் அவசியமானது. ஓரளவில் காந்தியடிகள் இப்பணியைத் தொடங்கி யிருக்கிறார். ஆனால், இயந்திர சகாப்தத்தை வெறுத்து விவசாய சகாப்தத்தை நிலைநிறுத்தும் முயற்சியோடு அவருடைய மதக் கோட்பாடுகளும் பிணைக்கப்பட்டிருப்பதால், அவற்றின் பூரண பலனையும் அடைவது துர்லபம். அவரைப்போல் பல மகான்கள் தோன்றி, இயந்திர சகாப்தத்திலும் மதத்துக்கு உயர்ந்த பதவியை நிலைநிறுத்துவார்களாகில் அதன் தன்மை மேம்பாடடையக் கூடும்.

# சிடுசிடுக்கும் சிறுவன்!

அவனைக் கோபிக்காதீர்கள் — உணவில் அவனுக்குப் போதுமான அளவு வைட்டமின்கள் கிடைக்கவில்லை போலும். எலும்புகளையும் அவயவங்களையும் வளரச்செய்ய அநேக குழந்தைகளுக்கு அதிகப்படி வைட்டமின்கள் தேவை.

பெரியவர்களுக்குக்கூட அதிகப்படி வைட்டமின்கள் தேவை. ஆகையால் உங்களுடைய குடும்பத்தாருக்கு மல்டிவைட் கொடுத்து, வைட்டமின் குறைவு ஏற்படாமல் பாதுகாத்துக் கொள்ளுங்கள். மல்டிவைட் பசியை உண்டாக்கி, பலமின்மையை ஒழித்து தொத்து வியாதியைத் தடுக்கும் சக்தியை வளர்க்கிறது.

## உங்களுடைய டாக்டரைக் கேளுங்கள்!

**மல்டிவைட்** மாத்திரைகளைச் சாப்பிடுவதே ஒரு சுகம்! அவைகள் ருசிகரமான முறையில் சாக்லெட்—கோட் செய்யப்பட்டிருக்கின்றன.

30 மாத்திரைகளும் 60 மாத்திரைகளும் கொண்ட பாட்டல்களில் எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

ஞாபகமிருக்கட்டும் **மல்டிவைட்** உங்களை ஆரோக்கியமாக இருக்கும்படி செய்கிறது.




**பிரிட்டிஷ் டரக் ஹவுஸஸ் (இந்தியா) பிரைவேட் லிட்.**

தபால் பெட்டி 1341, பம்பாய்-1



# நேர்மை

கே. ரகுபதி

ஒன்றுமில்லாத சின்ன விஷயம்தான். அது இவ்வளவு பெரிதாக வளர்ந்து விடும் என்று யாருமே நினைக்கவில்லை.

இத்தனை வருஷமாக இருக்கிறோம், நமக்கு இந்த அதிகாரம் கூடக் கிடையாதா என்று கிட்டாவையர் பொருமினார்.

இன்றைக்கு இதைச் செய்தவன், இன்னும் என்னென்ன தான் செய்ய மாட்டான் என ராமய்யர் மனம் புழுங்கினார்.

கிட்டாவையரைப் போன்ற நேர்மையான ஆசாமியை எங்கு தேடினாலும் காண முடியாது. கணக்கு வழக்குகளைக் கவனித்துக் கொள்வதிலிருந்து ஆட்களை அன்பாகத் தட்டிக் கொடுத்து வேலை வாங்குவது வரையில், அன்றாடம் தானே மார்க்கெட்டுக்குப் போய்க் காய்கறிகள் வாங்கி வண்டியில் போட்டுக் கொண்டு வருவதிலிருந்து, சுகாதார அதிகாரி திடீர் விஜயம் செய்யும் போது எந்தவிதமான குறையும் தென்படாமல் சுத்தமாக இருக்கிறது என அத்தாட்சி அளித்துத் திருப்தியுடன் வெளியேற வகை செய்வது வரையில் ராமவிலாஸ் ஹோட்டலைத் திறமையாக நிர்வகித்து வந்தவர் அவர்.

ராமய்யர் முதலாளி என்ற பெயர்தானே தவிர, கல்லாவில் உட்காரும் நேரம் ரொம்ப ரொம்பக் குறைவு. 'உழைப்பும் நேர்மையும் உயர்வதற்கு வழிகள்' என்பதை உணர்ந்து எஜமான விசுவாசத்தோடு நாளெல்லாம் உழைக்கும் கிட்டாவய்யர் இருக்கும்போது ராமய்யர் எதற்காக உடம்பை அலட்டிக் கொள்ளப் போகிறார் ?

ஆஜானுபாகுவான சரீரம். சரியான உயரம். அதற்கேற்ற பருமன். துல்லியமான கதர் வேஷ்டியும் சட்டையும். நெற்றியில் பட்டையாகத் திருநீறும் குங்குமமும் நேர்மைக்கு எடுத்துக் காட்டாக விளங்க, வாயில் புகையிலைக் குதப்பலும், உதட்டில் புன்முறுவலுமாகக் 'கல்லா'வில் கிட்டாவய்யர் அமர்ந்திருந்தாரானால், மும்முரமான வியாபார நேரம் என்றுதான் அர்த்தம் !

சிறந்த ராஜதந்திரிக்கு ஐம்புலன்களும் ஒரே சமயத்தில் வேலை செய்யும் என்பர். அந்தத் திறமை கிட்டாவய்யரிடம் இயல்பாகவே அமைந்திருந்தது என்றால் மிகையாகாது.

ஒவ்வொரு ஆசாமியையும் பார்த்தமாத்திரத்திலேயே நிதானித்துக் கொண்டு விடுவார். நகரசபை பியூன் மன்னார்சாமி எவ்வளவுக்குச் சாப்பிடுவான் என்பதிலிருந்து, கலெக்டர் ஆபீஸ் கிளார்க் கந்தசாமியின் கணக்கு எவ்வளவு ஆகியிருக்கிறது என்பது வரையில் அவருக்கு மனப்பாடம்.

எத்தனை டபரா செட் வெளியில் போயிருக்கிறது என்பதைக் கவனித்துக் கொள்வார் ; 'ஒரு ஓவல்' என்று சர்வர் மணியின் கூப்பாடு கேட்கும்போது உண்மையிலேயே 'ஓவல்டின்' கிராக்கி எங்கே உட்கார்ந்திருக்கிறது என்பதையும் கவனிப்பார். இரண்டு அல்வா என்று கர்ஜித்தபடியே வந்து 'ஸ்டாலில்' இருந்து எடுக்கும்போது ஒரு துண்டை வாயில் போட்டுக் கொள்ளும் கணேசனுக்கு, சம்பளம் கொடுக்கும் போது ஒரு துண்டு அல்வா கிரயத்தைப் பிடித்துவிட வேண்டும் என்று 'சிட்டை'யில் குறித்துக் கொள்வார். சாப்பிட்ட கணக்கை எழுதுவதற்குப் பேரேட்டில் தன் பக்கத்தைக் கண்டு பிடிக்கத் திணறும் பெருங்காயக் கடை பக்கிரியா பிள்ளைக்குப் பக்க நம்பரும் 'கரெக்டா'கச் சொல்லி விடுவார்.

'அஷ்டாவதானி' என்பது அவருக்கே பொருந்தும் !

'பையன் இரண்டணா', 'இரண்டு பேர் ஒன்பதணா', 'பின்னாடிசெட் ஒண்ணு வெளியே போகிறது', 'சைக்கிள் கடை சங்கரன் கணக்கு பன்னிரண்டரையணா' — இத்தனை குரலுக்கும் கவனமாகச் செவி சாய்த்துச் சில்லறையை வாங்கிப் பெட்டியில் போட்டபடியே, கூட்டத்தோடு கூட்டமாகத் தப்பி விடப் பார்க்கும் ஆசாமியையும் 'கையும் களவுமாய்'ப் பிடித்து ஆளுக்குத் தகுந்தபடி சட்டையைப் பிடுங்கி வைத்தோ, பத்து வாளி தண்ணீர் இழுத்துக் கொட்டிவிட்டுப் போகும்படி தண்டனை அளித்தோ, நின்றதற்குத் தீர்ப்புத் தருவார்.

இடையிடையே ஓய்வு கிடைக்கும்போது கடையை வாசலிலிருந்து கொல்லைவரையில் சென்று 'நோட்டம்' விடுவார். தம் பக்கத்து வலை பீரோவிலிருந்து 'டிகிரி' பாலை எடுத்துக் கொண்டு போனவன், உண்மையிலேயே கிராக்கிக்கு 'டிகிரி காப்பி' கொடுத்தானா, தன் வாயில் ஊற்றிக் கொண்டானா என்பதையும் அவர் கவனிப்பார்.

பிரதம சரக்குமாஸ்டர் பரமசிவத்துக்கு நாளைக்குப் பார்வையாக ஸ்டாலில் வைப்பதற்கு என்ன பக்ஷணங்களைத் தயாரித்தால் தேவலை என்று ஆர்டர் கொடுத்தபடியே, 'டேபிள் கிளீனர்' தங்கவேலு மசமசவென்று நின்று கொண்டிருந்தால் கண்டித்து விட்டுத் திரும்பி இடத்துக்கு வருவார்.

இம்மாதிரி யெல்லாம் திறமையாகக் கிட்டாவய்யர் கடையைக் கவனித்து வந்ததால் வியாபாரம் நன்கு பெருகியது. கொடுக்கிற காசுக்கு நல்ல பொருளைப் பெறுகிறோம் என்ற அளவுக்குப் பொதுஜன திருப்தி ஏற்பட்டது. அதேசமயம் கிட்டாவையரின் கண்டிப்பான நிர்வாகம், கடைப் பெருச்சாளிகளுக்குப் பெரும் தொல்லையாக இருந்தது.

தெய்வத்துக்கே கிட்டாவய்யரின் கண்டிப்பான நிர்வாகம் பிடிக்கவில்லையோ என்

னவோ, காசிராமனை அங்கே கொண்டு வந்து சேர்த்து விட்டது.

ஒரு நாள்.

ராமய்யர், "கிட்டா! இந்தக் கணக்குகளை ஏன் நீர் கட்டிக் கொண்டு அழணும்? தனியாகக் கணக்குப் பிள்ளை போட்டு விடலாமே!" என்றார்.

"அதெல்லாம் ஒன்றும் வேண்டாம், அண்ணா! என்ன பிரமாத கணக்கு? நானே பார்த்துக் கொள்கிறேன்" என்று அடக்கத்தோடு சொன்னார் கிட்டா.

"ஊஹூம். அது சரியில்லை. எல்லாப் பொறுப்பையும் நீரே எத்தனை காலம்தான் ஏற்றுக் கொண்டு கஷ்டப்படுகிறது? உமக்கும் வயசாகிறது. மேலாகத்தான் இருக்கணும். நான் அதற்கு ஏற்பாடு பண்ணி விட்டேன். காசிராமன் என்று ஒருவன் வருகிறான். நாளையிலிருந்து அவனிடம் கணக்குப் புஸ்தகங்களைக் கொடுத்து விட்டுச் சரியாக வைத்திருக்கிறானா என்று மேற்பார்வை பார்த்துக் கொண்டு இரும்."

ராமய்யரின் கண்டிப்பான பேச்சு ஓரளவு நியாயமாகவே பட்டது கிட்டாவுக்கு.

காசிராமன் கணக்குப் பிள்ளையானான்.

நாளாக நாளாகக் காசிராமன் தன் சொரூபத்தைக் காட்டலானான். பல இடங்களில் கணக்குப் பிள்ளையாக வேலை பார்த்துக் கடைகளை 'மூடுவிழா' நடத்தியவன் அவன் என்ற விவரம் கிட்டாவய்யருக்குப் பராபரியாகக் காதில் விழுந்தது.

கடைச் சிப்பந்திகளிடம் போய் அவன் அடிக்கடி ஏதாவது ரகசியம் பேசுவதும் திருட்டு விழி விழித்துக் கொண்டிருப்பதும் கிட்டாவுக்குக் கட்டோடு பிடிக்கவில்லை. ராமய்யரிடம் சொல்லிப் பார்த்தார்.

"அண்ணா! காசிராமன் சரிப்பட்டு வருவான் என்று தோன்றவில்லை!"

ராமய்யர் விழித்தார்.

"என்ன கிட்டா! என்ன விஷயம்?"

"ஒன்றுமில்லை. நமக்குக் கணக்குப் பிள்ளையே அவசியமில்லை என்று பார்த்தேன். நீங்கள் ஏற்பாடு செய்ததினாலே குறுக்கே ஒன்றும் சொல்ல வேண்டாம் என்று இருந்தேன். அவன் போக்கு சரியாகத் தோன்றவில்லை. யார் யாருக்குக் கணக்கு கொடுக்கலாம் போகலாம் என்றே தெரியமாட்டேங்கிறது அவனுக்கு."

இடைமறித்தார் ராமய்யர். "எல்லாம் புதிசுதானே? போகப் போகச் சரியாய்ப் போய் விடும். நான் போகிறேன். அவசர வேலை இருக்கிறது!"

என்றைக்குமே தம்மை இம்மாதிரி வெட்டிக் கொண்டு போனதில்லை ராமய்யர்; இன்று இப்படிச் செய்வானேன் என்று அதிசயித்தார் கிட்டாவய்யர்.

பாவம், அவருக்கு உண்மை எப்படித் தெரிய முடியும்?

காசிராமன் ராமய்யருக்கு 'வலது கை' ஆகிவிட்டான். மனைவியை இழந்து பத்தாண்டுகளுக்கு மேலாக ஒன்றிக் கட்டையாகக் காலம் கடத்தி வந்த ராமய்யருக்கு ஒரு 'ஜோடி' சேர்த்து வைத்ததன் மூலம். இந்த உண்மை கிட்டாவையருக்கு அப்போது புரியாவிட்டாலும் ஒரு நாள் புரியத்தான் செய்தது.

எப்போதும் விடியற்காலையில் பால் கறந்து வந்ததும் முதல் அடுக்கு ஸ்ரீராமர் படம் முன்னால் கொண்டு வந்து வைப்பான் மாரிமுத்து. கிட்டாவையர் எதிரில், தினசரி நிவேதனம் ஆகும் நிகழ்ச்சி அது. அதன் பின்னர் அடுக்கை உள்ளே கொண்டுபோய்க் காய்ச்சியவுடன் முதல் காப்பி கிட்டாவையர் மேஜைக்கு வரும். இருபதாண்டு காலமாக நடந்து வரும் இந்நிகழ்ச்சி இரண்டு நாட்களாகக் காணவில்லை.

மணியை அடித்தார் கிட்டாவையர்.

சர்வர் மணிதான் வந்தான். காலை 'டியூட்டி' அவனுக்கு.

"ஏண்டா, கறந்த பாலைச் சுவாமிகிட்டே கொண்டு வந்து வைக்கவில்லை?"

தலையைச் சொறிந்தான் மணி.



"தெரியவில்லை, அண்ணா! இப்போதெல்லாம் பால் கொஞ்சம் லேட்டாகத்தான் வருகிறது" என்று இழுத்தான்.

"ஏன், என்ன விஷயம்? மாரிமுத்துவைக் கூப்பிடு."

மாரிமுத்து வந்தான்.

"பால் வழக்கம் போல வந்து விடுதுங்க. ஆனால் காய்ச்சி, காப்பி முதல் டிக்காஷன் கலவை அங்கே வந்து விடணும் என்று எஜமான் உத்தரவு!"

"எங்கேடா? என்ன உளர்றே? வழக்கமில்லாத வழக்கம்."

"அதாங்க. உங்களுக்குத் தெரியாதுங்களா? முதலாளி சேர்த்துக்கிட்டு இருக்காரே, பூக்காரத் தெரு அம்மா, அவங்க வீட்டுக்கு..."

முதலாளி ஏன் அடிக்கடி 'அவசர வேலை'யாகப் போகிறார் என்ற விஷயம் புரிந்தது கிட்டாவுக்கு.

நேற்று போட்ட நூற்றைம்பது 'பாதுஷா' வில் முப்பது குறைந்ததே என்று ஸ்டாலேக் கவனித்த விஷயமும் நினைவுக்கு வந்தது.

சரிதான், முதலாளி 'புது சிநேகம்' பிடித் திருக்கிறார், அதுதான் கடையில் கோளாறுகள் ஆரம்பித்து விட்டன என்று முடிவுகட்டினார் கிட்டாவய்யர்.

''தாரமிழந்து தனிக் கட்டையாக வாழ்க்கையைப் பத்தாண்டு காலம் நெறியோடு நடத்தி வந்தவர் திடீரென்று எப்படி......?''

''அது தெரியாதுங்களா? எல்லாம் நம்ம கணக்குக் காசி ஐயர் வேலைதான். அதனாலே தான் அவர் பேச்சுக்கு முதலாளி ஆடுறாரு.''

நினைத்தது சரியாகிவிட்டது. அதுதான், காசிராமனைப் பற்றி எந்தப் புகார் சொன்னாலும் முதலாளி காதில் போட்டுக் கொள்வதில்லையோ?

இந்த நிலை நீடித்தால் கடையைச் சீக்கிரம் மூட வேண்டிவரும் என்று அவரது நேர்மை உள்ளம் எச்சரித்தது.

செய்வதறியாது தவித்தார் கிட்டாவய்யர்.

காசி, முதலாளியின் தயவு தனக்கிருக்கிறது என்ற துணிவில் இஷ்டத்துக்கும் 'சர்வாதிகாரம்' நடத்த ஆரம்பித்தான். அடிக்கடி கிட்டாவுக்கும் அவனுக்கும் தகராறுகள் வரத் தொடங்கின. கிட்டாவின் பேச்சை ராமய்யர் லட்சியம் செய்வதில்லை என்று ஆன பிறகு கிட்டாவைத் தொலைப்பதற்கு வழி தேடலானான் காசி. எரிமலை குமுறிக் கொண்டிருந்தது. என்றைக்கேனும் ஒருநாள் வெடிக்கத் தான் போகிறது என்று கிட்டாவும் தயாராகவே இருந்தார்.



இந்த நிலையில்தான் அந்தச் 'சின்ன விஷயம்' நடந்தது.

கோவிந்த ரெட்டி 'ராமவிலாஸ்' ஹோட்டலில் தினசரி சாப்பிடுகிறவன். வெள்ளிப் பட்டறை ஒன்றில் தினக் கூலிக்காரன் அவன். ஒரு நாளைக்குக் குறைந்தது ஆறு ரூபாயாவது சம்பாதிக்கிறவன். எனவே, அன்றாடம் பத்தணா கொடுத்து ஒவ்வொரு வேளையும் சாப்பிட்டு வந்தான்.

யாரோ அவனிடம் வேளைக்குப் பத்தணா கொடுத்துச் சாப்பிடுவதைவிட மாத டிக்கட் புஸ்தகம் வாங்கி வைத்துக் கொண்டால் முப்பது டிக்கட் கொண்ட புத்தகம் பதினைந்து ரூபாய்தான் ஆகிறது என்று சொல்லியிருக்கிறார்கள்.

கோவிந்த ரெட்டி கணக்குப் பார்த்தான். அப்படி வாங்கி வைத்துக் கொண்டால் ஒரு வேளைச் சாப்பாடு எட்டணாதான் ஆகிறது. வேளைக்கு இரண்டணா மிச்சம், ஒரு நாளைக்கு நான்கணா, மாதத்துக்கு ஏழரை ரூபாய்......

'கல்லா'வில் இருந்த கிட்டாவையரிடம் வந்து நின்றான்.

''ஐயா! எனக்கு மாச டிக்கட் புஸ்தகம் கொடுத்துடுங்க.''

கிட்டா நிமிர்ந்து நோக்கினார். ''முன் பணம்கட்டித்தான் புத்தகம்வாங்கிக்கணும்.''

''அது சரிங்க. என்னாலே சேர்ந்தாற் போல் பதினைந்து ரூபாய் தர முடியாதுங்க. தினம் இரண்டு ரூபாய் கொடுத்துடறேனுங்க. தொகை முடிவடைஞ்ச பிற்பாடு புத்தகத்தை வாங்கிக்கிட்டுப் போயிடறேன். அதுவரைக்கும் புத்தகத்தையும் நீங்களே வெச்சிக்கிட்டு டிக்கட் கொடுங்க.''

அவன் சொல்வது நியாயமாகவே பட்டது கிட்டாவய்யருக்கு.

கோவிந்த ரெட்டி நாணயமானவன்; பல காலமாக இதே கடையில் சாப்பிட்டு வருபவன். சொன்னபடி கொடுப்பான் என்றே தோன்றியது அவருக்கு. சம்மதித்து அன்று இரண்டு ரூபாயை வாங்கி உள்ளே போட்டு விட்டு, காசிராமனிடம், ''கோவிந்தரெட்டி பேரிலே இரண்டு ரூபாய் வரவு எழுதிக்கோ'' என்று சொன்னார்.

இது நடந்து ஆறு நாட்கள் ஓடி விட்டன. பன்னிரண்டு ரூபாய் கொடுத்து விட்டான் கோவிந்த ரெட்டி. இன்னும் மூன்று ரூபாய்கள் தான் அவன் பாக்கி.

இரவு எட்டரை மணி இருக்கும். அன்று அமாவாசை. கிட்டா சாப்பிடுவதற்கு வீட்டுக்குப் போகாமல், உள்ளே போய் இட்டிலி சாப்பிட்டுக் கொண்டிருந்தார்.

'கல்லாவில்' ராமய்யர் இருந்தார்.

கோவிந்த ரெட்டி, வந்தவன் காசிராமனிடம் ஒரு ஐந்து ரூபாய் நோட்டை நீட்டி, ''என் கணக்கை முடித்துப் பாக்கி இரண்டு ரூபாயும் டிக்கட் புத்தகமும் கொடுங்க'' என்று கூறினான்.

காசிராமன் நோட்டை ராமய்யரிடம் நீட்டி, ''அந்த ஆளிடம் இரண்டுரூபாய் கொடுங்கள்'' என்றான்.

''என்னது? எதற்கு மூணு ரூபாய் தருகிறான்?'' என்றார் ராமய்யர்.

''அது...அது...கிட்டா ஐயர்வாள் வியாபாரம். சாப்பாட்டு டிக்கட் புத்தகம் கடனுக்குக் கொடுத்திருந்தார். பாக்கி வந்தது'' என்று விவரமாக விளக்கினான் காசி.

ராமய்யருக்கு ஏகக் கோபம் வந்துவிட்டது.

''ஓகோ, சாப்பாட்டுப் புத்தகம் கூடக் கடனுக்குக் கொடுத்தாகிறதோ?'' என்று பலமாக இரைந்தார்.






எந்நேரத்திலும்
எவ்விடத்திலும்
எச்சமயத்திலும்
கட்டாவ்
வாயில்கள்
தி கட்டாவ் மகன்ஜி ஸ்பின்னிங் & வீவிங் கம்பெனி லிமிடெட்.

இந்த பழைய
விளையாட்டுக் குதிரை புத்தப்
புதியதுபோல் தோற்றமளிக்கிறது



—ஏனெனில் அதற்கு

# குட்லாஸ் நெரோலாக்

## பெயின்ட் பூசப்பட்டுள்ளது

குட்லாஸ்
நெரோலாக்
பெயின்டுகளையே
உபயோகியுங்கள்




அவைகள்
கண் கவரும்
வர்ணமூட்டுவதற்கு
இணையற்றவை

குட்லாஸ் நெரோலாக் பெயின்ட்ஸ் பிரைவேட் லிட்.

ஏஜண்டுகள் :

ஹாரிஸன்ஸ் & கிராஸ்பீல்ட் லிட்.
தபால் பெட்டி நெ. 4, சென்னை

டி. டி. கிருஷ்ணமாச்சாரி & கோ.
தபால் பெட்டி நெ. 500, சென்னை

"நீங்கள் சொன்னால் கேட்டுவிடப் போகிறாரா என்ன அவர்?" என்று சிரித்துக்கொண்டே அவருடைய கோபத்துக்குத் தூபம் போட்டான் 'பேப்பர் வெயிட்' காசி.

"கூப்பிடு இட்டாவை!" என்று இரைந்து கத்தினார் ராமய்யர்.

கை கழுவி விட்டுச் சாவதானமாக வந்து கொண்டிருந்த இட்டா, இந்தக் கூச்சலைக் கேட்டதும் திடுக்கிட்டார். என்றாலும் மெதுவாக வந்து சேர்ந்தார்.

"ஓய் இட்டா! என்னங்காணும் நினைச்சிண்டிருக்கிறீர் மனசிலே! உம்ம இஷ்டத்துக்குக் கடன் கொடுத்தால், கடை எப்படி ஐயா உருப்படும்?"

இட்டா, காசியின் பக்கம் திரும்பினார். உன் வேலை தானா இது என்ற பாவனையில். அந்த 'அப்பாவியோ' நிமிர்ந்து அவரைப் பார்க்கவும் அஞ்சினான்.

"வீணாக வார்த்தையைக் கொட்ட வேண்டாம் ஐயர்வாள்! நான் ஒன்றும் செய்யத் தகாதது செய்துவிடவில்லை. பணமும் வந்து விட்டது. ஏன் வீணாகச் சத்தம் போடுகிறீர்கள்?" என்று கேட்டார்.

"ஓகோ! அவ்வளவுக்கு வந்துவிட்டதா? உமக்கு இங்கே இருக்க இஷ்டமில்லேன்னா, கடையை விட்டுக் கீழே இறங்கி நடவும்!"

"அதைத்தான் நானும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். வருகிறேன்" என்று சொல்லிவிட்டுத் துண்டை உதறித் தோளில் போட்டபடி இறங்கி நடந்து விட்டார் இட்டாவய்யர்.

ராமய்யர் மனம் துணுக்குற்றது. இத்தனை வருஷங்களாய்த் தனக்கு உதவியாய், கடை முன்னுக்கு வரக் காரணமாய் இருந்தவரை இப்படி ஒன்றுமில்லாத விஷயத்துக்காகப் போகச் சொல்லி விட்டோமே என்று மனச்சாட்சி இடித்துக் காட்டியது.

அவருடைய மன எழுச்சிகளை அறிந்த வனாய்க் காசி, "நீங்கள் ஏன் கஷ்டப்படுகிறீர்கள்? அவ்வளவு ஆணவமாகப் போகிறார் அவர், இவ்வளவு சௌகரியமாக இருந்த இடத்தை விட்டு விட்டு, வெளியிலே எப்படிக் காலட்சேபம் செய்யப் போகிறார், பார்த்து விடுவோம். நீங்கள் ஒன்றும் யோசிக்காமல் வீட்டுக்குப் போங்கள், அண்ணா!" என்றவன் அவர் பதிலுக்குக் கூடக் காத்திராமல், "யாரடா அவன்? மாரிமுத்து! வண்டி கட்டு. ஐயா வீட்டுக்குப் போகணும்" என்று கட்டளையிட்டான்.







கிளம்பிய வேகத்தில் நேரே தம் வீட்டில் போய்த்தான் நின்றார் இட்டா. ஒருநாளும் இல்லாத அதிசயமாய் இன்று கணவன் இரவு எட்டரை மணிக்கே வீடு திரும்பியது அலமேலுவுக்கு ஆச்சர்யத்தை அளித்தது.

"என்ன இன்றைக்கு நீங்கள் இவ்வளவு சீக்கிரம் வந்து விட்டீர்கள்?"

இட்டா ஒரு வறண்ட சிரிப்புடன், "ஆமாம், இனிமேல் எனக்கு அங்கே வேலை யில்லை. சீக்கிரம் வந்துவிட்டேன்" என்றார்.

"என்ன நடந்தது?" என்று பதற்றத்துடன் அலமேலு கேட்டதும், நடந்ததை விவரமாகச் சொன்னார்.

"ஒன்றுமல்லாத விஷயம்! இதற்காகவா இப்படி நாயாக உழைத்த உங்களைப் போகச் சொல்லி விட்டான் அந்த மனுஷன்? துளிக்கூட நன்றி வேண்டாமோ? உங்கள் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்டு அவன் நன்றாக வாழ்ந்துவிட முடியுமா?" என்றாள்.

"இந்தா, அலமு? ஏன் வீணாக அலட்டிக் கொள்ளுகிறாய்? நாம் கொடுத்து வைத்தது அவ்வளவுதான். இனிமேல் அவரை ஒன்றும் குற்றம் சொல்லாதே. நடக்கிறது ஈசுவரன் செயல்!" என்று சாவதானமாகச் சொல்லி விட்டுச் சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டார் இட்டாவய்யர்.

ஆறு மாதங்கள் ஓடிவிட்டன. இட்டா நினைத்திருந்தால் வேறு வேலைக்குப் போயிருக்கலாம். ஆனால் அவருக்கு அதில் இஷ்டமில்லை. ராமய்யரும் அவரும் இணைபிரியாதவர்களாய் இருந்துவிட்டு, இன்று வேறு கடைக்கு வேலைக்குப் போனால் ஏளனமாக இருக்குமே என்பதே அவருடைய வேதனை. ஆனால் அவருக்கு வேலை போன விவரம் அறிந்து தங்கள் கடைக்கு வந்துவிடும்படி சில ஹோட்டல்காரர்கள் அவரை அழைத்தனர். ஆனால் அவர் மறுத்து விட்டார்.

இவர் வேலையை விட்ட நேரத்திலேயே 'ராம விலாஸ்' ஹோட்டலும் சோர்ந்துவிட்டது. வியாபாரம் ஏனோ குறைந்து வந்தது. போதாக்குறைக்குப் பக்கத்தில் இரண்டு புதிய ஹோட்டல்கள் முளைத்து விட்டன.

காசி கடையைப் பெருமளவுக்குச் சூறையாடிவிட்டான், ராமய்யரின் பலவீனத்தைப் பயன்படுத்திக் கொண்டு.

தொழிலாளர்களை வேறு தூண்டிவிட்டு வேலைநிறுத்தம் செய்யச் சொன்னான். கடைசியில் ஒருநாள் அவனுடைய 'வேஷம்' ராமய்யருக்குப் புரிந்து, பலத்த வாக்குவாதத்துக்குப் பின் காசியின் சீட்டு கிழிந்தது. அவனுக்கு இது சகஜமான விஷயம்தானே! தவிர கல்லாப் பெட்டியின் உயிரையேதான் அவன்

உறிஞ்சிவிட்டானே! எனவே வேறு எங்கோ அவன் போய் விட்டான்!

ராமய்யரே கஷ்டப்பட்டுச் சிறிய அளவில் கடையை நடத்தி வந்தார், எந்தவிதமான ஆடம்பரமும் இல்லாமல். ஆசைநாயகியைக் கூட விட்டாகி விட்டது. சில சமயங்களில் கிட்டாவய்யரைத் திரும்பக் கூப்பிடுவோமா என்று கூடத் தோன்றும் அவருக்கு. ஆனல் தாம் அவருக்கு இழைத்த தீங்குக்கு அவர் முகத்தில் எப்படி விழிப்பது என்ற அவமான உணர்ச்சி அதற்குத் தடை போடும்.

எல்லா விவரங்களும் கிட்டாவுக்கு அவ்வப்போது தெரிந்து கொண்டுதான் இருந்தன. ராமய்யர் படும் கஷ்டங்களை அறிந்தபோது உதவிக்குப் போய்விடலாமா என்று துடிப்பார். ஆனல் அலமுதான் நடந்த சம்பவங்களை நினைவூட்டி அவர் எண்ணங்களை மாற்றுவாள்.

இம்மாதிரி இருவருமே மனப் போராட்டத்தில் நாட்களைக் கடத்தி வந்தபோதுதான்—திடீரென்று ஒருநாள், "கிட்டா! கிட்டா!" என்ற குரல் கேட்டு வாசலுக்கு ஓடிவந்த கிட்டா அப்படியே திகைத்து நின்ருர்.

ராமய்யர்!

"அடாடா, அய்யர்வாளா? என் குடிசையைத் தேடி......"

"என்னை மன்னித்து விடு, கிட்டா! கஞர் அச்சுக்கும் கருப்பட்டிக்கும் வித்தியாசம் தெரியாமல் இருந்து விட்டேன். கஷ்டப்பட்டு நஷ்டமும்பட்ட அப்புறம்தான் எனக்குப் புத்தி வந்தது!"

"அதுசரி, வந்த விஷயம்......" தம்மையறியாமலேயே குரலில் கடுமை வந்துவிட்டது கிட்டாவய்யருக்கு.

"ஒரு முக்கியமான விஷயம். உங்களுக்கு அதிர்ஷ்டப் பரிசில் இருபதினுயிரம் விழுந்திருக்கிறது. இதோ கடிதம். கடை விலாசத்துக்கு வந்தது. நானே நேரே எடுத்துக் கொண்டு வந்து விட்டேன்!"

"அடாடா, இதற்காகவா நீங்கள் வர வேண்டும்? கடை ஆளிடம்......"

"ஆளாவது, தேளாவது! இப்பொழுது எல்லாம் நானேதான்! அந்தஸ்தெல்லாம் போய் அரை உடம்பாகி விட்டேனே!"

கடிதத்தைக் கையில் வாங்கினர் கிட்டா.

அவரால் நம்பவே முடியவில்லை. கடையில் கல்லாவில் உட்கார்ந்திருந்த சமயம் ஒருவன் வலுக்கட்டாயமாக வந்து தலையில் கட்டிய டிக்கட் அது. 'லாட்டரி' விழும் என்று யார் நினைத்திருக்க முடியும்? பணம் கூட இல்லையென்று சொல்லிப் பார்த்தார். அவன் விடவில்லை. கடைசியில் ராமய்யர் தான் 'கல்லா'விலிருந்து ஐந்து ரூபாயைக் கொடுத்து டிக்கட்டைக் கிட்டாவின் பெயருக்கு வாங்கினர்...... .

ஒரு கணம் அப்படியே திகைத்து நின்ருர் கிட்டா. ஒரே நொடியில் இவ்வளவு பணம் சம்பாதித்து விட்டோம்; இருபது வருட உழைப்பில் கூடக் கிடைக்காத தொகை......

"அய்யர்வாள்! இது நியாயமாக உங்களைச் சேர வேண்டியதுதான்! இதற்குப் பணம் கொடுத்தது நீங்கள். அதனல் நீங்களே எடுத்துக் கொள்ளுங்கள்......"

"என்ன, இது! நிஜமாகவா? ஆயிரத்தில் ஒருவரய்யா நீங்கள்! உங்கள் பெருந்தன்மை தெரியாமல் உங்கள் மனம் புண்ணுகும்படி பேசி அனுப்பிவிட்டேன். நான் மகா பாவி!" என்று கதறி விட்டார் ராமய்யர்.

## ஜூன் மாதச் சிறுகதைப் போட்டி

1. மாதந்தோறும் நடக்கும் இந்தச் சிறுகதைப் போட்டியில் எழுத்தாளர்கள் எல்லோரும் கலந்து கொள்ளலாம்.

2. எழுத்தாளர்கள் சொந்தமாகவே கதைகள் புனைந்து அனுப்ப வேண்டும். கதைகள் கல்கியில் ஆறு பக்கத்திலிருந்து பத்து பக்கம் வரையில் வெளியிடக் கூடியதாக இருக்கலாம்.

3. ஒவ்வொரு மாதமும் அந்தந்த மாதப் போட்டிக்கு வந்த கதைகளில் சிறந்ததற்கு நூறு ரூபாய் பரிசு வழங்கப்படும்.

4. ஜூன் மாதப் போட்டிக்கு ஜூன் 1-ந் தேதியிலிருந்து 30-ந்தேதி வரை கதைகள் எழுதி யனுப்பலாம். ஜூன் மாதப் போட்டிக்கு வந்த கதைகள் ஜூலை மாதம் முழுதும் பரிசிலனை செய்யப்படும். பரிசு பெற்ற கதை ஆகஸ்டு மாதத்தில் பிரசுரமாகும். அதேபோல் அந்தந்த மாதக் கதைகள் அடுத்த மாதத்தில் பரிசிலனை செய்யப்பட்டு, அதற்கடுத்த மாதத்தில் பிரசுரமாகும்.

5. கதைகளை நல்ல காகிதத்தில் இடைவீடுகள் விட்டு ஒரே பக்கத்தில் எழுத வேண்டும். காகிதத்தின் மறு பக்கத்தில் எழுதக் கூடாது.

6. தேர்ந்தெடுக்கப்படாத கதைகளைத் திரும்பிப் பெற விரும்புவோர் அவற்றுடனேயே போதிய தபால் பில்லைகள் வைத்து அனுப்ப வேண்டும். தபால் பில்லைகள் வைத்து அனுப்பாதவற்றைத் திருப்பி யனுப்புவதற்கில்லை.

7. போட்டிக் கதை சம்பந்தமாக எந்தவிதக் கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்வதற்கில்லை.

8. தேர்ந்தெடுத்த கதைகளைத் திருத்துவதற்கும் குறைத்து வெளியிடுவதற்கும் ஆசிரியருக்குப் பூரண உரிமை உண்டு. — ஆசிரியர், கல்கி




# தம்பதிகளுக்கு ஓர் ஆலோசனை

1. குடும்பக் கட்டுப்பாடு புத்தகம் ஒன்றைத் தயவு செய்து வாங்கிப் படியுங்கள். புத்தகத்தின் விலை 25 காசுகள்தான் (தபால் செலவு தனி).

2. புத்தகம் மூன்று பாகங்கள் அடங்கியது. முதல் பாகத்தில் சென்னை அரசாங்கத்தினால் நியமிக்கப்பட்டுள்ள குடும்பக் கட்டுப்பாடு போர்டின் ஆலோசனைகள் தரப்படுகின்றன. குடும்பக் கட்டுப்பாடு பற்றிய இயற்கை வழிகள், கருவி வழிகள், ரண சிகிச்சை வழிகள் இவற்றை இரண்டாம் பாகம் எடுத்துரைக்கின்றது. குடும்பக் கட்டுப்பாடு போர்டின் ஆலோசனைகளைப் பின்பற்றி நடப்பது, உங்கள் குடும்பத்துக்கும் நாட்டுக்கும் நீங்கள் செய்ய வேண்டிய கடமை என்பதை மூன்றாம் பாகம் தெளிவு படுத்துகிறது. ஆங்கிலத்திலும் தமிழிலும் புத்தகங்கள் கிடைக்கும்.

## புத்தகத்தை எப்படிப் பெறுவது?

(1) அரசாங்க அச்சகம், ரூப்பிரண்டு, மவுண்ட் ரோடு, சென்னை-2 என்ற முகவரியிலும் மற்றும் அரசாங்க வெளியீடு ஏஜெண்டுகளிடமும் கிடைக்கும்.

(அல்லது)

(2) மதராஸ் - 18, வைத்தியத்துறை டைரக்டர் அலுவலகத்திலுள்ள சென்னை மாநிலக் குடும்பக் கட்டுப்பாடு அதிகாரிக்குக் கடிதம் எழுதி ஆங்கிலமோ தமிழோ ஒரு பிரதி கேட்கலாம். உங்களது முழு முகவரியுடன் 40 காசை மணியார்டர் செய்ய வேண்டும். மணியார்டர் மட்டுமே வாங்கப்படும். அஞ்சல் தலைகள் (ஸ்டாம்புகள்) ஒத்துக்கொள்ளப்படமாட்டா. சாதாரண நூல் அஞ்சலில் (புக்போஸ்டில்) ஒரு புத்தகம் உங்களுக்கு அனுப்பப்படும். 86 காசு அஞ்சல் பணம் (மணியார்டர்) அனுப்பினால் புத்தகம் பதிவு நூல் அஞ்சலில் (ரிஜிஸ்தர் புக்போஸ்டில்) அனுப்பி வைக்கப்படும்.

(3) ஒரு மொத்தமாக 25ம் அதற்கும் அதிகமான புத்தகங்கள் வாங்குபவர்களுக்கு மொத்த விலையில் 25 சதவிகிதம் தள்ளிக் கொடுக்கப்படும்.

சென்னை மாநில
குடும்பக்கட்டுப்பாடு அதிகாரி

# ஆற்றுவார் இல்லை! தேற்றுவார் இல்லை!!





















# பொங்கிவரும்

### அத்தியாயம் 17

## வீரப்பனின் மனமாற்றம்

கமலம் இறந்து போனதற்குக் காரணம் அவளுக்கு வயதாகிவிட்டது என்பதல்ல. வியாதியினால் அல்ல. பசிக் கொடுமையும் அல்ல. அவள் சாவுக்கு மூல காரணம் அவமானம்தான். மனோ வியாதிதான் முக்கியமான காரணம் என்பதைச் சிதை எறிந்த போது உணர்ந்தாள் மல்லிகா. அவளுக்குக் கிராமத்தார் மீது கோபம் வந்தது. வைத்தியர் மீது கோபம் வந்தது. வீரப்பன் அப்போது அங்கு இருந்திருந்தால் அவளுடைய பார்வையிலேயே எரிந்து போயிருப்பான். ஏன் கணக்கையா மீது கூட அவளுக்குக் கோபம் வந்தது. "நற்பண்பு இல்லையாம், என்னிடம். பெரிய உண்மையைக் கண்டு பிடித்துவிட்டதாக எண்ணம். கண்டபடி ஏசுவது நற்பண்பா? பெண்ணைக் காரணமில்லாமல் தூற்றுவது பண்பா? வைத்தியம் செய்ய வருவதற்கு முன்னால் விரலைச் சுண்டிப் பணம் கேட்பது பண்பா?

"அடடா! பணமாவது என்னிடம் இருந்திருக்கக் கூடாதா? பணம் இருந்திருந்தால் இவர்கள் பண்பைப் பற்றியெல்லாம் பேச மாட்டார்கள். பணம் படைத்தவர்களிடம் பண்பு இல்லாவிட்டால்கூடப் பரவாயில்லை."

சமூகத்தின் மீதே கோபம் கொண்டாள் மல்லிகா. "ஒரு நாள் இல்லையானால் ஒரு நாள் ஏராளமான பணம் சேர்ப்பேன். அப்போது பண்பைப் பற்றி யார் பேசுகிறார்கள், பார்க்கலாம்!"

கூடவே முன்பு அம்மா சொன்ன அறவுரைகள் நினைவுக்கு வந்தன. "கண்ட ஆண் பிள்ளைகளுடன் நினைத்தபடியெல்லாம் பேசக் கூடாது, மல்லிகா. வீட்டுக்கு வந்து அவர் பேசிப் பழகுவது வேறு. நீ தனியாக அவருடன் ஆற்றங்கரையிலும் செண்பகக் காட்டிலும் பேசிப் பழகுவது வேறு. இதனால் கிராமத்தாரின் ஏச்சுக்கு இடமளித்தவராவோம்.

"நம்முடைய உழைப்பு இல்லாமல் ஊரார் வாழ முடியும். ஆனால் ஊரார் அளிக்கும் ஊதியம் இல்லாமல் நாம் தனித்து வாழ முடியாது."

அம்மா சொன்னதைக் கேட்டிருந்தால் ஏச்சுக்கு இடமில்லை, அவமானத்துக்கும் இடமில்லை. அம்மா இறந்துகூடப் போயிருக்க மாட்டாள். மல்லிகாவின் கண்களில் கண்ணீர் ஆறாகப் பெருகியது. 'அம்மா! என்னை மன்னித்து விடு' என்று அலறினாள். மனித சஞ்சாரமே அற்ற அந்த மயானத்தில் அவளுடைய அலறல் பயங்கரமாக ஒலித்தது. சிறுமி சரஸ்வதி ஒடுங்கிப் போய் விட்டாள். அக்காவின் கால்களைக் கட்டிக் கொண்டாள். அவளைத் தூக்கித் தோளில் சாய்த்துக் கொண்டாள் மல்லிகா.

சிதையின் நெருப்பு அணைந்து விட்டது. ஒரு பெரிய சாம்பல் குவியலைத் தவிர அங்கு வேறு எதுவும் இல்லை.

* * *

"அம்மா இறந்து போய்விட்டாள். என்னையும் தங்கை சரஸ்வதியையும் அனாதைகளாக்கி விடாதீர்கள்" என்று மனமுருக ஒரு கடிதம் எழுதினாள் மல்லிகா. அவள் சேகருக்கு எழுதிய ஏராளமான கடிதங்களுடன் இதுவும் சேர்ந்து கொண்டது. அவ்வளவுதான். அதைப் பற்றிச் சேகர் சிறிதளவேனும் கவலைப்படுவதாகத் தெரியவில்லை.

மனமுடைந்து போனாள் மல்லிகா. பகலெல்லாம் வீட்டில் அடைந்து கிடந்தாள். இரவில் கிராமமே தூங்கிய பிறகு வெளியே வந்து நடந்தாள். நடைப் பிணம்போல ஆற்றங்கரைக்குச் சென்றாள். அங்கே தாமிரபரணியில் புது வெள்ளம் பெருக்கெடுத்து ஓடியது. கரைகளில் முட்டி மோதிக் கொண்டு 'ஹோ' என்ற பேரிரைச்சலுடன் சென்றது. கலங்கிய நீரில் ஆங்காங்கே சுழல்கள் காணப்பட்டன. 'என்னுடைய மனத்தைப் போலிருக்கிறது' என்று எண்ணினாள் மல்லிகா. அதைக் காணச் சகியாமல் மேலே நடந்தாள். செண்பக




மலர்களின் வாடை இப்போது வெறுப்பைத் தந்தது. பால் போன்ற வெண்ணிலவு உடலில் பட்டதுமே எரிச்சலை அளித்தது. நட்சத்திரங்கள் அவளைப் பார்த்து ஏளனமாகக் கண் சிமிட்டிப் பரிகசித்தன. ஊராரின் ஏச்சுக்காகப் பயந்து இரவில் வெளியே வந்து உலாவினாள் மல்லிகா. இரவிலும் அவளுக்கு மன நிம்மதி கிடைக்கவில்லை.

அவள் பார்த்துக் கொண்டிருக்கும் போதே ஆற்றில் இருந்த அந்த நீர்ச் சுழல் பெரிதாகிப் பெரிதாகி, புயலின் போது கொந்தளிக்கும் பயங்கர அலை கடலாக மாறியது. பிரளய கால நீர்ப் பிரவாகத்தைப் போல் பேரலைகள் எழும்பின. அந்தப் பேரலைகளிலும் பிரவாகத்திலும் கொந்தளிப்பிலும் புயலிலும் சிக்கித் தவித்தாள் மல்லிகா. எத்தனை நாட்கள் தான் இவற்றை அவளால் தாங்க முடியும்? இவையெல்லாம் அடங்க வேண்டுமானால் சேகரை நேருக்கு நேராக அவள் பார்க்க வேண்டும். பிரளயத்தை அடக்கும்சக்தி கருணை நிறைந்த அவன் கண்களுக்குத்தான் உண்டு. புயலைத் தென்றலாக மாற்றும் திறமை அவன் புன்சிரிப்புக்குத்தான் உண்டு. கொந்தளிக்கும் அலைகளை அமைதியுறச்செய்யும் சாமர்த்தியம் அவனுடைய விரல் முனைகளுக்கே உரியது.

''கணக்கையா! நான் சென்னைக்குப் போகிறேன்'' என்றாள் மல்லிகா.

'வேண்டாம்' என்று தடுத்தார் கணக்குப் பிள்ளை. ''எதற்காகப் போகிறாய்?''

''அவரைப் பார்ககத்தான்.''

''இன்னுமா அவர் மீது நம்பிக்கை வைத்திருக்கிறாய்?''

''அசைக்க முடியாத நம்பிக்கை எனக்கு இருக்கிறது.''

''நீ எழுதிய ஏராளமான கடிதங்கள்?''

''அவருக்கு இருக்கும் கோபத்தில் அவற்றின் உறையைக் கூடப் பிரித்து இருக்க மாட்டார். எல்லாம் வீரப்பனால் வந்த வினை. என்னை நேரில் பார்த்து விட்டாரானால் அவர் உள்ளம்நெகிழ்ந்து விடும். அவரிடம் நான் பேசி விட்டால் அவர் மனத்தை மாற்றி விடுவேன்.''

சச்சிதானந்தத்தால் அதை மறுத்துச் சொல்ல முடியவில்லை. ''உன் இஷ்டம்'' என்று கூறினார்.

தயங்கித் தயங்கி அடுத்த கேள்வியைக் கேட்டாள் மல்லிகா. ''பணம் வேண்டுமே பிரயாணத்துக்கு?''

''என்னிடம் இருந்த கடைசி ரூபாயையும் கொடுத்துவிட்டேனம்மா. இனி அறுவடையாகுமுன்னர் ஒரு சல்லிக் காசு கூடக் கிடையாது!''

ஏமாற்றத்துடன் வீடு திரும்பினாள் மல்லிகா. அந்தக் கிராமத்தில் அவள் உதவி கேட்கக் கூடியவர் கணக்கையா ஒருவர்தான். அவரும் இப்பொழுது கையை விரித்து விட்டார்.

மறு நாள் காலை. 'தடதட' வென்று கதவு தட்டப்படும் ஓசை கேட்டது. ''மல்லிகா!'' என்று அழைக்கும் குரல்.

''யாரது?'' என்றாள் மல்லிகா.

''நான்தான் வீரப்பன்.''

பயந்தே போனாள் மல்லிகா. எங்கள் குடும்பத்தையே பாழாக்கிய இந்த நாசகாரப் பாவி மறுபடியும் ஏன் இங்கு வருகிறான்? ஆருயிர் அன்னையின் உயிர் பிரியச் செய்த எமன் எதற்கு என்னைக் கூப்பிடுகிறான்? என் இன்னுயிர்க் காதலனை ஊரார் முன்னிலையில் அடித்துத் துரத்திய அயோக்கியன் ஏன் என்னை அழைக்கிறான்? இன்னும்என்னென்ன தீங்குகள் இழைக்கத் திட்டமிட்டிருக்கிறான்?

''என்ன வேண்டும்?''

''கதவைத் திற.''

''எதற்கு?''

''உன்னிடம் ஒரு முக்கியமான விஷயத்தைப் பற்றிப் பேச வேண்டும்!''

''உன்னோடு எந்த விஷயமும் பேச நான் தயாராக இல்லை. போய் விடு!''

சிறிது நேரம் மௌனம் நிலவியது. வாசலில் இருந்த ஜன்னல் வழியாக வீரப்பனின் கரம் நீட்டப்படுவதைப் பார்த்தாள் மல்லிகா. அந்தக் கையில் இரு பத்துரூபாய் நோட்டுகள் இருந்தன! நோட்டுக்களை ஆட்டினான் வீரப்பன்.

கி. ராஜேந்திரன்

"இதை எடுத்துக் கொள்' என்று குரல் கொடுத்தான். மல்லிகா அதை எடுத்துக் கொள்ள வில்லை. ஓட்டமாக ஓடிப் போய்க் கதவைத் திறந்தாள். 'சட்'டென்று வீரப்பன் உள்ளே நுழைந்தான்.

"மல்லிகா! கணக்கையா என்னிடம் எல்லாம் சொன்னார். என்னால்தான் உனக்கு இவ்வளவு கஷ்டமும் வந்தது. தயவுசெய்து என்னை மன்னித்து விட்டு இதை எடுத்துக் கொண்டு பட்டணத்துக்குப் போ. சேகரைத் தேடிப் பார்த்துக் கல்யாணம் செய்து கொள். கல்யாணக் கடுதாசு வந்த பிறகுதான் என் மனம் நிம்மதி அடையும்!"

மல்லிகாவின் கண்கள் கலங்கின. வீரப்பன் வேண்டுமென்றே தனக்குத் தீங்கு இழைக்க வில்லை. தன்னுடைய நன்மைக்குச் செய்வ்தாக நினைத்தே செய்திருக்கிறான். அவன் நடத்தை எனக்குத் துன்பம் அளிப்பதை அறிந்ததும் அதற்குப் பரிகாரம் தேடுவதற்கு வந்திருக்கிறான்!

"உம்-தயங்காதே! சும்மா வாங்கிக் கொள். பரவாயில்லை!" வீரப்பனது கை மறுபடியும் நீண்டது. பெற்றுக் கொண்டாள் மல்லிகா. நன்றி உணர்ச்சி பொங்க அதனைக் கண்களில் ஒற்றிக் கொண்டாள். திரும்பி நடந்தான் வீரப்பன். வாசற்படியைத் தாண்டியதும், "இதைப் பற்றி வேறு யாரிடமும்' சொல்ல வேண்டாம். முக்கியமாக என் பெண்சாதிக்கு மட்டும் தெரியவே கூடாது" என்றான். மௌனமாக அதற்குத் தலையை அசைத்தாள் மல்லிகா.



* * *

சென்னையை நோக்கி ரயில்விரைந்து கொண்டிருக்கிறது. பிரசங்க மேடை கிடைக்காத குறையை ரயிலில் தீர்த்துக் கொள்கிறார் ஒருவர். நாட்டின் அரசியல் அமைப்பு முதல் புஷ்டி உள்ள உணவு வகைகள் வரை அவர் அறியாதது ஒன்றுமே இல்லை. எல்லாவற்றையும் பற்றி வெளுத்து வாங்குகிறார். திறந்த வாயில் கரித் துகள்கள் நுழைவதைக் கூடக் கவனிக்காமல் வியப்புடன் கேட்கிறார்கள் சில பிரயாணிகள். வேறு ஒருவருக்கு அசதி அதிகம். அவரை அறியாமல் கண்கள் மூடிக் கொள்கின்றன. தலை கீழே சாய்ந்து தோள் மீது இடிக்கிறது. திடுக்கிட்டு விழித்துக் கொள்கிறார். முகத்தில் அசடு வழிகிறது. நான்கு முறைகள் இப்படித் தலை ஆடி ஆடி உருண்டு விழிக்கிறார். ஐந்தாவது முறை ஆழ்ந்து தூங்கி விடுகிறார். ரயிலின் ஆட்டத்துக்கு ஏற்ப அவர் தலையும் இலேசாக ஆடுகிறது.

சில சாமர்த்தியசாலிகள் சாமான்கள் வைக்க ஏற்பட்டிருக்கும் இடத்தில் முதலிலேயே விரிப்பைப் போட்டிருக்கிறார்கள். "கனமான சாமான்களுக்கு அல்ல" என்று உரக்கப் படிக்கிறார் ஒருவர். "நான் கனமானவன் இல்லை. நூற்று எண்பது பவுண்டுதான்!" என்று

சொல்லி அசட்டுச் சிரிப்புடன் ஏறிப் படுத்துக் கொள்கிறார் மற்றொருவர்.

வண்டி ஒரு ஸ்டேஷனில் நிற்கிறது. போஷாக்கு உணவைப் பற்றிப் பிரசங்கம் செய்தவர் சூடாக ஒரு டீ அருந்திவிட்டுப் புது உற்சாகத்துடன் மறுபடியும் தம் பிரசங்கத்தைத் தொடருகிறார்.

வயதுவந்த பெண்ணுடன் பிரயாணம் செய்யும் தகப்பனார் எதிரே உட்கார்ந்திருக்கும் பையனிடம் ஜாதகம் கேட்டுப் பார்க்கிறார். பெண்ணை ஒரு முறைக்கு இரண்டு முறை பார்க்கிறான் பையன்.

நயன பாஷையில் அவர்கள் பேசிக் கொண்டார்கள். "அப்பாவுக்கு வேண்டுமானால் எழுதிப் பாருங்கள்" என்று சொல்லித் தன்னுடைய விலாசத்தைக் கொடுக்கிறான் வருங்கால மாப்பிள்ளை.



இந்த நாடகங்களையெல்லாம் மல்லிகா கவனிக்கவேயில்லை. அவளுடைய மனம் மறுநாள் தான் காணப் போகும் சேகரைச் சுற்றியே வட்டமிட்டுக் கொண்டிருந்தது. கடந்தகால நிகழ்ச்சிகள் ஒன்றன்பின் ஒன்றாக அவள் நினைவுக்கு வந்தன. வருங்காலத்தில் என்ன நடக்கப் போகிறது என்ற கற்பனையில் ஈடுபட்டாள். செண்பகபுரம் கிராமத்தில் இருந்த வரைக்கும் ஒரே துன்பம்தான். வருங் காலத்திலாவது என் வாழ்வு மலரட்டும், இன்பம் பெருகட்டும் என்று எண்ணினாள். அவள் மடியில் குழந்தை சரஸ்வதி நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தாள்.

எழும்பூர் ரயில்நிலையம் மல்லிகாவை ஒரே பிரமிப்பில் ஆழ்த்தியது. செண்பகபுரத்தையும் திருமயிலத்தையும் தவிர வேறு எதையுமே கண்டறியாத அவளுக்கு எல்லாமே வியப்பாக இருந்தன. எப்படியோ தட்டுத் தடுமாறிக் கூட்டத்தோடு கூட்டமாகச் சேர்ந்து அவள் வெளியே வந்து விட்டாள்.

"எங்கே அம்மா போகணும்? டாக்ஸி வேணுங்களா?" என்று கேட்டான் கூலிக்காரன். மல்லிகா விழிப்பதைப் பார்த்து, "வாடகை மோட்டாரம்மா!" என்று விளக்கிச் சொன்னான்.

"மோட்டாரில் போகலாம், அக்கா!" என்று குதித்தாள் சிறுமி சரஸ்வதி.

"நம்மிடம் அதற்கு வேண்டிய பணம் இல்லையே அம்மா!" என்றாள் மல்லிகா.

இதைக் கேட்டதும் சிரித்துக் கொண்டே போய் விட்டான் டிரைவர். இதைப் போல் எவ்வளவோ பார்த்திருக்கிறான் அவன். ஆளைப் பார்த்து வண்டியில் ஏற்றிக் கொள்ள அந்த டிரைவருக்குத் தெரியும்.

இருவரும் ஒரு ஜட்காவில் ஏறிக் கொண்டார்கள். விலாசத்தைச் சொன்னாள் மல்லிகா.

"தெரியுமுங்க" என்றான் வண்டிக்காரன். தீனி உட்கொண்டு முழுசாக ஒரு நாளான அந்தக் குதிரை கனைரென்று ஒரு சவுக்கடியை வாங்கிக் கொண்டு கிளம்பியது.

வீட்டை நெருங்கும் சமயத்தில் மல்லிகாவுக்கு ஒரு பெரிய சந்தேகம்

வந்து விட்டது. இதுதான் சேகருடைய வீடு என்று என்ன நிச்சயம்? ஒருவேளை அவர் இங்கு இல்லாவிட்டால் என்ன செய்வது? நான் எழுதிய கடிதங்களுக்குப் பதில் கிடைக்காததற்கும் அதுதான் காரணமோ? தவறான விலாசத்துக்குக் கடிதங்கள் எழுதிவிட்டு நேரிலும் வந்திருக்கிறோமோ? அவளுடைய சந்தேகங்கள் அடுத்த நிமிஷம் நிவர்த்தியாயின.

தோட்டத்தில் தன் நாயுடன் விளையாடிக் கொண்டிருந்தான் சேகர். அதற்குப் பயிற்சி அளித்துக் கொண்டிருந்தான். அவன் தூக்கி எறிந்த பந்தை அது மீட்டுக் கொண்டு வந்தது. திடீரென்று கௌவியிருந்த பந்தைக் கீழே போட்டு விட்டு நாய் குரைத்தது. வண்டியிலிருந்து மல்லிகா கீழே இறங்குவதைக் கவனித்தான் சேகர்.

நீண்ட நாட்களாகத் தன் காதலனைப் பிரிந்திருந்த துயரத்தால் வாடிப்போயிருந்த மல்லிகாவின் முகம் இப்போது மலர்ந்தது. குபீரென்று சிவந்து போயிற்று. களையிழந்த வதனத்தில் அழகு மிளிர்ந்தது. ஒளியிழந்த கண்கள் இப்போது பிரகாசித்தன. வற்றி உலர்ந்து போயிருந்த உடல் சந்தோஷத்தினால் விம்மிப் பூரித்தது. வறண்டு போயிருந்த உள்ளம் குதூகலத்தால் நிறைந்தது. அவளுடைய குவிந்த அதரங்கள் மொட்டு வெடிப்பதுபோல் சற்று விரிந்து முத்துப் பல் வரிசையை வெளிக் காட்டின. வேகமாக நடந்து வந்தான் சேகர். "மல்லிகா! மறுபடியும் வண்டியில் ஏறு. இந்தத் தெரு முனையில் போய் இரு. இதோ நான் உன் பின்னாலேயே வந்து விடுகிறேன்" என்று கூறினான்.

காதலனை நீண்ட நெடுநாட்களுக்குப் பின் சந்தித்த மகிழ்ச்சியில் ஏதோ பேசுவதற்காக வாயைத் திறந்தாள் மல்லிகா. "இப்போது பேசுவதற்கு நேரமில்லை, மல்லிகா! சொல்வதைக் கேள்!" என்று அதட்டினான் சேகர். வண்டி நகர்ந்தது!

## அத்தியாயம் 18

# மலர்ந்த நயனங்கள்!

**டை**ரக்டர் சுகுமாரனைப் பார்ப்பதற்காக மணிசேகரன் சென்ற பிறகு, விமலா தன் அருமை அத்தானுடைய கடிதங்களைத் தொடர்ந்து படிக்க ஆரம்பித்தாள். அவற்றில் முக்கியமாக ஒரு கடிதம் இப்போது அவளுடைய கவனத்தைக் கவர்ந்தது.

'அழகுத் தெய்வத்தின் அவதாரம் நீ' என்று குறிப்பிட்டு நடராஜன் ஒரு கடிதம் எழுதி யிருந்தான் அல்லவா? அதைப் பன்முறை படித்த பின்னர் முழுப் பாடலையும் பார்க்க வேண்டும் என்று தோன்றியது விமலாவுக்கு. மாமாவின் புத்தக அலமாரியில் 'பாரதியார் காவியங்கள்' இருந்தது. அதில் அழகுத்தெய்வத்தின் படமும் இருந்தது. அதைப் பார்த்து விட்டுக் குபீரென்று சிரித்து விட்டாள் விமலா. "அத்தான்! இந்த அவலட்சணத்தை அழகுத் தெய்வம் என்கிறீர்களே?" என்று கேட்டுக் கடிதம் எழுதினாள். அதற்கு அவளுக்குக் கிடைத்த பதில் அவளை அத்தானிடம் கோபம் கொள்ளச் செய்தது!

"....விமலா! உன் கடிதம் எனக்கு ஏமாற்றத்தையே அளித்தது. 'அழகுத் தெய்வத்தின் தோற்றம் அழகாக இல்லை' என்று குறிப்பிட்டிருக்கிறாய். அழகு எங்கே இருக்கிறது, விமலா? உடலிலா? அல்லது உள்ளத்திலா? 'பொங்கிவரும் பெருநிலவு போன்ற ஒளி முகம்' எங்கிருந்து அந்த ஒளியைப் பெறுகிறது? நவநாகரிக வாசனையுள்ள முகப் பூச்சினாலா? அல்லது களங்கமற்ற தூய்மையான உள்ளத்தின் அழகைப் பிரதிபலிப்பதாலா?...."

அன்று அத்தானிடம் கோபம் கொள்ளச் செய்த இந்தக் கடிதம் இப்போது மணிசேகரனிடமும் தன்னிடமுமே கோபம் கொள்ளச் செய்தது.

"மணிசேகரனுடைய நோக்கத்தைப் புரிந்து கொண்ட பின்னர் வேண்டுமென்றே அவனிடம் பேச்சை வளர்த்தி வந்தது தவறு! 'இப்போது அவசரமில்லை. யோசித்துப் பதில் சொல்லு' என்றான் மணிசேகரன். 'யோசிப்பதற்கு என்ன இருக்கிறது? என்னை நீங்கள் அடைவது ஒரு நாளும் நடக்காத காரியம்' என்று உடனே பதில் சொல்லியிருக்க வேண்டும். அவருடைய விருப்பத்தை முளையிலேயே கிள்ளி எறிந்திருக்க வேண்டும். அதை நான் செய்யவில்லை! இருவர் என்னைக் காதலிக்கும் படி செய்த இந்த உடலழகைப் பற்றிப் பெருமிதம் அடைந்தது பெரிய தவறு!"

விமலாவுக்குக் கோபம் வந்ததில் ஆச்சரியமென்ன? மணிசேகரனைப் பார்த்து, "எங்கிருந்து வந்தீர்களோ, அங்கேயே திரும்பிப் போய் விடுங்கள்!" என்று கத்தியதில் வியப்பென்ன? எதிர்பாராமல் திடீரென்று புறப்பட்ட அந்தச் சொல்லம்புகளைத் தாளமுடியாமல் மணிசேகரன் சிறிது நேரம் தயங்கி நின்றான்.

"ஏன் இன்னும் நின்று கொண்டிருக்கிறீர்கள்? போய்விடுங்கள் உடனே" என்று மீண்டும் இரைந்தாள் மல்லிகா.

அவளுடைய கோபம் இப்போது அவனுக்குப் புரிந்து விட்டது.

மணிசேகரனின் உள்ளம் என்ற முல்லைக்கொடியில் காதலென்னும் அரும்பு தோன்றியது. இரவு வந்து அது மலர்ந்து மணம் பரப்பும் வரை காத்திருக்காமல் சவிரக்கமற்ற விமலா அதைக் கொய்து விட்டாள். கசக்கப்பட்ட ரோஜா, முகரப்பட்ட அனிச்ச மலர்தான் தன்னுடைய காதல் என்பதை உணர்ந்தான் மணிசேகரன். விடைபெற்றுக் கொண்டு போய் விட்டான்.

விமலா இரைவதைப் பார்த்துக் கொண்டே இருந்த பொன்னம்மாளுக்கும், சத்தம் கேட்டு விட்டு உள்ளே இருந்து ஓடி வந்த மரகதத்துக்கும் பின்னர் அதைப் பற்றிக் கேள்விப்பட்ட டாக்டர் ராமலிங்கத்துக்கும் அவள் கோபம் புரியவில்லை. அது என்றென்றும் விடுவிக்க முடியாத புதிர்தான்.

* * *

தன் அறைக்குச் சென்ற மணிசேகரனுக்கு இத்தனை நாட்களாகத் தான் அனுபவித்து மகிழ்ந்து வந்த உமார்கய்யாம் பாடல் பிடிக்கவில்லை.

**இருக்கும் காலம் சிறிதேயாம்**
**இதனுள் இன்ப வாழ்வினையாம்**
**பெருக்கு மளவு பெருக்கிடுவோம்**
**பிழையொன் றதனால் உண்டோ?**
**சொல்...**

பிழை ஒன்றும் இல்லை. ஆனால் இன்ப வாழ்வினை எப்படிப் பெருக்குவது? விமலா இல்லாத வாழ்வு ஏது? தன்னுடைய வாழ்வு இனிமேல் ஒரே துக்கம், துயரம், சோகம்தான்.

கவிமணியின் மற்றொரு பாடல் நினைவுக்கு வந்தது மணிசேகரனுக்கு. தன்னுடைய பெட்டிக்குள் வைத்திருந்த அந்தப் புத்தகத்தைத் தேடிக்கொண்டே கவிமணியின் அந்தப் பாடலை வாய் விட்டுப் பாடினான்:

**கண்ணும் உயிருக் குயிர்நீயாம்;**
**நாடும் அன்பு நீயேயாம்;**
**கண்ணுள் மணியும் நீயேயாம்;**
**கருத்துள் ஒளியும் நீயேயாம்;**

**பண்ணின் சுவையும் நீயேயாம்;**
**பாவின் நயமும் நீயேயாம்;**
**எண்ணின் நீயல்லாத பொருள்**
**ஏதும் உண்டோ இவ்வுலகில்?**

காதல் ரசம் பொங்கி வழியும்படி அமைந்திருந்த ஒரு மெட்டிலே இந்தப் பாடலைப் பாடினான் மணிசேகரன்.

மறுபடியும் பாடினான் இந்தப் பாட்டை. இப்போது அதில் சோகம் நிறைந்திருந்தது. கடைசி இரு அடிகளைப் பாடும்போது அவன் கண்களில் கண்ணீர் ததும்பி நின்றது. அந்தப் பாடலைக் கேட்டுக் கொண்டே விமலா நின்று கொண்டிருந்தாள்!

"என்னை மன்னித்துவிடுங்கள்" என்ற விமலாவின் குரலைக் கேட்டதும் திடுக்கிட்டுத் திரும்பினான் மணி.

"விமலா! நீ இங்கே எப்படிவந்தாய்?"

"அம்மாவும், மாமாவும் மாமியும் ஒரு திரைப்படத்துக்குப் போயிருக்கிறார்கள். எனக்குத் தலைவலி என்று சொல்லித் தப்பித்துக் கொண்டேன். ஒரு வாடகைக் காரில் இங்கு வந்தேன்."

"விமலா! அடியேனைத் தேடி வந்தது பற்றி ரொம்ப சந்தோஷம். ஆனால்



மன்னிப்பு கேட்பதற்காக இவ்வளவு தூரம் வந்திருக்க வேண்டியதில்லை; மன்னிப்பு கேட்கவும் வேண்டியதில்லை. கேட்க வேண்டியவன் நான். எட்டாத பழம் என்று எனக்குத் தெரியும். தகாத செயல் என்றும் அறிவேன். அப்படி இருந்தும் உன்மீது ஆசை வைத்தது என் தவறுதானே? தயவுசெய்து என்னை மன்னித்து விடு, விமலா!"

"மாமிக்கு எதிரில் உங்களைக் கடிந்து கொண்டு விட்டேன்."

"அது உன் தவறு இல்லை. உன் மனம் அவ்வளவு தூரம் புண்பட்டுப் போய்விட்டது. புண்படுத்தியவன் நான்தானே?"

"கோபத்தின் காரணத்தை நான் யாரிடமும் சொல்லவில்லை. நீங்களும்..."

"நிச்சயமாக நான் யாருக்கும் சொல்ல மாட்டேன்" என்றான் மணி.

"நான் பேசியதை யெல்லாம் தயவு செய்து மறந்து விடுங்கள். வீட்டுக்கு வராமல் இருந்து விடாதீர்கள்."

"அந்த எண்ணம் எனக்கு இல்லை, விமலா! அவசியம் வருவேன். கண்டிப்பாக உன்னுடன் பேசுவேன். உன்னுடைய நல்வாழ்வுக்காகப் பாடுபடுவேன். உனது இன்ப வாழ்க்கையே இனி என்னுடைய லட்சியம், விமலா!"

"போய் வருகிறேன். வாடகை மோட்டார் காத்திருக்கிறது."

"போய் வா, விமலா!"



அவர்களுடைய கண்கள் ஒரு நிமிஷ நேரம் ஒன்றையொன்று பார்த்துக் கொண்டு இடம் பெயராமல் நின்றன. சட்டென்று திரும்பி விடு விடென்று நடந்தாள் விமலா.

சாலையில் அவள் மோட்டாருக்குள் காலை எடுத்து வைக்கும்போது மீண்டும் மணிசேகரன் பாடுவது கேட்டது. நின்று உற்றுக் கவனித்தாள் விமலா.

மண்ணில் மறையும் முடிமன்னர்
வாழ்வும் அரிய வாழ்வாமோ?
கண்ணிற் காணுச் சொர்க்கமுமோர்
கனவே யன்றி நனவாமோ?
நண்ணும் உன்கைப் பொருளதனை
நம்பி யிருநீ, நண்ணுததை
எண்ணி யெண்ணி எந்நாளும்
ஏங்கி யலைவது ஏன், ஐயா?

காற்றிலே மிதந்து வந்த இந்தப் பாடலில் தான் வரும்போது இருந்த சோகம் இல்லை என்பதையும் உற்சாகத்தின் சாயல் இருப்பதையும் கவனித்தாள் விமலா. நிம்மதியுடன் மோட்டாரில் ஏறினாள். அது நகர ஆரம்பித்தது.

மறுபடியும் அதே பாடலை உற்சாகத்துடன் பாடினான் மணிசேகரன்.

...நண்ணும் உன்கைப் பொருளதனை
நம்பியிரு நீ, நண்ணுததை
எண்ணி யெண்ணி எந்நாளும்
ஏங்கியலைவது ஏன், ஐயா?

உமார் கய்யாமின் அந்தப் பாட்டில் இப்போது குதூகலம் தளிர் நடை போட்டுக்கொண்டு சென்றது.

• • •

வெற்றிப் பெருமிதத்தோடு டாக்டர் ஜாக்ஸனிடம் விடைபெற்றுக் கொள்ளச் சென்றான் நடராஜன்.

"போய் வா, நடராஜா! உன்னை மாணவனாக அடைந்த நான் மிகவும் பெருமைப் படுகிறேன்.

"ஒன்றை மட்டும் மறந்துவிடாதே! படிப்புக்கு ஒரு எல்லைகிடையாது. புதுப் புது விஷயங்களைப் பற்றி ஏராளமாக நீ படிக்க வேண்டும். டாக்டராகத் தொழில் புரிபவர்கள் புத்தகங்களைப் படிப்பது தவறு என்றும் அதனை நோயாளிகள் அறிந்தால் அவரிடம் இருக்கும் நம்பிக்கை குறைந்து போகும் என்றும் சொல்லுவார்கள். அதையெல்லாம் பொருட்படுத்தாதே! நிறையப் படி."

"அப்படியே செய்கிறேன்."

"மற்றொன்று ஒரு நோயாளியின் நிலைமை ரொம்ப மோசமாக இருக்கிறது என்பதால் அவனுக்குச் சிகிச்சை அளிக்கத் தயங்காதே! சிகிச்சையின்போது நோயாளி இறந்து போனால் தனக்குக் கெட்ட பெயர் வந்துவிடும் என்பதற்காகவே சில டாக்டர்கள் மோசமான கேஸ்களைப் பார்ப்பதில்லை. நீ நிச்சயமாக அப்படி நடந்து கொள்ளக்கூடாது. நோயாளி மிகக் கேவலமான நிலையில் இருந்தாலும் சிகிச்சை அளிக்க வேண்டும். அவன் பிழைக்காவிடில் அது உன் தவறு அல்ல. பிழைத்தால் ஒரு மனிதனுக்கு உயிரை அளித்தவனாவாய்! ஞாபகம் இருக்கட்டும்."

"நிச்சயமாக நினைவில் வைத்துக் கொள்கிறேன், போய் வருகிறேன்!"

"கடவுள் அருள் உனக்கு எப்போதும் இருக்கட்டும்."

ஏராளமான நண்பர்கள் நடராஜனுக்கு விடை கொடுத்து அனுப்பினார்கள். தன் கைக் குட்டையை எடுத்து

ஆட்டினாள் நான்ஸ். தன் செவ்விதழ்களில் விரல்களை வைத்தெடுத்து நடராஜன் பக்கமாக நீட்டினாள் டயானா. காற்றிலே மிதந்து வந்த அந்த அன்புப் பரிசை நன்றியுடன் ஏற்றுக் கொண்டு விமானத்தில் ஏறினான் நடராஜன். ஆகாயத்திலே பறந்து தாய்நாட்டு மண்ணில் காலடி எடுத்து வைத்தான்.

* * *

விமான நிலையத்தில் மகனை அன்புடன் ஆலிங்கனம் செய்து கொண்டார் டாக்டர் ராமலிங்கம். அம்மாவின் கரங்களை இறுகப் பற்றிக் கண்களில் ஒற்றிக் கொண்டான் நடராஜன். விமலா ஒரு மூலையில் வெட்கம் சூழ்ந்து கொள்ள நின்றிருந்தாள். அவள் அருகே சென்று, "சௌக்கியமா, விமலா?" என்று கேட்டான் நடராஜன்.

தலையைக் குனிந்து கொண்டாள் விமலா. அத்தானிடம் சொல்ல எத்தனை எத்தனையோ விஷயங்கள் அவளுக்கு இருந்தன. இன்று முழுதும் நாளை முழுவதும் என்றென்றும் அத்தானிடம் பேசிக் கொண்டே இருக்க வேண்டும் என்று தோன்றியது. சந்தோஷ மிகுதியால் ஒரு வார்த்தை கூட அவளால் பேச முடியவில்லை. வெட்கத்தினால் தரையைப் பார்த்து இருந்த அவளுடைய கண்கள் அத்தானின் புருவங்கள் நெரிவதைக் கவனிக்கவில்லை!

"அப்பா! நம்முடைய நர்ஸிங் ஹோமுக்காகச் சில நவீன சாதனங்களை வாங்கி யிருக்கிறேன். இன்னும் சில நாட்களில் கப்பலில் வந்து விடும்!"

"இனி உன் இஷ்டமடா! இந்த நர்ஸிங்ஹோமே உன்னுடையதுதான். நான் நிம்மதியாக ஓய்வு எடுத்துக் கொள்ளப் போகிறேன்."

"அதுதான் சரி மாமா! மாமியைக் கூடக் கவனிக்காமல் வேலை வேலை என்று நர்ஸிங்ஹோமிலேயே இத்தனை நாட்கள் இருந்து விட்டீர்கள். இப்போது எல்லாவற்றையும் நடராஜனிடம் ஒப்படைத்து விட்டு மாமியையும் அழைத்துக் கொண்டு ஒரு 'தேன் நிலவு' போய் விட்டு வாருங்கள்" என்ற குரலைக் கேட்டுத் திரும்பினான் நடராஜன்.

"மறந்தே போய் விட்டேன் நடராஜா! மணிசேகரன் வந்திருக்கிறான் பார்" என்றார் ராமலிங்கம்.

"அடே! நம்ப மணியா? தடிப் பயலே! எப்போடா வந்தே?" என்று கேட்டுக் கொண்டே மணியின் முதுகில் ஓங்கி ஒரு அறை வைத்தான் நடராஜன்.

"ஏனப்பா, நீ டாக்டராகி விட்டாய் என்பதற்காக என் முதுகெலும்பையெல்லாம் முறிக்க வேண்டுமா!" என்று கேட்டான் மணிசேகரன். எல்லோரும் 'கொல்'லென்று சிரித்தார்கள்.

காரில் வீடு திரும்பும்போது, "ஏண்டா மணி! ஏதோ 'தேன் நிலவு' என்றாயே, அது என்னடா?" என்று கேட்டாள் பொன்னம்மாள்.

"'ஹனி மூன்' மாமி, 'ஹனிமூன்!' கணவனும் மனைவியுமாக உல்லாசப் பிரயாணம் செய்து வருவது."

"அதெல்லாம் வாலிபர்களுக்குத் தான். நாளைக்கு நீ கல்யாணம் செய்து கொண்டு 'தேன் நிலவு' போய் விட்டு வா! எனக்கும் மாமிக்கும் என்ன வந்தது?" என்றார் ராமலிங்கம்.

"ஹனிமூனுக்குப் புறப்பட்டு விட்டால், உங்களுக்கெல்லாம் இளமை தானாக வந்து விடும், மாமா!"



தன் கடைக் கண்ணால் அப்போது நடராஜனைப் பார்த்தாள் விமலா. நடராஜனின் நெற்றியில் விழுந்திருந்த சுருக்கங்கள் மணிசேகரனின் பேச்சை அவன் ரசிக்கவில்லை என்பதை எடுத்துக் காட்டின. அதை உணர்ந்த விமலாவின் மனம் துணுக்குற்றது.

வீட்டுக்குத் திரும்பிய நடராஜனுக்கு ஒரு அதிசயம் காத்திருந்தது. பெரியதொரு விருந்துக்கு ஏற்பாடு செய்திருந்தார் ராமலிங்கம். விருந்தாளிகளில் அநேகர் டாக்டர்கள். அவர்களில் பலர் நடராஜனுக்கு மருத்துவக் கலாசாலையில் ஆசிரியர்களாக இருந்தவர்கள். அவர்களுடன் சமதையாக உட்காரவே கஷ்டமாக இருந்தது நடராஜனுக்கு. பயத்தினால் அல்ல; மரியாதையினால். ஒருவரை அடுத்து ஒருவராக அனைவரும் அவனுடைய கரங்களை அன்புடன் பற்றிக் குலுக்கினார்கள். நடராஜனுடைய

லண்டன் அனுபவங்களைப் பற்றியெல்லாம் கேள்வி மேல் கேள்வியாகக் கேட்டு அவனைத் திணற வைத்தார்கள். தன்னைக் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் மலர்ந்த முகத்துடன் பதில் சொல்லிக்கொண்டே வந்தான். அவன் பதிலில் இருந்த நகைச்சுவையைக் கேட்ட விருந்தினர்கள் எல்லாம் 'ஷபீர்!' 'ஷபீர்!' என்று வயிறு குலுங்கச் சிரித்தார்கள்.

இந்தக் காட்சியைக் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டே இருந்த விமலாவுக்கு ஒரே பெருமிதம்!

"படிப்பு முடிந்து விட்டது! அடுத்தது கல்யாணம்தான்!" என்றார் ஒருவர்.

"அதையும் விரைவில் முடித்துவிட வேண்டியதுதான். பெண் தயாராக இருக்கிறாள்" என்றார் ராமலிங்கம்.

நடராஜன் விமலாவைப் பார்த்தான். "காத்திருக்கிறேன், அத்தான்! உங்களுக்காக நீண்ட நாட்களாக, மாதங்களாக, வருஷங்களாக, யுகங்களாகக் காத்திருக்கிறேன் அத்தான்! என்னை ஏற்றுக் கொள்ளுங்கள்! இப்போதே இந்தக் கணமே ஏற்றுக் கொள்ளுங்கள்" என்று அவளுடைய கண்கள் கெஞ்சின. அந்தக் கண்களிலிருந்து ஒரு பெருமுயற்சி செய்து தன்னை விடுவித்துக் கொண்டு திரும்பினான் நடராஜன்.

அடுத்த கணம் அவனுடைய பார்வை மணிசேகரன் மீது விழுந்தது. 'கல்யாணம்' என்ற பேச்சைக் கேட்டதுமே ஏக்கமும் வாட்டமும் அடைந்தான் மணி. விமலாவையே பார்த்தன அவனுடைய கண்கள். அதைக் கவனித்த நடராஜனுடைய முகத்தில் சந்தேகத்தின் சாயல் படர்ந்தது.

விருந்தினர்கள் போனபிறகு நடராஜனை நர்ஸிங்ஹோமுக்கு அழைத்துச் சென்றார் ராமலிங்கம். தலைமை நர்ஸ் பவானி அவனுக்கு மலர் மாலை அணிவித்து வரவேற்றாள். நெற்றியில் திலகமிட்டு வாழ்த்தினாள். ஒவ்வொரு நோயாளிக்கும் தம் மகனைப் பெருமிதத்துடன் அறிமுகம் செய்து வைத்தார் ராமலிங்கம். பின்னர் தம்முடைய தனி அறையில் உட்கார்ந்து கொண்டு புதிதாக அனுமதிக்கப்பட்டிருந்த ஒரு நோயாளியைப் பற்றி நர்ஸ் பவானி எழுதி வைத்திருந்த குறிப்புக்களை ஆராய்வதில் ஈடுபட்டார்.

தந்தை தனி அறைக்குச் சென்ற பிறகு நடராஜன் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டான். அவர் எப்பொழுது தன்னைத் தனியே விடுவார் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்த நடராஜனுக்கு இப்பொழுதுதான் மனத் திருப்தியும் புது உணர்வும் உண்டாயிற்று.

நடராஜன் மனம் அங்கு நிலைக்கவில்லை. ஒன்றரை வருஷ காலமாகப் பிரிந்திருந்த விமலாவைத் தனியே சந்தித்துப் பேச அவனுக்கு இதுவரையில் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. இளம் காதலர்கள் மற்றவர் முன்னிலையில் என்னத்தைப் பேச! திரும்பி நடந்தான். வாசல் கதவை அவன் நெருங்கிய சமயம் சடாரென்று அது உள்பக்கமாகத் திறந்து கொண்டது. நடராஜன் நெற்றியில் பலமாக அடித்தது. "அப்பா!" என்று சொல்லிக் கொண்டே நெற்றியைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு நிமிர்ந்தான் நடராஜன்.

அவன் இதற்கு முன் பார்த்தறியாத தூய வெள்ளாடை உடுத்திய தெய்வ மங்கை போன்ற நர்ஸ் ஒருத்தி அங்கு நின்று கொண்டிருந்தாள். உதயசூரியனின் செம்பொற் கிரணங்களால் தழுவி அணைக்கப்பட்ட தாமரை மொட்டு வெடித்து மலர்வதுபோல் அவளுடைய மை தீட்டப்பட்ட நீண்ட நயனங்கள் அவனைப் பார்த்து வியப்பு மேலிட்டால் விரிந்து கொண்டன.

**(தொடரும்)**

பாலர் மலர்

# குமரி முத்து

## 9. திமிங்கிலம் விழுங்கியது!

"குமரிப் பவளம் என்பது குமரிக் கடலில்தான் இருக்கிறது. குமரிக் கடலில் இருப்பதால்தான் அதற்கு அந்தப் பெயர் வந்தது. அது உருவத்தில் மிகவும் பெரியது. மிகுந்த பிரகாசம் உள்ளது. குமரிமுத்து இருக்கும் குகைக்கு முதலில் ஒரு குகை இருக்கிறது. அதில்தான் அந்தப் பவளம் இருக்கிறது. இந்தப் பவளத்தை எடுத்துக்கொண்டு போனால்தான் குமரிமுத்து இருக்கும் நெருப்பு மலையின் கதவைத் திறக்க முடியும். ஆனால் குமரிப் பவளத்தை எடுப்பது குமரி முத்தை எடுப்பதைவிட மிகுந்த கடினமான காரியம். அந்தப் பவளத்தை எத்தனையோ காலமாக ஒரு கடல் சிலந்தி பாதுகாத்து வருகிறது. அதைக் கொல்லாமல் அந்தப் பவளத்தை எடுக்க முடியாது. ஆனால் அதைக் கொல்வதென்பது இலேசுபட்ட காரியமில்லை" என்று சொல்லிக் கொண்டே போயிற்று அந்தப் பெரிய நண்டு.

இந்த இடத்தில் வீராங்கன் கப்பென்று தனது காதுகளைப் பொத்திக் கொண்டான். இதைக் கவனித்த இரண்டு நண்டுகளும், "அஞ்சாதே, வீராங்கா! உன்னிடமிருக்கும் நெஞ்சுத் துணிவுக்கு நீ நிச்சயம் வெற்றி அடையப் போகிறாய். முதலில் எப்படியாவது அந்தக் கடல் சிலந்தியைக் கொன்று குமரிப் பவளத்தைக் கைப்பற்றிக் கொள். பிறகு குமரி முத்தைச் சுலபமாக அடைந்து விடலாம். பிறகு இரண்டையும் எடுத்துக் கொண்டு இங்கே வந்து சேர்ந்துவிடு. உன்னால் தான் நாங்கள் சாபம் நீங்கி விமோசனம் அடைய வேண்டும். இந்தா! இந்தப் பவளக்கொடியை இடுப்பில் கட்டிக் கொள். உன்னுடைய ஆபத்துக் காலத்தில் இதை இடுப்பிலிருந்து அறுத்து, என்ன செய்ய வேண்டுமென்று நீ நினைத்தாலும் அதை இது நிறைவேற்றி வைக்கும்" என்று கூறி ஒரு அழகிய பவளக் கொடியை அவனிடம் கொடுத்தன.

விஜயா

# சேத்தூர் கூத்தன்

வீராங்கன் அதை அன்போடு வாங்கி இடுப்பில் கட்டிக் கொண்டான். பிறகு நண்டுகள் காட்டிய வழியில் பாய்ந்து நீரில் மீனைப் போல் நீந்தத் துவங்கினான்.

அவன் இவ்வாறு எண்ணியபடி நீந்திக் கொண்டிருக்கும்பொழுதே நீரின் வேகம் சில இடங்களில் அதிகமாக இருந்தது. சில இடங்களில் தண்ணீர் சக்கரம்போல் சுற்றிக் கொண்டிருந்தது. சில இடங்களில் கடல் நீர் காட்டாறுபோல் ஒரு போக்காக வெகு வேகத்தோடு ஓடிக் கொண்டிருந்தது. இன்னும் சில இடங்களில் எதிரே பெரிய பெரிய மலைகள் இருந்தன. அவற்றைக் கடக்கப் பல காத தூரம் சுற்ற வேண்டியதாயிற்று. வேறு சில இடங்களில் அடர்த்தியான கடற் காடுகள் வழியை மறைத்துக் கொண்டு வெகு தூரத்துக்கு வெகு தூரம் பரவி இருந்தன. இந்தக் காடுகளின் வழியாகப் புகுந்து சென்ற பொழுதெல்லாம் வீராங்கன் பட்ட துன்பம் சொல்லும் தரமன்று. பலவித நீர் மிருகங்கள் அவனுக்குப் பெரிதும் தொல்லை அளித்தன. அதே சமயத்தில் வர்ணனைக்குக் கட்டுப்படாத சில அழகிய காட்சிகளையும் அவன் கண்டு ஆனந்த முற்றான். ஆகா! எத்தனை நிறமுள்ள விதவிதமான பாசிகள்! எத்தனை வகையான செடிகொடிகள்; எத்தனை வகையான மீன் வகைகள்! இன்னும் எவ்வளவோ அவன் கண்களுக்குத் தென்பட்டன.

குமரிக் கடலின் அழகையும், அதிசயத்தையும், ஆபத்தையும் அனுபவித்துக் கொண்டே நீந்திக் கொண்டிருந்தான் வீராங்கன். கை சளைத்த பொழுதெல்லாம் கடலின் அடிவாரத்திலிருந்த குன்றுகளில் சிறிது நேரம் தங்கிக் களைப்பாறிக் கொண்டான். இப்படிச் சில நாட்கள் பிரயாணம் செய்து பவளக் குகையை அடைவதற்கு இன்னும் ஒருநாள் பிரயாணம் கூட இருக்காது என்று நண்டுகள் கூறிய அடையாளத்தி லிருந்து புரிந்து கொண்டான். அதன் பின்பு மேற்கொண்டு பிரயாணம் செய்ய அவன் விரும்பவில்லை. அந்த இடத்திலேயே ஒரு பாறையைப் பிடித்துக் கொண்டு வசதியாக உட்கார்ந்து விட்டான். இந்த இடத்தில் இருப்பதைக் கூடக் கடல் சிலந்தி தெரிந்து கொண்டிருக்குமோ என்ற ஐயம் அவனுக்கு எழுந்தது.

அவன் பலவாறுஞ் சிந்தித்தான். கடல் சிலந்தியின் கண்களில் மண்ணைத் தூவுவதென்பது நடக்காத காரியம். அதைக் கொன்று போட்டால் ஒழிய, பவளக் குகைக் குள் புக முடியாது. அப்படிக் கொல்ல நினைத்துப் பதுங்கிப் பதுங்கிச் செல்வதென்பதும் முடியாததாகும். ஏனெனில் குகையை நெருங்கும் முன்பே அன்னியர்களின் வருகையை அறிந்து கொள்ளும் சக்தி அந்தக் கடல் சிலந்திக்கு உண்டு.

இப்படி வீராங்கனின் சிந்தனை ஓடிக் கொண்டிருக்கும்பொழுது அவன் கடந்து வந்த திசையில் வெகு தூரத்தில் ஏதோ 'தட தட'வென்று நீரைக் கிழித்துக் கொண்டு வருவதுபோல் தெரிந்தது. சற்று நேரத்தில் அந்த நீர் பிராந்தியம் முழுவதும் அப்படியும் இப்படியும் ஆடியது. இவ்வளவு அமர்க்களத்தோடு வருவது பிரும்மாண்டமான கடல் மிருகம் என்பதில் சந்தேகமில்லை. சுறா அல்லது திமிங்கிலமாகத்தான் இருக்க வேண்டும்.

வீராங்கனுக்குக் குலைநடுக்கம் கண்டது. சுறாவிடமும் திமிங்கிலத்திடமும் சண்டை யிட்டு ஜெயிப்பது என்பது மனித இனத்தில் பிறந்த எவராலும் முடியாத செயலாகும்.



நொடிக்கு நொடி அந்த மிருகம் அவனை நெருங்கிக் கொண்டிருந்தது. இப்பொழுது அவன் கண்களுக்குக்கூட அது மங்கலாகப் புலப்பட்டது. என்ன பயங்கரம்! அது ஒரு திமிங்கிலம்தான். வரும்பொழுதே அது தன்னுடைய பெரிய வாயை அகல விரித்த படியே வந்து கொண்டிருந்தது. அப்படித் திறந்திருந்த வாயில் ஒரே சமயத்தில் நூறு யானைகளைப் போடலாம் போல் இருந்தது. ஆகா! என்ன பயங்கரம்!

விராங்கன் ஒரு புதிய விராங்கனாக மாறினான். அவன் உடலில் ஒரு புதிய பலமும் ஒரு புதிய உற்சாகமும் பிறந்தன. உடனே ஈட்டியையும் கத்தியையும் தயாராக எடுத்து இரண்டு கைகளிலும் வைத்துக் கொண்டான். திமிங்கிலத்தை எந்த முறையில் வெற்றி கொள்வது என்பதைக் குறித்து நொடியில் தீர்மானித்துக் கொண்டான்.

திமிங்கிலம் அவனை நெருங்கியது. அது அவனை விழுங்க யத்தனிக்கும் முன்பே விராங்கன் எதிர்பாராத ஒன்றைச் செய்தான். ஒரு உந்து உந்தித் திமிங்கிலத்தின் வாய்க்குள் பாய்ந்தான். அடுத்த நிமிஷம் திமிங்கிலத்தின் வாய் 'கபக்'கென்று மூடிக் கொண்டு விட்டது.

திமிங்கிலத்தின் மூடிய வாய்க்குள் ஒரே கும்மிருட்டாக இருந்தது. விராங்கன் அதைப் பொருட்படுத்தாமல் தன் கையிலிருந்த வாளால் வாழைப்பட்டையைச் சீவுவதுபோல் 'சரக் சரக்'கென்று திமிங்கிலத்தின் தசைச் சுவர்களைச் சீவ ஆரம்பித்தான். என்ன துணிச்சல்!

இதனால் திமிங்கிலம் அடைந்த வேதனையை விவரிக்க முடியாது. இப்படியும் அப்படியும் புரண்டது. 'சர்' என்ற பயங்கரச் சத்தத்தை எழுப்பியது. 'படீர் படீர்' என்று கடலே கிழிந்து போகும்படி தன் வாலினால் அடித்துக் கொண்டது. வாயைத் திறந்து தன் வாயிலிருக்கும் விராங்கனை வெளியே தள்ள முயன்றது.

ஆனால் விராங்கன் தசைச் சுவர்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு வெளியே வந்து விழாமல் சமாளித்துக் கொண்டான். அவனுக்கு ஒரு அபூர்வ யோசனை பிறந்தது. இந்தத் திமிங்கிலத்தைக் கொண்டே கடல் சிலந்தியைத் தீர்த்துக்கட்ட வழிவகுத்தான்.

இந்த யோசனை பிறந்ததும் தன் கையிலிருந்த வாளாலும் ஈட்டியாலும் இன்னும் மும்முரமாகத் திமிங்கிலத்தைத் தாக்கினான். திமிங்கிலம் படாதபாடு பட்டது. பக்கத்திலிருந்த பாறை குன்றுகளையெல்லாம் இடித்து நொறுக்கியது. பாசிப் புதர்களையெல்லாம் தகர்த்து நொறுக்கியது. மனம் போன போக்கில் நீரைக் கிழித்துக் கொண்டு விரைந்தது.

அது போகும் திசை எது என்று கவனித்தான் விராங்கன். அதை அறிந்ததும் அவனுக்கு அளவற்ற மகிழ்ச்சி உண்டாயிற்று. ஏனென்றால் திமிங்கிலம் சென்ற திசையில் தான் பவளக் குகை இருந்தது. இது செல்லும் வேகத்தில் பவளக் குகை சேதமுறுவது நிச்சயம். அப்படிச் சேதமுற்றால் கடல் சிலந்தி சினம் கொண்டு திமிங்கிலத்தைத் தாக்க முற்படும். அந்தச் சந்தர்ப்பத்தைத் தகுந்தபடி பயன்படுத்திக் கொள்ள வேண்டுமென்று எண்ணினான். (தொடரும்)

# நாட்டு வைத்தியம்

ஸ்ரீஹரி

## 60. ஈஸினோபைல்...

தொடர்ந்தும்மல், மூக்கு அடைப்பு, சிந்தினால் சிறிதே வெளிப்படும் சளி, தலை கனம், சிறு தலைவலி, கண்ணெரிச்சல், பொதுவாக ஜுரம் உள்ளது போல்—'கண-கண' வென்று செங்கற் சூளை கணக்கில் உஷ்ணம். பசியின்மை, ருசியின்மை தொண்டையின் இரு புறத்திலும் உள்ள ('டான்ஸில்' என்னும்) களகண்டிகள் என்னும் கிரந்திகள் பருத்தல்; அவ்வப்போது அழற்சியுற்று... வலியும் வீக்கமும் அதிகரித்தல்-சில சமயம் இதற்காக அடிக்கடி வரும் ஜுரம்; உவுலா என்னும் அண்ணாக்கு நீண்டு தொண்டையின் உட்புறத்தை அடைக்குமாறு தொங்கிக் கொண்டோ-படுக்கும் நேரத்தில் வீழ்ந்து சுவாசம் செல்லும் வழியில் தடைபோல் கிடந்து நெஞ்சில் ஒரு குறுகுறுப்புடன் வாய் ஓயாத வறட்டு இருமலை யுண்டாக்குதல், நெடு நேரம் இருமி இருமிக் களைப்புறும் நேரத்தில் சிறிது கபத்தைத் துப்பிச் சற்றுச் சமனம் பெறுதல்; காதில் சீழ் வடிதல்-குத்தல் வலி என்று ஏற்பட்டுக் காலக்கிரமத்தில் கேட்கும் சக்தியே குறைவுபடத் தொடங்கி விடுதல்—முகவாய்க் கட்டையின் கீழ்ப் புறத்திலும் கழுத்தைச் சுற்றியும் கோலிகள் போல் கிரந்திகள் பருமனாகிச் சிறிது நோவுடனிருத்தல். எல்லாவற்றுக்கும் மேலாக ஏதோ ஓரளவு சாப்பிட்டாலும், உடம்பு புஷ்டி பெறாமல் தினம் தினம் மெலிந்து வருவதுடன் ஓரளவு பலஹீனமும் ஏற்படுதல்.

பொடி இருமல் காலக்கிரமத்தில் தொடர் இருமலாகுதல்; தொடர்ந்து இருமி இருமிக் கொண்டே சரிவர மூச்சு விட முடியாமல் திணறுதல்—சுவாசம் முட்டுதல். அதே சமயம்—நெஞ்சிலும் மார்பிலும் உறைந்து போயுள்ள கபத்தின் காரணமாக மூச்சு விடும்போது பல ஸ்வரங்களுடன் 'நெஞ்சில் ஏழு பூனைக் குட்டிகள் கியங் — மியங் என்று சப்திக்கின்றன' என்று நோயாளியே சொல்வதும், நமக்கும் தெளிவாகத் தெரிதல் என்ற நிலையில் சுவாசகாஸம் என்னும் ஆஸ்த்மாவாகப் பரிணமித்தல். இந் நிலையில் சுவாசம் விடுவது 'புறாக் களைப் போல்' கூவிக் கேவலுடன்-காற்றைச் சிறிதளவே உள்ளே இழுத்துப் பிறகு மிக மிக நீண்ட நேரத்தில் வெகு சிரமத்துடன் வெளிவிடுகிறதென்ற முறையில் உச்சுவாஸ — நிச்சுவாஸங்களைச் செய்தல்-காற்றை வெளியே விடுங் காலத்தில் விலாப்புறமெல்லாம் கொக்கி போட்டு இழுப்பது போன்ற சகிக்க முடியாத வலியுடன் தேகம் முழுவதுமே ஒரு களைப்புத் தோன்றுமளவு பிரயாசம் ஏற்படுதல்; மூச்சுத் திணறுவதால் பேசவும் கஷ்டப்படுதல், பசி, ருசி இல்லாமை, படுக்கவே முடியாமல் — உட்கார்ந்தபடியே எதிரில் மார்பு உயரத்தில் அடுக்கிய தலையணைகளின்மேல் கைகளை மடக்கி யூன்றித் தலையை முட்ட விட்டபடி இருத்தல் - தூக்கமின்மை, மலபந்தம் என்று படிப்படியாக அதிகரித்துக் கொண்டே போய், இருமுவது-இருமிச் சளியுடன் ரத்தம் துப்புவது - அல்லது தனித்த ரத்தமே துப்புவது என்ற இப்படியெல்லாம் பரிணமிக்கும் நோய் - என்ன தெரியுமா? ஆரம்பத்தில் சரிவரச் சிரத்தையுடன் கவனிக்காமல் விட்ட இருமல்.

இவ்வளவு நீண்ட பெரிய புராணத்தின் மையமாக நிற்கும் இந்த ரோகத்துடன் போராடி, ரோகத்தின் வலிமையைக் குறைக்கவும், ஒரு நிலையிலிருந்து ஒரு நிலைக்கென முற்றாமல் அதைத் தடுக்கவும், கூடுமானால் இதை அறவே ஒழித்துவிடவும் முயற்சி செய்யும் சகஜ சக்தியின் குறியாக, இதன் ஆரம்பத்திலிருந்தே இதில் அதிகரித்த ஈஸினோபைல்கள் ஏற்படுவதும், ரோகத்தின் வெவ்வேறு அவஸ்தைகளுக்குத் தக்கபடி இவற்றின் சதவிகிதம் ஏறிக்கொண்டே போவதும் நாம் காணக் கிடைக்கும் முக்கியமான குடையமாகும்.

இந்த ஈஸினோபைல்களின் நிலைமை அதிகரித்திருக்குமானால் வியாதியுடன் போராட முனைந்துள்ள சகஜ சக்தியும் உயர்ந்திருப்பதாகக் கருதலாம். அவ்விதமே, இவ்வளவு அதிக சத விகிதத்திலுள்ள ஈஸினோபைல்கள் மும்முரமாகப் போரிடுவதாயின் வியாதியும் பலமான நிலையில் இருக்கிறதென்றும் ஊகிக்கலாம். இந் நிலையில் ஈஸினோபைல்களுக்கு அதிக சக்தியைக் கொடுக்கும் வகையில் அந்த ஈஸினோபைல்கள் சாதிக்கக் கூடியதை நம் மருந்தினால் சாதிக்க வகை செய்வோமாயின், அதுவே போதுமானதாகும். இவ் வகையில் நமது மருந்துகளின் உதவி சிறிது இருந்தாலும்

போதும். அதனால் ஈஸினோபைல்கள் பெருஞ் சாதனைகளையும் பயக்கும்.

இதற்கு மாறாக ஈஸினோபைல்களின் சதவிகிதம் சிறிதளவே அதிகரித்து, ரோகத்தின் கடுமை அதிகமாகவும் இருக்குமானால் மருந்தினால் சாதிக்க வேண்டியது மேரு அளவாக இருக்கும். இது எளிதில் சாதிக்கக் கூடியதல்ல. ஆகவே ஈஸினோபைல்களுக்கு உறுதுணையாக, 'ஸமான ஸ்கந்தம்' என்ற வகையில் மருந்துகளைப் பயன்தர உபயோகிப்பதாயின் இயற்கையின் செயல் மகத்தானதாயும் அதற்கு உறுதுணையாக நம் முயற்சியால் உதவும் மருந்துகள் அமைவதுந்தான் விரும்பத் தக்கது. இயற்கையின் செயல் இந்த ஈஸினோபைல்கள் மூலந்தான்கிடைக்கும். ஆகவே ஈஸினோபைல்கள் நமது ஆரோக்கியத்தைக் காப்பாற்ற, வந்துள்ள நோயைப் போக்க-இயற்கையின் படைகளாகும். இவற்றை இவ்வகையில் ஏற்காமல், இந்த ஈஸினோபைல்கள்தான் ரோகத்துக்குக் காரணம் என்று எண்ணி அவற்றை மாய்க்கவல்ல பாஷாணத்தின் வகையில் ஒன்றான 'ஆர்ஸனிக்' என்னும் விஷத்தை உபயோகிப்பது கோட்டைக்குள் படைவெட்டிற்கு ஏற்பாடு செய்யும் சதிக்கு ஒப்பாகும்.



இனிஇவ்விதரோகத்தில், பல்வேறு நிலையில், ஈஸினோபைல்களை மாய்க்காமல், அவற்றுக்குத் துணை புரியும் வகையில் என்னென்ன மருந்துகளை எப்படியெல்லாம் உபயோகித்து வியாதியைக் குணப்படுத்தவும், வியாதி சாந்த பிராயமாவதால், யுத்தத்துக்குப் பிறகு, படைபலத்தைக் குறைப்பது போல் ஈஸினோபைல்களும் தாமாகவே குறையவும் செய்யலாமென்ற விஷயத்தைக் கவனிப்பது அவசியம்.

இவ்விஷயமாகச் சந்தர்ப்பம் வாய்த்த போதெல்லாம் பல எளிய மருந்து முறைகளைத் தெரிவித்துள்ளேன். நேரில் எழுதிக்கேட்ட நேயர்களுக்குக் கடிதம் மூலம் தெரிவித்துள்ளேன்.

அவற்றையே மறுபடியும் மறுபடியும் எழுதுவது, வாசகர்களுக்கு ருசிக்காது. ஆகவே, இதுவரையில் எழுதாத, தமிழில் சித்தர் பரம்பரையாக வந்து கிடைக்கப்பெற்ற முறைகளை முதலில் விளக்கி விட்டுப் பிறகு, சொன்னதைச் சொல்வதாலும் பாதகமில்லை எனத் துணிந்து எனது அனுபவத்தில் சிறந்ததெனத் தெளிந்த முறைகளைத் தெரிவிக்கிறேன்.

அதிகரித்த சூட்டினால் ஏற்படும் வறட்டு இருமலில் (ஆரம்ப நிலையில்):

1. அதிமதுரம், கடுக்காய், மிளகு இவற்றை ஏராளமாக எடுத்து இளவறுப்பாய் வறுத்துப் பொடி செய்து, வேளைக்கு அரை வராகன் எடையாகத் தினம் 3, 4 வேளை தேனில் குழைத்துக் கொடுக்கலாம்.

2. அதிமதுரப் பால்:—அதிமதுரம் பத்துப் பலத்தைப் பெருந்தூளாக இடித்து எட்டு ஆழாக்கு ஜலம் விட்டு அதில் 12 மணி நேரம் ஊறவைக்கவும். பிறகு மருந்தைக் கசக்கி நீரை இறுத்தெடுத்துக்கொண்டு, மருந்தின்திப்பியில் ஒரு ஆழாக்கு கொதிக்கும் சூடுள்ள நீரை விட்டு ஆறுமணிநேரம் ஊறவிட்டு முன் போலவே ஊறல் நீரை இறுத்துக் கொள்ளவும். இவ்விருவகை நீர்களையும் ஒன்றாய்க் கூட்டி அடுப்பில் ஏற்றிச் சிறு தீயிட்டு மெழுகு பதமாகும் வரையில் காய்ச்சி எடுத்துக் கொள்ளவும். சூடாறினால் மேலுஞ் சிறிது கெட்டியாகிவிடும். இதில் ¼—½ வராகனிடையை வாயிலிட்டுக் கவைத்துக் கொண்டிருப்பதும் மேற்சொன்ன இனத்தைச் சேர்ந்த இருமலில் நல்லது. தினம் 3, 4 தரம் இதை உபயோகிக்கலாம்.

3. ஒரு சிறிய துண்டு சிற்றரத்தையை (இதைச் சிலர் ஸந்நராஷ்ட்ரம் என்பர்) வாயிலிட்டுக் கவைத்துவர, தொண்டையில் கட்டும் கோழை, வாந்தி, இருமல், இவை தணியும்.

அழலோடு உண்டாகும் கோழைக் கட்டுக்கு இதை ஒரு துண்டுசீனி கற்கண்டுடன் சேர்த்து உபயோகிப்பது நலம்.

4. சிற்றரத்தை, அதிமதுரம், தாளீசபத்ரி, திப்பிலி இவற்றை வகைக்கு ஒரு வராகனிடையாக எடுத்து வைத்துக் கொள்ளவும். இவற்றை அம்மியில் நீர் விட்டு வெண்ணெய்போல் அரைத்துக் கால் ஆழாக்கு ஜலத்தில் கலந்து பொங்க விட்டு இறக்கி ஆறின பிறகு, சிறிது தேனுங்கூட்டிக் குடிக்கவும்.

வயதுக்குத் தக்கபடி இதை ஒவ்வொரு ஸ்பூனை ஒரு தினத்தில் பல தரமாகப் பருகி வருவதும் நல்லது. இதனால் இருமல், கோழைக் கட்டி, குத்திருமல், தலைவலி, சீதளம், ஜுரம், உடம்பு வலி இவை யெல்லாம் அறவே நீங்கி விடும் என்பதில் ஐயமில்லை.




## சுதந்திரப் போர்

**ப**ல்லாண்டுகளாக அடிமைப்பட்டுக்கிடந்த நமது பாரத தேசம் விடுதலை பெற்றுச் சுதந்திர ஆட்சி தொடங்கிய பிறகு, பழைய சரித்திர ஏடுகளைப் புரட்ட எல்லோருக்கும் ஆர்வம் ஏற்படுவது இயல்பு. அதிலும் குறிப்பாக, மாணவர் சமூகம் அந்தப் பழைய சரித்திர கால நிகழ்ச்சிகளை அறிந்து கொள்ளுவது மிக மிக அவசியமாகும். ஆயிரத்து எண்ணூற்று ஐம்பத்தேழாம் ஆண்டிலே நமது பாரத மக்கள் பொங்கியெழுந்து ஆங்கில ஆட்சிக்கு எதிராகக் கிளர்ச்சி செய்தனர். அது சிப்பாய்க் கலகம் என்று ஆங்கிலேயரால் வர்ணிக்கப் பட்டது. ஆனால் உண்மையில் அது அன்னிய ஆட்சியை எதிர்த்து மக்கள் கொடுத்த குரலின் முதல் முழக்கம் என்பது அனைவருக்கும் தெரியும்.

நூறு ஆண்டுகளுக்கு முன்பு நடந்த சுதந்திரப் போரை இந் நூல் விவரமாகக் கூறுகிறது. அந்தச் சுதந்திர மகா யுத்தத்துக்கு மூல காரணங்கள் என்னென்ன? அதைத் தூண்டிவிட்ட மூல புருஷர்கள் யார்? அவர்களின் வரலாறு யாது? யுத்த நிகழ்ச்சிகள் யாவை? அவற்றின் முடிவு யாது என்னும் கேள்விகளைக் கேட்டுக் கொண்டு இந் நூலைப் படித்தால் பாரதநாட்டின் சுதந்திரப் போரின் உன்னத நிகழ்ச்சிகளை மிகவும் விரிவாக அறிந்து கொள்ளலாம். வீரம் செறிந்த தமிழில் நூலாசிரியர் பாரத நாட்டு மாபெரும் வரலாற்றைச் சுவையோடு சுருங்கச் சொல்லி விளங்க வைத்திருக்கிறார். 367 பக்கங்கள் கொண்ட இந் நூல் பாரத சுதந்திர யுத்தத்தைப் பற்றிய வரலாற்றையும் பல சுவையுள்ள உண்மை நிகழ்ச்சிகளையும் கொண்டு சமயத்துக்கு ஏற்ற நூலாக விளங்குகிறது. இத்தகைய சரித்திர நூல்கள்தான், மக்களின் சுதந்திர வளர்ச்சி, வீரம், நாட்டுக்காக எவ்விதத் தியாகமும் செய்ய வேண்டும் என்ற மனஉறுதி முதலியவற்றை வளர்த்து, நாட்டின் சுதந்திரத்தையும் பெருமையையும் பாதுகாக்க உதவுகின்றன.

எழுதியவர்: எம். எஸ். சுப்பிரமணிய ஐயர்; பிரசுரம்: ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம், 53-56, பவழக்காரத் தெரு, சென்னை; விலை: ரூ. 4.

## The Seven Hours of a Non Gazetted Officer

**இ**ந்த நூலின் ஆசிரியரான ஸ்ரீ பி. சுப்பிரமணியம் முப்பத்தாறு வருஷங்கள் சர்க்கார் ஊழியராக இருந்து, உபகாரச் சம்பளம் பெற்று விலகியவர். சாதாரண என். ஜி. ஓ. வாகத் தமதுவாழ்க்கையை ஆரம்பித்த அவர், தமது உழைப்பினாலும் திறமையினாலும் ஜில்லா கோர்ட் சிரஸ்தாதார் பதவிக்கு வருவது சாத்தியமாயிற்று. எனவே, அவர் பெற்ற பல அநுபவங்கள் இந்தப் புத்தகத்தில் சுவை ததும்ப விவரிக்கப்பட்டிருக்கின்றன.

உத்தியோக ஏணியின் முதற்படியிலிருந்து உச்சிப்படிக்கு எப்படி ஏறுவது? உத்தியோக சம்பந்தமான விசேஷப் பரீட்சைகளில் எப்படித் தேர்ச்சி பெறுவது? உத்தியோக சம்பந்தமாக ஏற்படும் கஷ்டங்களுக்கும், குறைகளுக்கும் எவ்விதம் பரிகாரம் தேடுவது? இவை போன்ற மகுடங்களின் கீழ் இந்த நூலில் ஏழு அத்தியாயங்கள் அடங்கியுள்ளன. இப் புத்தகத்தை வாசிப்போர் பலன் அடைவார்கள் என்று ஸ்ரீ ஆர். வி. கிருஷ்ண ஐயர் எழுதியுள்ள தமது சிறப்புரையில் குறிப்பிட்டிருக்கிறார். ராஜாஜியின் வாழ்த்தும் ஆசியும் இந்த நூலுக்குத் தனி மதிப்புக் கொடுத்துள்ளன.

கிடைக்குமிடம்: வி. சுப்பிரமணியம், 5, கிழக்கு மாட வீதி, மயிலாப்பூர், சென்னை; விலை: ரூ. 1.

## ஸ்ரீ சுப்பிரமணிய புஜங்க ஸ்தோத்திரம்

**ஸ்ரீ** ஆதி சங்கராச்சார்ய சுவாமிகள் அருளிய தேனினும் இனிய பக்தி ஸ்தோத்திரங்களில், ஸ்ரீ சுப்பிரமண்ய புஜங்க ஸ்தோத்திரம் மிக முக்கியமானது. முருகக் கடவுளின் அருமை பெருமைகளை வர்ணிக்கும் இந்தத் தோத்திரத்தைப் பாலர் முதல் பண்டிதர் வரை எல்லோரும் வாசித்து, பாராயணம் செய்து பயன் பெறலாம். இப் புத்தகத்தில் நாகரலிபியிலும் தமிழிலும் சுலோகங்கள் வெளியாகியிருப்பதுடன், சுலோகங்களுக்குத் தமிழில் உரையும் கொடுக்கப்பட்டிருக்கிறது. பக்தி ததும்பும் இந்த அருமையான தோத்திர புத்தகத்தின் விலை இரண்டு அணாதான்!

கிடைக்குமிடம்: வி. எம். ஜெயராமன், நந்திக் கோவில் தெரு, திருச்சி.

## மிருதங்கஸ்வர போதினி (இரண்டாம் பாகம்)

**மி**ருதங்க வாத்தியத்தைப் பயில விரும்பும் ஆரம்ப மாணவர்களுக்கு உபயோகமாக ஏற்கனவே மிருதங்கஸ்வர போதினியின் முதல் பாகம் வெளிவந்திருக்கிறது. அதில் மிருதங்கம் பயிலத் தொடங்குபவர்களுக்கு முதலில் தெரிய வேண்டிய விஷயங்களையெல்லாம் தெளிவாகப் படங்களுடன் விளக்கியிருக்கிறார் ஆசிரியர். இரண்டாம் பாகத்தில், மேலும் அப்பியாசங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. குறுகிய காலத்தில் இளைஞர்கள் மிருதங்கத்தில் நல்ல பயிற்சி பெறுவதற்கு இந்நூல் ஓர் அரிய சாதனம். எளிய முறையில், இந்த அரிய வித்தையை மாணவர்களுக்கு அளிக்க முன்வந்துள்ள மிருதங்க வித்தியாலய டைரக்டர் சோமங்கலம் எதிராஜன் அவர்கள் பாராட்டுக்கு உரியவர்.

ஆசிரியர்: சோமங்கலம் எதிராஜன்; டைரக்டர், மிருதங்கவித்தியாலயம், 6, நாராயண ரெட்டித் தெரு, அகரம், சென்னை—11; விலை: ரூ. 1—35.







**ஒரு காலனைக் கொண்டே அதிகமான இடத்திற்குப் பூசமுடியும்**

உட்புறமோ, வெளிப்புறமோ, எந்தப்புறமானாலும் பூசலாம்

**SHALIMAR PAINT, COLOUR & VARNISH CO., PRIVATE LTD.**

CALCUTTA • BOMBAY • MADRAS • NEW DELHI • KANPUR

கி.பி. 1799-ம் ஆண்டு!

''வேற்று நாட்டானுக்குத் தலைவணங்காத தமிழகத்தை, வெள்ளையனின் கையில் சிக்கி விடாமல் காப்பாற்றிக் கொடுத்த வீரன் அவன்!''

''மறத்தமிழ் மண்ணை மிதித்த, வெள்ளையனை விரட்டி அடித்த வீரன்!''

இப்படிப் பல வகை எழுதுகோல்களினால் இன்று பாராட்டப்படுகிற வீரபாண்டிய கட்டபொம்மன், கயத்தாறு புளியமரத்தில் தூக்கிலிடப்பட்டுத் துடித்தான். அவன் துடிப்பு ஓய்ந்த பிறகு......

பகைவர்கள் நிமிர்ந்து பார்த்து, நெஞ்சு அதிர்ந்து அஞ்சிய பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டை தரைமட்டமாயிற்று. தொடர்ந்து, திருநெல்வேலிச் சீமையில், கோட்டை என்ற பெயரோடு ஒரு சிறு சுவர்கூட இல்லாது, அத்தனையும் அழிக்கப்பட்டன!

ஊமைத்துரையும், கட்டபொம்மனின் உறவினரும், பாளையங்கோட்டைச் சிறையில் அடைபட்டுக் கிடந்தனர்.

பரங்கிப்பிடியில் அகப்பட்ட பாளையப்பட்டின் அதிபர்கள் அத்தனை பேரும், ஆயுதங்கள் வைத்துக் கொள்ளவோ, ஆட்சியாளருக்கு எதிரான செயல்களில் ஈடுபடவோ, ஈடுபட்டோரை ஆதரிக்கவோ கூடாது என்ற இராணுவக் கட்டளைக்குப் பணிந்து, கைகட்டிக் கிடந்தனர்.

சூரர்கள் கத்தியும் கையுமாக உலவிய நெல்லைச் சீமை யெங்கும், ஒரே சூன்யம்! அந்தச் சூன்ய நிலையிலும், புரட்சியின் மெல்லிய குரல் ஒலிக்காமல் இல்லை!

கி. பி. 1801 ம் ஆண்டு!

புரட்சி வீரர்கள், பாளையங்கோட்டைச் சிறையில் புகுந்தனர். வீரன் ஊமைத்துரை வெளியேறினான்!

குகையை விட்டுப் புறப்பட்ட புலி, வேட்டைக்காரனிடம் சென்று பணிவதில்லை. சிறைவிட்டுச் சென்ற ஊமைத்துரை, ஒரே இரவில், ஒரே இலட்சியத்தோடு மூப்பது கற்களைக் கடந்தான்.

விடிந்தது! அவனுடைய இலட்சியம் தன் வேலையைத் தொடங்கியது.

வீரர்களையும், வேண்டிய ஆயுதங்களையும் சேர்த்தான்! மாதக்கணக்கில் கட்டபொம்மன் எழுப்பி, மணிக்கணக்கில் 'பானர்மேன்' இடித்துத் தரைமட்டமாக்கிய பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையை இன்னும் உறுதி உள்ளதாக இரண்டு வாரங்களில், இருபத்து ஐயாயிரம் வீரர்களைக் கொண்டு, இரவு பகலாகப் பாடுபட்டுக் கட்டி முடித்தான்.

மறு உருவம் பெற்ற பாஞ்சைக் கோட்டையின் உச்சியில் நின்று, மின்னல் நிகர் வாளினைப் பிடித்துக் கொண்டு, வீரன் ஊமைத்துரை நாற்புறமும் தனது விழிகளை உருளவிட்டான்! சென்னைக் கோட்டையிலும், பாளையங் கோட்டையிலும், திருச்சியிலும் இருந்த வெள்ளைப் பட்டாளம், அவன் அகக் கண்களுக்கு முன்னே, சேர்ந்து ஊர்ந்து வரும் சிற்றெறும்புகளாகக் காட்சி தந்தது.

தூக்கிலே தொங்கிய தமையன்—துரோகிகளான எட்டயபுரம் - ஊற்றுமலை - சிவகிரி பாளையப்பட்டுக்களின் அதிபர்கள் — புதுக் கோட்டை தொண்டைமான் — பொல்லாத பானர்மேன்—இப்படி ஒவ்வொருவரும் மாறி மாறி அவன் உள்ளத்துத் திரையில் தோன்றினர். வானத்துக்கு நேரே வாளை உயர்த்திப் பிடித்து, ''நீல வானே! நீதான் திரிகால ஞானி! மண்ணில் நடக்கின்ற ஒவ்வொரு செயலும் உன் பார்வையில் படுகிறது. கடந்த காலம் உனக்குத் தெரியும். நிகழ்காலம் நீ அறிவாய். வருங் காலத்தை உன்னால் ஊகிக்க முடியும். இதோ, நான் வாள் உயர்த்தியிருக்கிறேன். உன்மீது ஆணையாகச் சொல்கிறேன். தமையன் தூக்கிலிடப்பட்டான் என்ற ரத்தபாசத்தின் காரணமாக நான் வாள் உயர்த்தவில்லை. தாய் மண்ணில் வெள்ளையன்



# சிங்கத் தேவன்

ஆரூர்தாஸ்

அடிச்சுவடு இனி தெரியக் கூடாது என்று நாட்டுப் பாசத்தின் காரணமாக வாள் தூக்கியிருக்கிறேன். என் வீர ஜக்கம்மாவைத் தவிர, வேறு யாரைப் பற்றியும் இந்த உலகில் நான் கவலை கொள்ளேன் — வருகிறேன்'' என்று கூறிவிட்டுக் கோட்டை உச்சியின் நிலா முற்றத்தை விட்டுக் கீழே இறங்கி வந்தான்.

கத்திகளின் சத்தமும், கைக்குண்டு வீச்சும் பீரங்கி முழக்கமும், ஒன்றுசேர்ந்து உண்டாக்கிய மரண ஓலம் மீண்டும் பாஞ்சாலங்குறிச்சியில் படர்ந்தது. 1799 முதல் 1801 வரை வறண்டிருந்த பாஞ்சை பூமியின் வெடிப்புகளில் ரத்த வெள்ளம் பாய்ந்தது!

பகல் இரவென்று பாராது, வெள்ளையர் வெடிகுண்டுகளைப் பாஞ்சை மக்கள் அத்தனை பேரும் ஊமைத்துரையின் தலைமையில், கோட்டைக்குள்ளிருந்து அதைப் பாதுகாக்கப் பாடுபட்டனர்.

இறுதியில், குண்டு மாரியால் கோட்டை சரிந்தது. கும்பினிப் பட்டாளம் உள்ளே நுழைந்தது. பெருகி வரும் வெள்ளம்போல் பேரிரைச்சலோடு பாய்ந்தனர் பாஞ்சால வீரர்கள். செடியை உலுக்கியதும், மலர்கள் உதிர்வது போல, இரு தரப்பிலும் எண்ணற்ற தலைகள் உதிர்ந்தன.

கோட்டை இடிந்தது. கொத்தளம் நொறுங்கியது. பாஞ்சாலங்குறிச்சியை வெள்ளையன் இரண்டாவது முறையாகப் பிடித்தான். கட்டபொம்மன் குடும்பத்தினரையும் இரண்டாவது முறையாகக் கைது செய்து விட்டான். ஆனால்?......

அடங்கிய புயலையும், அடைபட்ட புலிகளையும், மீண்டும் எழுப்பி, வெள்ளை உடைகளை வெட்டித் தள்ளிய வீரன் ஊமைத்துரை மட்டும் அகப்படவில்லை. ''அவன் மறைந்து விட்டான்—மாண்டு விட்டான். பாஞ்சாலங்குறிச்சியில்தான் இருக்கிறான்.'' இப்படிப் பல வித வதந்திகள்தான் உலவினவே தவிர, ஊமைத்துரையின் முடிவைப் பற்றிய நிச்சயம் உருவாகவில்லை. ஊமைத்துரைக்காக உருவிய வாளுடன் வெள்ளையர் அலைந்தனர்.

முன் இரவு! கோட்டையைத் தகர்த்தெறிந்து, வீரப் பாஞ்சாலங்குறிச்சியைக் கைப்பற்றிய வெள்ளையர்களின் ஆர்ப்பாட்டமும், ஆனந்தக் கூத்தும் இன்னும் ஓயவில்லை.

கோட்டையின் உட்புறம், பாதம் வைக்க இடம் இல்லாதபடி பிணங்கள் பரவிக் கிடந்தன. காலதேவன், விதி யாழைத் தன் கரங்களில் வைத்து, அதில் மயான கருதியைக் கூட்டினான்.

நடுத்தர வயதுள்ள ஒரு தமிழ் மாது, 'தன் மானப் போருக்குச் சென்ற தன் ஒரே மகனைப் பற்றிய முடிவைத் தெரிந்து கொள்ள, ஒவ்வொரு பிணங்களையும் புரட்டிப் பார்த்துக்



கொண்டே வந்தாள். அப்போது, ''அம்மா! அம்மா! என்னையா தேடுகிறாய்? இதோ...... இதோ இருக்கிறேன்...வா...வா'' என்ற மெல்லிய குரலைக் கேட்டு, மேனி சிலிர்த்த அந்த மாது திரும்பி, தேகமெங்கும் தியாக முத்திரைகளோடு தன் மகன் வீழ்ந்து கிடப்பதைக் கண்டு, ''செல்வமே!'' என்று கூவி, அவன்மீது விழுந்தாள்.

''அம்மா! என்னை நீ எடுத்துச் செல்லலாம்! வீட்டிலே வைத்து, வேண்டிய வைத்திய முறைகளைக் கொண்டு, என் ரணங்களை ஆற்றி, தழும்புகூடத் தெரியாதபடி என் உடலைப் புதுப்பித்துப் பார்த்து, பூரிப்படையலாம் என்றுதானே இங்கு வந்திருக்கிறாய்.

''அம்மா! இன்னும் சிறிது நேரத்தில் எழுந்து எங்கேயாவது சென்று விடுவேன். உண்மைத் தமிழர்கள் இந்தச் சீமையில் இருக்கும் வரை, என் உடம்பு சுகமடைவதைப் பற்றி நீ கவலைப் படாதே. அம்மா! உன் மகனைப் பற்றி நீ கவலையே கொள்ளாதே. அதோ, இந்த நாட்டின் வீரமகன்!-தமிழ்த் தாய்களுக்கு வெள்ளையனால் விளைந்த பாதகச் செயல்களுக்கெல்லாம் சேர்த்து, பழிக்குப் பழி வாங்க வந்த சிங்கம்! நம்முடைய ஒரே தலைவர், ஊமைத்துரை வீழ்ந்து கிடக்கிறார். காயங்கள் அதிகமாகி விட்டதால், ரத்தம் கொட்டிக் களைப்பாகக் கிடக்கிறார். நீ அவரைப்பற்றிக் கவலைப்படு. எனக்காக நீ தேக்கி வைத்திருக்கும் அன்பை அவர் மீது செலுத்து! அவரை நம் வீட்டுக்கு எடுத்துச் சென்று, மறைத்து வைத்து, வைத்தியம் செய்து குணமாக்கு. நான் உன் மகன்! அவர் இந்த நாட்டின் மகன்! அவரை நீ காப்பாற்றினால், இந்த நாட்டையே காப்பாற்றிய பெருமை உனக்குக் கிடைக்கும்!'' என்று அந்தக் காளையின் வீரக்குரல் இதை முழக்கி ஓய்ந்தது. அந்த மாது, தன் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள். கலைந்து கிடந்த கேசத்தை அவள் கோதி விட்டுக் கொண்டாள்.

அந்த வீரமாது தன் மகனின் தலை உச்சியில் முத்தமிட்டு, அவன் உடலை ஒரு முறை தன் கரங்களால் தடவி விட்டு எழுந்து சென்றாள். சிறிது நேரத்தில் தன் தாய் ஊமைத்துரையை எடுத்துச் செல்வதைக் கண்டான் அந்த வீரன்!

வீரனின் கண்கள் மலர்ந்தன. கரங்கள் துடித்தன. எழுந்தான். வாளை எடுத்தான். அதை முத்தமிட்டபடியே சென்று விட்டான் வீரன் சிங்கத்தேவன்.

''ஊமைத்துரையையும், அவனோடு சேர்ந்து சென்றுவிட்ட புரட்சி வீரன் சிங்கத் தேவனையும், உயிருடனோ அல்லது பிணமாகவோ கொண்டு வருவோருக்கு, ஆயிரம் ரூபாய் பரிசு அளிக்கப்படும்'' — கிழக்கிந்தியக் கம்பெனியார்.

ஆங்கிலேயரின் இந்த அறிக்கை, கலெக்டர் காரியாலயங்களிலும், தெற்குச் சீமையின் ஒவ்வொரு 'முச்சந்தி'யிலும் ஒட்டப்பட்டது.

வளர்ந்து பரவி வரும் வெள்ளையனையும், வரி வசூலிப்பதன் மூலம் தெற்குச் சீமையை வணங்கச் செய்த ஆற்காட்டு நவாப்பையும், துச்சமெனக் கருதி, எல்லை மண்ணில் எதிரியின் காலடி படாது காப்பாற்றி வந்த, வீரர்கள் மருது சகோதரர்கள் வீற்றிருந்த சிவகங்கையில், ஒரு மறவர் குடிலுக்குச் சிங்கத்தேவன் வந்தான்.

அந்த மறவர் ஒரு வயோதிகர். அதோடு அனுபவம் பெற்ற வைத்தியர். சிங்கத்தேவன் நிலை கண்டு, உடனே அவனுடைய ஆடைகளைக் களைந்தார். வீரனுடைய இடது தோளிலிருந்து, வலதுபுற மார்பின் கீழ்ப்பகுதி வரை ஒரு பெருந் தழும்பு இருப்பதைக் கண்டு, ''இது என்ன தம்பி?'' என்று கேட்டார். ''சிறுவயதில் தீயினால் ஏற்பட்டது'' என்று சிங்கத்தேவன் பதில் சொன்னான். வைத்தியம் ஆரம்பமாயிற்று.

அங்கே—பாஞ்சாலங்குறிச்சியில், சில நாட்களுக்குப் பிறகு, முற்றிலும் குணமடைந்த ஊமைத்துரை, சிங்கத்தேவனின் அன்னையிடம் விடைபெற்றுக்கொண்டு, சிவகங்கைக்கு வந்து சேர்ந்தான். மருது சகோதரர்களைச் சந்தித்தான். ஊமைத்துரையின் வீரத்தைப் பற்றி முன்பே கேட்டறிந்து, அந்தப்





# கிரக லட்சுமி

மங்கள ஸ்நானம் செய்து புத்தாடை தரித்த வாசுவை மஞ்சள் நீர் சுற்றி வணங்கினாள் மனைவி. அவர்களுக்குத் தலைதீபாவளி! பிறகு தீபாவளி மருந்தையும் உருட்டிக் கணவனின் வாயிலே போட்டு, பட்சணத் தட்டை முன்னே வைத்தாள்.

"மருந்து முதல்தரம்! அதோடு சோமாசி, லாடு, தேன் குழல்... பேஷ்!... பேஷ்...!" என்று வாசு பெருமையுடன் மனைவியைப் பார்த்தான்.

"நிறையவே சாப்பிடுங்கள்; காபி கொண்டுவரேன்..." என்று அவள் துள்ளி ஓடினாள். பட்சணங்களைச் சுவைக்கையில் வாசுவின் நினைவு சுழன்றது. இப்படியொரு இன்பத் தீபாவளியை அவன் கற்பனையாவது செய்திருப்பானா?...

★

வேலை கிடைத்ததுமே கல்யாணப் பேச்செழுந்தது. பல பெண்களை அவன் பார்த்துவரவும் தவறவில்லை. ஆனால் பையனைப் பிடிக்கவில்லையென்று பெண்களே கூறிவிட்ட அவமானத்தைச் சொல்வதா அல்லது 'எங்கள் பெண்ணுக்கு இவன் ஜோடியில்லை' என்று பெற்றோர்கள் கையை விரித்ததைக் கூறுவதா? வாசுவின் மனம் உடைந்தது. பள்ளி நாள் முதல் ஹோட்டலில் உண்டு வாழ்ந்ததாலோ என்னவோ அவனது ஒடிசலான தேகம் வளர்ச்சியே பெறவில்லை. கண் நிறைந்த பிள்ளைகளுக்குத்தானே கல்யாண மார்க்கெட்டில் மதிப்பு?

ஆபீஸ் அலுவலில் மதுரை சென்ற வாசு மாமா வீட்டில் தங்க நேர்ந்தது. மாமா, மாமி, அவர்களது பெண் கோமதி, யாவருமே அன்போடு வரவேற்றார்கள். பருவத்தின் பூரிப்பில் நளினமுருடன் மிளிர்ந்த கோமதி வாசுவைக் கவர்ந்தாள். அவளும் முறைப் பெண்தானே? ஆனால் தானிருக்கும் நிலையில் மேலே எண்ணவே அஞ்சினான் வாசு. வெண்ணெய்யை வைத்துக்கொண்டு நெய்க்கலையும் நிர்ப்பந்தம்!

அதே தினம் மாமா வீட்டுக்கும் 'பெண் பார்க்க' ஒரு இளைஞன் பெற்றோர்களுடன் வந்தான். அவர்களை வரவேற்பதில் வாசுவுக்கும் பொறுப்பு! போதாக்குறைக்கு, கோமதியை அலங்கரிக்க வந்த பெண்ணோ, முன்பு சென்னையில் இவனை மணக்க மறுத்த அதே அலமு! பிறகு மதுரையில் மணமாகி இங்கு அடுத்த வீட்டிலேயே வசிக்கும் அவளோ, வாசுவைக் கண்டதும் நகைத்தவளாய், கோமதியிடம் விரைந்து ஏதோ காதைக் கடித்தாள். என்ன, ஒருவேளை உண்மையை உடைத்துவிட்டாளோ...?

பெண் பார்க்க வந்தவர்களுக்குப் பிரமாத உபசாரம், விருந்து. "பலகாரங்கள்

DL. 441A-19 TM

அபாரம்! தயாரிக்கும் விதத்தில் தயாரித்தால், நெய்யோ, இல்லையோ, எதுவுமே ருசிக்கும்!'' என்றார் பையனின் தந்தை.

''நாங்கள் 'டால்டா' வனஸ்பதியில்தான் செய்திருக்கிறோம்; பட்சணமோ, சமையலோ எதற்கும் அதேதான்!'' என்றார் மாமா.

''ஓஹ்...! நாங்களும் அப்படியேதான்; ரொம்பப் பொருத்தமாச்சு. ஆரம்பமே சுபம்!'' சிரிக்கிறார் வந்தவர்.

இவர்களுக்குள் மனவேற்றுமை ஏற்படாதாவென எண்ணிய வாசுவுக்கு ஏமாற்றம். கேவலம் 'டால்டா'வுக்கு இவ்வளவு புகழ்ச்சியா? அம்மா அதைக் கையாலும் தொடமாட்டாளே!

இறுதியில், மாமா கடிதம் எழுதுவதாகச் சொன்னதும் விருந்தாளிகள் விடைபெற்றுச் சென்றனர். மறுநாள் தானும் ஊர் திரும்ப நினைத்து மாமாவின் அறைக்குச் சென்ற வாசு, உள்ளே பேச்சுக் குரல்கள் கேட்கவே, வெளியே பின்தங்கி சற்றே நின்றான்.

''எனக்கு இஷ்டமில்லை அப்பா!'' என்றது கோமதியின் குரல். மேலே அவள் சொன்னது காதில் விழவில்லை.

''ஓஹோ... உனக்கு அத்தானையே பிடித்துவிட்டதாக்கும்! ஆனால்...'' இழுக்கிறார் மாமா.

''என்னது, அத்தானையா? உனக்கும் பைத்தியமா கோமதி? நான் அவரை மறுத்தேனே, எதற்காக? தெரியாதா?'': இது அலமுவின் குரல்.

''அத்தானுக்கு என்ன, அலமு? நோவா நொடியா? எங்கள் வீட்டில் நானாவிதப் பண்டங்களும், பாலும் பழமும் சாப்பிட்டு நாங்கள் ஆரோக்கியமாக இல்லையா? அதேபோல் சரிவரத் திட்டமிட்ட உணவுப் பழக்கத்தை அனுசரித்தால் அத்தான் உடம்பும் தேறிவிடுமென்ற நம்பிக்கை எனக்கிருக்கிறது. சமைக்கப்போகிறவள் நான்தானே?'' அழுத்தமாக மொழிந்தாள் கோமதி.

செவிமடுத்த வாசுவுக்குப் புல்லரித்தது. 'அம்மா மட்டும் முன்பே இம்முறைகளை அறிந்திருந்தாளானால்...?'' என்ற அங்கலாய்ப்பு. தேக நலத்துக்கான உத்திகளை உணர்ந்ததில், தாய்க்கும் முந்திக்கொண்ட கோமதியை என்னவென்று அழைப்பது?

விரும்பியபடியே அழைக்கும் பாக்கியத்தை அவனுக்கு அளித்தது காலம்...

★

''கங்கா ஸ்நானம் ஆச்சா, வாசு?'' மாமாவின் குரல் கேட்டு நினைவு மீண்ட வாசு, ''ஆச்சு மாமா; தட்டுப் பலகாரமும்கூடக் காலி. எல்லாமே ஏ ஒன்!'' என்றான்.

''டால்டாவில் தயாரித்ததை... கேட்கணுமா?''

வாசுவின் தாய் குறுக்கிட்டாள்: ''எனக்கு வெகுநாள்வரை தெரியாது. பிறகு மதனி சொன்னாள்: பண்டிகையோ, தினச் சமையலோ, எதற்கும் 'டால்டா' உகந்ததென்று. முன்பெல்லாம் பேரீச்சை மர அடையாளமுள்ள அடக்கமான டப்பாவில் வரும் இதைப் பார்த்திருக்கிறேனே ஒழியச் சிந்திக்கவில்லை. பொரிக்க மட்டுமின்றி, லட்டு ஜிலேபி முதல் சாம்பார், ரசம், அப்பளம்வரை எல்லாத்துக்கும் நல்லதென்று இப்போன்றோ தெரிகிறது?''

''அதுமட்டுமில்லை; சுத்தம் புதிய தாவர எண்ணெய்களிலிருந்து தயாரிக்கப்படும் சமையல் கொழுப்பே 'டால்டா'. வைடமின் 'டி'யும், நெய்யிலுள்ள அதே அளவு வைடமின் 'ஏ'யும் 'டால்டா'விலே சேர்க்கப்பட்டிருப்பதால், அது நோய்கள் வராமல் பாதுகாப்புடன், பல்லையும் எலும்புகளையும்கூட வலுவாக்குகிறது. அதோடு சிக்கனம்கூட,'' என்றார் மாமா.

மனத்து நன்மை பயக்க விரும்பிய கோமதியின் மனோரதத்தை நினைவு கூர்ந்தான் வாசு; நல்லது எண்ணத்தைச் செயல்படுத்திவிட்ட அவளை நோக்கி முறுவலித்தவாறு, ''எல்லாம் கிரகலட்சுமியின் அருள்!'' என்றான்.

கோமதியின் முகம் சிவந்தது: ''போதுமே புகழுரை! அலமு காதில் விழப் போகிறது; அவள் கண்படாமல் இருந்தாலே போதும் —''



ஹிந்துஸ்தான் லீவர் லிமிடெட், பம்பாய். DL. 441D-19 TM

பாஞ்சாலங் குறிச்சிச் சிங்கத்தைப் பார்க்க வேண்டுமென்று துடித்துக் கொண்டிருந்த மருது சகோதரர், ஊமைத் துரையைக் கண்டதும் மகிழ்ந்தனர்!

அதே நேரத்தில்—

அந்த வைத்திய மறவர், குணம் பெற்ற சிங்கத்தேவனின் குன்றுத் தோள்களைத் தழுவி மகிழ்ந்தார். வைத்தியரே வீரனுடைய வாளை யும் நீட்டித் தந்தார்!

சிவகங்கையில் ஊமைத்துரை இருக்கும் செய்தி, எட்டயபுரத்துத் தலைவன் எட்டப் பன் மூலம், வெள்ளைச் செவிகளுக்கு எட்டியது.

ஓடிப் போன ஊமைத்துரைக்கு, மருது சகோதரர் அடைக்கலம் தந்திருக்கின்றனர் என்ற செய்தியை அறிந்த கும்பினியார் கொதித்தெழுந்து, சிவகங்கையை நோக்கிச் சீறிக் கொண்டு பாய்ந்தனர்.

வாளுக்கு வேலை வரவில்லையே என்று வருந் திக் கொண்டிருந்த மருது சகோதரர், வெள்ளையன் சிவகங்கையில் புகுந்து விட்டான் என்று அறிந்ததும், மார்பு விம்மி, மலைத் தோள் தினவெடுத்து, போர்க்களம் புகுந்தனர்!

வீரத்தின் சின்னங்களாக விளங்கிய மருது சகோதரர்களையும், தன்மான வெறியினால், மத யானையாக மாறியிருந்த அஞ்சாத சிங்கம் ஊமைத் துரையையும், வெள்ளையரால் சமாளிக்க முடியவில்லை.

தன் தலைவர் ஊமைத்துரை சிவகங்கையில் இருப்பது, சிங்கத்தேவனுக்குத் தெரியாது. சிவகங்கையைப் பாதுகாக்கவேண்டும் என்றோ, அல்லது, மருது சகோதரர்களுக்கு உதவி புரிய வேண்டும் என்றோ, சிங்கத்தேவன் கருத வில்லை. ஆனால், ஆங்கிலேயன் என்ற ஒரே கார ணத்துக்காக, சிங்கத்தேவன் வலியப் போரில் கலந்து கொண்டு, தன் வாளுக்கு நூற்றுக் கணக்கான வெள்ளைத் தலைகளை விருந்தாக்கிக் கொண்டிருந்ததும் ஒரு முக்கிய காரணம்.

முதல் நாள் போர் முடிந்தது. வெற்றியும் தோல்வியும் ஒன்று சேர்ந்து, இருதரப்பிலும் விளையாடின. ஆங்கிலேயரை அழைத்து வந்த எட்டப்பனை, சிங்கத்தேவனும், சிங்கத் தேவனை எட்டப்பனும் களத்திலே கவனித்துக் கொண்டு விட்டனர். ஆகவே, அன்று இரவுப் பொழுதில், தன்னைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டிய அவசரமும், அவசியமும் சிங்கத் தேவனுக்கு ஏற்பட்டன.

சிவகங்கைக்குச் சிறிது தூரத்தில், வெள்ளை யர் அன்று இரவுப் பொழுதைக் கழிக்க முகா மிட்டனர். பரவி வரும் இருளில், பதுங்கிப் பதுங்கச் சிங்கத்தேவன் சென்றுவிட்டான்!

இரவின் இரண்டாம் சாமம் ஆரம்ப மாயிற்று!

இருள், வெள்ளையரைப் போலவே, தன் ஏகாதிபத்தியத்தைச் செலுத்தி விருந்தது! அந்த இருளின் நடுவில், 'மினுக் மினுக்' என்று தூரத்தில் சில வெளிச்சப் புள்ளிகள் தெரிந்தன. ஆம், அங்குதான் ஆங்கிலேயர் கூடாரம் அடித்திருந்தனர். கூடாரத்துக் குள்ளே மெழுகுவத்திகள் உருகி வழிந்து கொண்டிருந்தன. மெழுகுவத்தி, தன் மேனி யைத் தானே தியாகம் செய்து கொண்டு வெள் ளையருக்கு வெளிச்சம் கொடுத்தது. அந்தத் தியாகச் சின்னத்தின் அருகில் அமர்ந்து, ஒரே தாய் மண்ணில் தவழ்ந்த ஊமைத்துரையை எப்படியாவது கும்பினியாரின் கரங்களில் ஒப்படைக்க வேண்டும் என்று எட்டப்பன் திட்டம் போட்டுக் கொண்டிருந்தான்.

இரவு வளர்ந்து கொண்டே இருந்தது. அதோடு சேர்ந்து, ஒரு உருவமும் வளர்ந்து வந்தது. செங்குத்தாக நின்ற ஒரு மலைப் பாறையைச் சார்ந்து, தாழ்ந்திருந்த ஆலமரத் தின் அடியில், குலைந்த நிலையில் ஒரு சிறு குடிசை இருந்தது. உருவம் அந்தக் குடிசை யின் வாசலுக்கு வந்து கதவைத் தள்ளியது. அது கதவல்ல, அந்தப் பெயரில் இருந்த உளுத்துப் போன ஒரு மூங்கில் தட்டி! அது திறந்து கொண்டது. உருவம் உள்ளே நுழைந் தது. மூளியாயிருந்த ஒரு அகல் விளக்கின் முனையில், அரும்பு போலச் சுடர் நின்றது. அது குடிசையின் உள்ளே கொஞ்சம் வெளிச் சத்தைப் பரப்பிக் கொண்டிருந்தது.

அம்மி மேடை மீதிருந்த அகல் விளக்கின் பக்கத்தில், வயதால் வயோதிகம் பெற்று, வருடங்களால் பழுத்துப் போன ஒரு கிழவி படுத்து உறங்கிக் கொண்டிருந்தாள். உருவம், அவள் பக்கத்தில் உட்கார்ந்து தன் வலது கரத்தை அவளுடைய வெள்ளித் தலையில் வைத்து, "பாட்டி! பாட்டி!" என்று அழைத்து அசைத்தது.

"ஐயையோ! சிங்கத்தேவன் இங்கே இல்லே. அவனை எனக்குத் தெரியாது. தெரியவே தெரியாது" என்று அலறிக் கொண்டே கிழவி எழுந்தாள். தன் கண்களைக் கசக்கி விட்டுக் கொண்டாள். அம்மி மேடை மீதிருந்த அகல் விளக்கை எடுத்து, எதிரே யிருந்த உருவத்தின் முகத்தருகே பிடித்துப் பார்த்து அதிசயப்பட்டாள். அவளுடைய



அதிசயத்துக்குக் காரணம்? — ஆம், கிழவி யின் எதிரே ஒரு அழகிய குமரி உட்கார்ந் திருந்தாள். போரின் பயங்கரச் சூழ்நிலையில், தொட்டால் ஒட்டிக் கொள்வது போன்ற மை இருட்டில், தன் எதிரே ஒரு இளம் பெண் உட்கார்ந்திருந்தால், கிழவி அதிசயப்படா மல் வேறு என்ன செய்வாள்? ஆனால், அவ ளுடைய அதிசயம் சிறிது நேரத்தில் மறைந்து, அதற்குப் பதில் அவளுடைய இதயத்தைப் பயம் பற்றிக் கொண்டு விட்டது. உடனே கைகால்கள் உதற ஆரம்பித்துவிட்டன. பேசு வதற்குப் பலமுறைகள் முயன்றாள். ஆனால், பற்கள் கிட்டித்துப்போய் விட்டன. உதடுகள் துடித்தனவே தவிர, வார்த்தைகள் வெளியே வரவில்லை. அந்த அழகியே முதலில் பேச ஆரம்பித்தாள் :

''பயப்படாதே, பாட்டி! நீ பயப்படுகிற தைப் பார்த்தால் எனக்கும் பயமாயிருக்கு. பாட்டி! எனக்குச் சொந்த ஊரு இளையனேரி. சிவகங்கையிலே, நாளை மறுநாளு எனக் குக் கல்யாணம் நடக்கப் போவது! அதுக் காக, என்னைப் பெண் எடுத்துக்கிட்டு வந் தாங்க. வழியிலே, வெள்ளைக்காரனுங்க எங்க வண்டிகளை மறிச்சுக்கிட்டானுங்க. எங்க அப்பா, அண்ணன் எல்லாரும் கும்பினிப் பட்டாளத்தோட சண்டை போட்டு, செத் துப் போயிட்டாங்க. பட்டாளத்தானுங்க என்னைத் தொரத்தினானுங்க. நான் எப் படியோ தப்பிச்சு ஓடியாந்துட்டேன். எல் லாம் இன்னிக்குச் சாயந்திரம் நடந்ததுதான். இம்மாந்நேரம், மலையிலே மறைஞ்சுக்கிட் டிருந்தேன். விளக்கு எரிஞ்சதைப் பார்த்து, இங்கே வந்தேன். பாட்டி! இந்த ஒரு ராவுக்கு மட்டும் என்னைக் காப்பாத்து. விடிய நாலு நாழிக்கு, என்னை எழுப்பி விடு. நான் கல்யாண வீட்டுக்குப் போயிடு றேன். ஒம் பேத்தி மாதிரி நினைச்சு எனக்கு இந்த உதவியை மட்டும் செய், பாட்டி!'' என்று சொல்லி முடித்தாள். அவள் கண்களில் தேங்கியிருந்த நீர் கன்னங்களில் வழிந்தது. கிழவி, கிழிந்து, வார்வாராகத் தொங்கிய தன் கந்தல் சேலையின் முந்தானையை அவிழ்த்து, அந்தப் பெண்ணின் கண்ணீரைத் துடைத்தாள்.

''அழுவாதடி கண்ணு! நான் இருக்கேன். ஒனக்கு ஆபத்துயில்லாமெ காப்பாத்தறேன். நீ இங்கேயே படுத்திருந்து, விடிஞ்சதும் போகலாம்'' என்று ஆறுதல் சொன்னாள். குமரி தொடர்ந்து பேசினாள் :

''பாட்டி! என்னை நீ பார்த்தவுடனே, 'ஐயையோ! சிங்கத்தேவன் இங்கே இல்லே, அவனை எனக்குத்தெரியாது'ன்னு அலறினையே! அது ஏன்?''

''அதுவா? ஊமைத் தொரையும் சிங்கத் தேவனும், இந்தச் சிவகங்கையிலே இருக் காளுவன்னு கேள்விப்பட்டு, கும்பினியா னுங்க ஒருநாள் பூரா சண்டை போட்டு, ஊரையே கொளுத்திப்புட்டு, இப்போதான் ஒஞ்சு கெடக்கானுங்க. இன்னைக்கு வெளக்கு வைச்ச நேரத்திலே, ஒரு கும்பினிப்பட்டா ளம், எங்குடிசையிலே பூந்து, சிங்கத்தேவன் இங்கே வந்தானானுன்னு கேட்டு, என்னைத் தொந்தரவு பண்ணிட்டுப் போனானுங்க. அப் போபடுத்தவள்தான். அதையே நினைச்சி, அப்படியே தூங்கிப்புட்டேன். நீ என்னை எழுப் பினேல்ல, மறுவாட்டியும் அந்தப் பயலுவ வந்துட்டான்களோன்னுதான், அப்படி அலறி னேன்!'' என்றாள் பாட்டி.

''உம் பாட்டி! ரொம்பப் பசியாயிருக்கு!''

''அந்தப் பானையிலே கஞ்சி இருக்கு, எடுத் துக்குடி. உறியிலே நார்த்தங்கா ஊறுகாய் இருக்கு, எடுத்துத் தொட்டுக்க. என்னாலே எழுந்திருக்க முடியாது.''

அந்தப்பெண் எழுந்து சிறிது கஞ்சி குடித்து விட்டு, விளக்குத்திரியின் முனையிலிருந்த கரி யைத் தட்டி, சுடரைச் சிறிது குறைத்து விட்டு, கிழவிக்கு அருகில் வந்து படுத்தாள்.

எங்கிருந்தோ ஒரு சாமச்சேவல் கூவிற்று! மங்கிக் குவிந்திருந்த கிழவியின் கண்கள் மலர்ந்தன. அவற்றைக் கசக்கிவிட்டு, கையைச் சேர்த்துப் பின்னி, தலைக்கு மேலே தூக்கிச் சோம்பல் முறித்துவிட்டுக் கிழவி எழுந்தாள். அகல் விளக்கின் சுடரை அதிகமாக்கினாள். குடிசையில் வெளிச்சம் அதிகமாயிற்று. அந்தப் பெண்ணைப் பார்த்தாள். என்ன விந்தை! கிழவி, தன் கண்களைத்தானே நம்ப வில்லை. கனவாயிருக்குமோ என்று நினைத் தாள். கண்களை ஒருமுறை கசக்கிவிட்டுக் கொண்டாள். மின்னல் நேரத்தில் அவள் மனத்தில் பல எண்ணங்கள் தோன்றித் தோன்றி மறைந்தன. அதே அழகியைக் கடந்த இரவு தன் எதிரே கண்டதும், அவள் அடைந்த அதிசயத்தைவிட, ஆயிரம் மடங்கு அதிகமாக இப்போது அதிசயப்பட்டாள்.

அந்தப் பெண்ணின் பின்னல், தலையிலிருந்து விலகித் தனியே கிடந்தது! மறவர் குலத்து ஆண் சிங்கங்கள் போட்டிருக்கும் 'வீரக்








கொண்டை' அந்தப் பெண்ணின் தலையில் காட்சி தந்தது! அழகியின் சேலை சிறிது சரிந்திருந்தது. உள்ளே, போர்க்காரர்கள் போட்டிருக்கிற கவசம் கலந்த உடை தெரிந்தது! அந்த உடையின் இடது புற ஓரத்தில், ஒரு வாள் பளிச்சிட்டது!

இதற்கு மேலும் ஆராய்ச்சி செய்யக் கிழவி தயாராக இல்லை. பெண் வேடத்தில் வந்தவன் ஒரு ஆண் என்பதும், மறவன் என்பதும் கிழவிக்கு நன்றாகத் தெரிந்து விட்டன! வீரன் அயர்ந்து உறங்கிக் கொண்டிருந்தான்.

"அவன் ஊமைத் துரையாக இருக்க வேண்டும்! அல்லது சிங்கத்தேவனாக இருக்க வேண்டும்! நிச்சயம் இருவரில் ஒருவராக அவன் இருக்க வேண்டும்.

"ஊமைத்துரையோ, அல்லது சிங்கத்தேவனையோ பிடித்துக் கொடுத்தால், வெள்ளைக்காரன் ஆயிரம் ரூபாய் பரிசு தருவான். சிவகங்கை மீது தொடுத்த போரை நிறுத்தி விட்டுப் போய் விடுவான். இவனைக் காட்டிக் கொடுத்தால் எனக்கும் நல்லது—சிவகங்கைக்கும் நல்லது."

இந்த முடிவுக்கு வந்த கிழவி, உடனே விளக்கை அணைத்தாள். மெதுவாக வெளியே சென்று, மூங்கில் தட்டியை இழுத்து, ஒரு கயிற்றினால் இறுகக் கட்டி விட்டு, கிழக்கு வானத்தைப் பார்த்தாள். 'பலபல'வென்று விடிய, இன்னும் ஒரு நாழிகை பாக்கியிருந்தது. வெள்ளையர் கூடாரங்கள் இருக்கும் திசை நோக்கி, கிழவி வேகமாக நடந்தாள்.

சிறிது நேரத்தில், கிழவி இராணுவக் கூட்டத்தோடு குடிசைக்கு வந்தாள். கோட்டையை முற்றுகை யிடுவதைப் போல, குடிசையைச் சுற்றி வளைத்துக் கொண்டனர் வெள்ளையர். அவர்களின் தலைவன் மூங்கில் தட்டியைக் காலால் எட்டி உதைத்தான். அது திறந்து கொண்டது. நீட்டிய துப்பாக்கியோடு, தளகர்த்தன் பின்னால் பல சிப்பாய்கள் உள்ளே நுழைந்தனர்.

அப்போதும், அந்த வீரன் தன்னை மறந்து, மண்ணை மறந்து அயர்ந்து உறங்கிக்கொண்டிருந்தான்

"இவன்தான் சிங்கத்தேவன்" என்றான், வெள்ளையரோடு கலந்திருந்த தமிழ் வீரருள் ஒருவன்!

கிழக்கு வானம் நன்றாக வெளுத்து விட்டது. சூரியனின் உடம்பு தெரிவதற்கு முன்பு, அவனுடைய உதய ரேகைகள் பூமியை முத்தமிட்ட நேரத்தில், புரட்சி வீரன் சிங்கத்தேவனின் உடம்பை வெள்ளை தளகர்த்தனின் சாட்டை துண்டு துண்டாகக் கிழித்தது.

கிழவி நடுங்கி ஒடுங்கி, ஒருபுறம் நின்று கொண்டிருந்தாள். கிழிந்த போன புடவையோடு சிங்கத் தேவன் அடி பொறுக்காது கீழே விழுந்தான். தளகர்த்தனின் ஆணைப்படி வெள்ளையர், துவண்டு விழுந்த சிங்கத்தேவனைத் தூக்கி நிறுத்தி, அவனுடைய உடைகளைக் களைந்தனர். இப்போது சிங்கத்தேவன் தன்னுடைய 'லங்கோடு' துணியோடு மட்டும் நின்று கொண்டிருந்தான். தளகர்த்தனின் சாட்டை மீண்டும் அவன் மார்பில் பாய்ந்தது!

சிங்கத்தேவனின் மார்பைக் கிழவி பார்த்தாள். அவனுடைய இடது தோளிலிருந்து

வலது புற மார்பின் கீழ்ப் பகுதி வரை, பரவியிருந்த அந்தப் பெருந்தழும்பை உற்றுக் கவனித்த கிழவிக்கு, இந்த உலகமே தன் முன்பு சுழல்வது போலிருந்தது! கண்கள் இருண்டன, அப்படியே கீழே உட்கார்ந்து குடிசைச் சுவரில் சாய்ந்து விட்டாள். அவளுடைய ஞாபகம் சுழன்று, இருபத்தைந்து வருடங்களுக்கு முன்பு நிகழ்ந்த ஒரு சம்பவத்தை மூடியிருந்த அவள் கண்முன்பு காட்டியது!

இருபத்தைந்து வருடங்களுக்கு முன்பு—

இந்தக் கிழவி, இப்படிச் சருகாக இல்லை. தளுக்கும், குலுக்கும், மினுக்கும் கொண்ட தளிராக இருந்தாள்! இவளுடைய பெயர் வெள்ளையம்மா! பெயர் வெள்ளை, உடல் வெள்ளை, ஆனால், உள்ளமோ?...

முதல் மனைவியைப் பறி கொடுத்தவனும், மூன்று வயதுச் சிறுவனைப் பராமரிக்க வகை தெரியாது தவித்துக் கொண்டிருந்தவனுமான பொன்னப்பன், அவன் செய்த பாவத்தின் பலனாகவோ, அல்லது விதி வசத்தாலோ, அல்ல சிறுவன் சிங்காரத்தின் கிரக அமைப்பாலோ-வெள்ளையம்மாவைத் தனது இரண்டாவது மனைவியாக விவாகம் செய்து கொண்டு விட்டான்!

தென்றலுக்கும், சூறாவளிக்கும் எவ்வளவு வேறுபாடோ அவ்வளவு வேறுபாடும், இருமணத்துக்குப் பிறகு பொன்னப்பன வாழ்க்கையில் வீச ஆரம்பித்து விட்டது. எந்தச் சிங்காரத்தின் வாழ்வு செழிப்படைய வேண்டுமென்ற ஒரே காரணத்துக்காக அவன் இருமணம் செய்து கொண்டானே, அதே சிங்காரத்தின் வாழ்வு, இருமணத்துக்குப் பிறகு, வெள்ளையம்மாவால் நசுக்கப்படுவதை எதிரில் கண்டு நெஞ்சு குமுறினான் 'சிற்றன்னைக் கொடுமை' என்று இதற்கு முன்பு கேள்விப் பட்டிருந்த பொன்னப்பன், தன் வாழ்வில், தானே அதை வரவழைத்து அனுபவிப்பதை நினைத்து அழுதான், துடித்தான்.

வெள்ளையம்மா சிறுவன் சிங்காரத்தின் மீது வீசிய கணைகள் நாளுக்கு நாள் பெருகினவே தவிர, குறையவில்லை.

தீபாவளி விழா வந்து கொண்டிருந்தது. தீபாவளி வர இரண்டு நாட்களுக்கு முன்பு, வெள்ளையம்மா, அடுப்பில் எண்ணெய்ச் சட்டி வைத்துப் பலகாரம் சுட்டுக் கொண்டிருந்தாள். சிறுவன் சிங்காரம் அவள் பக்கத்தில் நின்றுகொண்டு தனக்குப் பலகாரம் வேண்டுமென்று கேட்டு அழுதான். பிள்ளை பெற்றிருந்தால், வெள்ளையம்மாவுக்கு அந்த அழுகையை உணர முடியும். அவள் மலடி. அதோடு சிங்காரம் அவளுடைய மூத்தாளின் மகன்! ஆகவே சிங்காரத்தின் அழுகைதான் அதிகமாயிற்று. அதோடு வெள்ளையம்மாவின் வெறியும் அதிகமாயிற்று. எண்ணெய்ச் சட்டியிலிருந்து கரண்டியை எடுத்தாள். அதில் சூடேறிய எண்ணெய் இருக்கிறது என்பதையும் மறந்து, 'போடா' என்று சீறி, கரண்டியைத் தூக்கினாள். கொதித்த எண்ணெய் சிங்காரத்தின் தோளில் ஊற்றப்பட்டு, மார்பில் வழிந்தது. குழந்தை சிங்காரம் புழுவாய்த் துடித்தான். அவனுடைய மார்பு வெந்து விட்டது!

இந்த தெருப்புச் சம்பவத்துக்குப் பிறகு, பொன்னப்பன், வெந்து போன தன் குழந்தை சிங்காரத்தை ஒரு தோளிலும், குடும்பத்தைத் துறந்து விட்டதாக உதறிய துணியை மறு தோளிலும் போட்டுக் கொண்டு, வெள்ளையம்மாவைப் பற்றிச் சிறிதும் கவலைப்படாமல், வேறு யாருக்கும் சொல்லாமல, எங்கோ சென்று விட்டான்.

அதன் பிறகு, வெள்ளையம்மாவின் வாழ்வில் எத்தனையோ பயங்கரங்கள் ஆட்டம் போட்டன! நாட்களும், அவை தந்த பாடமும், வெள்ளையம்மாவை நல்ல பாதைக்குக் கொண்டு வந்தன! அவள் தன்னை உணர்ந்தாள் இருந்தினள்! எப்படியாவது, தன் கணவனைக் கண்டு பிடித்து, அவன் கால்களைத் தன் கண்ணீரால் கழுவி, மன்னிப்பு பெற்று, மறு வாழ்வு தொடங்க வேண்டுமென்று ஆசையில் அவள் எங்கெங்கோ அலேந்தாள், திரிந்தாள். ஆனல், பலன் இல்லே.

சுழன்ற கிழவியின் ஞாபகம் நிலேபெற்று, அமைதி பெற்றது!

கிழவி கண்களைத் திறந்தாள். எதிரே சிங்கத்தேவன் இரத்தம் வழிய வழியப் புன்னகையோடு நின்று கொண்டிருந்தான். பீறிட்டு வழிந்த இரத்தத்தில் அவன் மார்புத் தழும்பு மறைந்து விட்டது!

''சிங்காரத்துக்கு, சிங்கத்தேவன் என்ற பெயர் எப்படி வந்தது? ஒரு வேளே இவன் வேறு ஆளா யிருக்குமோ? போர்த் தழும்பு மார்பில் இருக்கிறதே?''

கிழவி இப்படி நினே - தான் ஒரு கணம். இது பற்றிய சரியான விவரத்தை அறிய அவள் கிழமனசு கிடந்து துடித்தது. ஏதோ கேட்க வேண்டுமென்று வாயைத் திறந்தாள். அதற்குள் சிங்கத்தேவனே பேசி விட்டான்:

''பாட்டி! நீ என்னேக் காட்டிக் கொடுத்தது ரொம்ப நல்லதாய்ப் போச்சு. விடியற்காலேயிலே, நீ எழுந்து வெளியே போனது, அரைத் தூக்கத்திலே புரண்ட எனக்குக் கனவு மாதிரி இருந்தது. எதுக்கோ போறேன்னு நினேச்சு, மறுபடியும் தூக்கத்திலே மயங்கிட்டேன். தூக்கத்தோட என்னே நீ வெள்ளேக்காரனுக்குப் பிடிச்சுக் கொடுத்ததாலே, இப்போ நான் ஒருத்தன்தான் சாகப் போறேன்! நான் விழிச்சுக்கிட்டிருக்கும் போது, இந்த வெள்ளேயனுங்க வந்திருந்தா, உன் குடிசை அடிக்கிலே இருக்கிற ஒவ்வொரு பானேயிலேயும், இந்தப் பாவிகளோட ரத்தம் இருக்கும்! உன் குடிசையை வெள்ளேக்காரச் சுடுகாடாக்கிட்டு, உன்னே மருதுபாண்டியர் மாளிகையிலே வைச்சிருப்பேன்! எனக்கும் என் கத்திக்கும் வேலேயில்லாமல் பண்ணிட்டியே பாட்டி!''

கிழவி பதறினள். அதோடு இதை எப்படியோ கேட்டுவிட்டாள்:

''தம்பி! ஒனக்கு ஒரே பேருதானு?''

''இல்லே, பாட்டி. ரெண்டு பேரு. என் முதல் பேரு சிங்காரம்! நான் பாஞ்சாலங்குறிச்சி பட்டாளத்திலே சேர்ந்தப்போ, என் ஒரே தலேவர் ஊமைத்துரை, என் கத்தி வீச்சைக் கண்டு, சிங்காரத்தேவன்னு இருந்த எம்பேரை, சிங்கத்தேவன்னு மாத்திக் கூப்பிட்டாரு! அதிலேயிருந்து, ரெண்டாவது பேரு தான் எனக்கு நிலேச்சுப் போச்சு!''

இதைக் கேட்டுக் கிழவி துடித்தாள்.

'அவன்தான். சிங்காரம் தான் இந்தச் சிங்கத்தேவன்! நான் போட்ட பணத்தாசையின் அஸ்திவாரத்துக்கு என் மகனேயே பலி கொடுத்து விட்டேன். சிங்காரம் எனக்கு மட்டுமல்ல, இந்தச் சீமைக்கே செல்வமகன்! ஐயோ! இருபத்தைந்து வருஷங்களாகக் கஷ்டப்பட்டுக் கண்டுபிடித்த மாணிக்கத்தை ஒரு நொடியில் கொள்ளேக்காரர்களிடம் கொடுத்து விட்டேனே! சிங்காரம் சாகப் போகிறுன். மூன்று வயதில் அவன் மேல் கொதித்த எண்ணெயைக் கொட்டினேன். இருபத்தெட்டு வயதில் அவன் கழுத்தில் தூக்குக் கயிற்றைப் போட்டு விட்டேன். இனி நான் என்ன செய்வேன்?''

கிழவியின் இதயம் இப்படிக் குமுறிக் கொண்டிருந்த அதே நேரத்தில், வெள்ளேயர், கட்டவிழ்த்துச் சிங்கத்தேவனே இழுத்துச் சென்றனர்.

''நான் போகிறேன், பாட்டி. இனிமேல் ஒங் குடிசைக்கு வந்து ஒனக்குத் தொந்தரவு தர மாட்டேன். நாளேக்கு வெள்ளேக்காரன் பணங் கொடுப்பான். அதை வீணுக்கிடாமே, ஒரு நல்ல வீட்டைக் கட்டிக்கிட்டு, சந்தோஷமா இரு. பசியோட வந்த நேரத்திலே கஞ்சி கொடுத்தியே, அதுக்காகத்தான் என் உயிரைக் கொடுத்து அதுக்குப் பதில், ஆயிரம் ரூபாய் உனக்கு வாங்கிக் கொடுக்கப் போகிறேன். வேறென்னனும் வித்தியாசமா நினேச்சிடாதே, நான் போகிறேன்!''

சிங்கத்தேவன் இதைச்சொல்லிக் கொண்டே போனுன். சதையெல்லாம் குலுங்க நின்று கொண்டிருந்த கிழவியின் நெஞ்சத்தில், சண்டமாருதம் எழுந்தது! அது அவளேத் தூக்கி எறிந்தது. கூனல் நிமிர்ந்தது! குறுகியிருந்த கண்கள் விரிந்தன! தளர்ந்து கிடந்த கரங்கள் தைரியத்தினுல் உயர்ந்தன! குடிசைக்கு வெளியே பறந்தாள்!

''சிங்காரம்! என் செல்வ மகனே! இரு. இதோ வாரேன், நான் உசிரோட இருக்கையிலே ஒன்னேச் சாக விடமாட்டேன். சிங்காரம்! எம் மகனே!''

அலறிக் கொண்டு ஓடின கிழவி, ஆங்கிலேய தளகர்த்தன் காலில் விழுந்து பிடித்துக் கொண்டு, ''ஐயா! தொரைமாரே! இவனேத் தூக்கிலே போடாதிங்க. இவன் என் மகன்! என் ஒரே மகன்! ஐயா! எனக்கு ரூவா வேண்டாம். என் மகன்தான் வேணும். இவனேத் திருப்பித் தந்திடுங்கய்யா, என் மகன்னு தெரியாமே காட்டிக் கொடுத்து விட்டேனய்யா!'' என்று அலறினள்.

தளகர்த்தன் நடக்க முயன்றுன். முடியவில்லே. ''சீ!'' என்று காலே வேகமாக உதறினுன். கிழவி அப்பால் விழுந்தாள். அவள் மீது ஒரு குதிரை ஏறி நடந்தது! அதே சமயம், சிங்கத்தேவன், தன் கடைசிப் பலத்தை உபயோகித்து, கால்களே உயர்த்தி, தளகர்த்தனே ஓங்கி உதைத்தான். தளகர்த்தனின் முன் வரிசைப் பற்களில் நான்கு கீழே உதிர்ந்தன.

வெள்ளேயர் பட்டாளம் எழுப்பிய புழுதியின் நடுவில், வெள்ளையம்மாவின் பிரேதம் கிடந்தது. அந்தப் பிரேதத்தின் உதடுகளில், உயிருள்ள ஒரு புன்னகை பூத்திருந்தது!


ஜூன்
மாதத்தில்
பச்சைப்
பட்டாணி
நீங்கள் இப்பொழுது ஜூன் மாதத்தில் பச்சைப பட்டாணி மற்றும் பீச்சஸ் கூட பெறலாம்.
ஏனெனில், உங்களுக்குப் பிடித்தமான பழங்கள் அல்லது காய்கறிகளை எதுவாயினும், அவைகளை வருஷம் முழுவதும் நீங்கள் பெறமுடியும் மிட்லண்ட் நிபுணர்கள் புதிய பழங்கள் மற்றும் காய்கறிகளின் நறுமணத்தையும் தெவிட்டாச் சுவையையும் ஒருங்கே திரட்டி பக்குவப்படுத்தியுள்ளார்கள் இதனால் அவைகளை எக்காலங்களிலும் பெற்று ருசித்து அனுபவிக்கலாம்.

# கடைசிக் குருத்து

## மாயாவி



ரயில் பெருமூச்சு விட்டுக் கொண்டு அல்லிக்குளம் ஸ்டேஷனில் வந்து நின்றது. ராமுவும் பெருமூச்சு விட்டுக் கொண்டு தான் அமர்ந்திருந்த இரண்டாவது வகுப்புப் பெட்டியிலிருந்து இறங்கினான். பிளாட்பாரத்தில் காலை ஊன்றியபோது முள்ளின்மீது கால் வைத்தது போன்ற உணர்ச்சி அவனுக்கு உண்டாயிற்று. பாவம், அவன் இத்தனை நேரமாக மிகவும் சிரமப்பட்டு அடக்கி வைத்துக் கொண்டிருந்த துக்கம் அணைத்தும் உடைப்பெடுத்துக் கொண்டு பாயும் அணைத்தேக்க நீரைப் போல், அவனையும் மிஞ்சிக் கொண்டு நெஞ்சிலிருந்து பீறிட்டுக் கொண்டு வந்தது.

அந்த ஊர் அவனுக்குப் புதிதல்ல. முன்பெல்லாம் அவ்வூரை நெருங்கும் போது அவனுடைய உள்ளத்தில் கிறுகிறுப்பும், உடலிலே மெய்ச் சிலிர்ப்பும் உண்டாகும். ஆனால் இன்று அந்தக் கிறுகிறுப்பும் மெய்ச்சிலிர்ப்பும் எங்கே போய் ஓடி ஒளிந்து கொண்டன?

அவை ஓடி ஒளிந்து கொள்ளவில்லை; ஒரேயடியாக மறைந்தே விட்டன. எவள் அவற்றை அவனுக்கு ஊட்டி வந்தாளோ, அவளோடு அவைகளும் மாயமாய் மறைந்து விட்டன. சின்னஞ்சிறு குழந்தை ஒன்றிடம் ஒரு பொம்மையைக் கொடுத்து விளையாடிக் கொண்டிருக்கச் சொல்லிப் பார்த்து விட்டுப் பிறகு அதைத் திடீரென்று பிடுங்கிச் சென்றால் அக்குழந்தைக்கு எப்படி இருக்கும்? ராமுவும் அப்பொழுது அத்தகைய நிலையில்தான் இருந்தான். பொம்மையைப் பெற்ற தால் இன்புற்ற குழந்தை, அது பறித்துச் செல்லப்பட்டதும் எவ்வாறு கதறுமோ அவ்வாறுதான் கதறினான் அவன், "சாரு! சாரு!" என்று. அவன் மட்டுமா கதறினான்? பள்ளத்தாக்கின் ஒரு சரிவிலிருந்து குரல் கொடுத்தால் மறு சரிவிலிருந்து அதன் எதிரொலி கிளம்புவது போல் இங்கேயும் எதிரொலி கிளம்பியது. ராமுவும் அவனுடைய பெற்றோரும் கதறிய கதறலுக்கு எதிரொலியாகச் சாருவின் பெற்றோரும் மற்றொரு 'பச்சை மண்'ணும் கதறினர். ஆயினும் அவர்கள் ஒருவரையொருவர் அணைத்துக் கொண்டு அழுது தங்கள் துயரத்தைத் தீர்த்துக் கொள்ள முடியாதபடி அவர்களிடையே பெரிய அகழி ஒன்று தோன்றி விட்டது.

அந்த அகழி புதிதாகத் தோன்றியது என்று கூறுவது சரியல்ல. அது ஏற்கனவே அங்கே இருந்ததுதான். ஆனால் அவள்—அந்தச் சாரு—அதற்குப் பாலமாக அமைந்து, இரு கரைகளிலும் இருந்த அவர்களிடையே இணைப்பை ஏற்படுத்தி வைத்திருந்தாள். இன்று அந்தப் பாலம் தகர்ந்து விட்டது. அவர்கள் மீண்டும் இக்கரையிலும் அக்கரையிலும் ஆகிவிட்டனர். இனி எக்காலத்திலும் மீண்டும் அங்கே ஒருபுதுப் பாலம் ஏற்பட்டாலும் ஏற்படலாம். ஆனால் அந்தப் பாலம் இரு கரைகளையும் வேண்டுமானால் இணைக்கக் கூடுமே யன்றி இவர்களை இணைக்க முடியாதது. இவர்களிடையே விழுந்து விட்ட இந்தப் பிளவு இனி இட்டு நிரப்ப முடியாதது.

ஆம்: அது இட்டு நிரப்ப முடியாத பிளவுதான். இருந்தாலும் அதன் மேலே



இக்கரைக்கும் அக்கரைக்குமாக மெல்லிய நூல் இழை யொன்று ஓடிக் கொண்டிருந்தது. அது ஒரு தாற்காலிக இணைப்புத் தான். இருந்தாலும், அதையும் மறு முனையிலிருந்து கத்தரித்து எடுத்து வர வேண்டியே ராமு அப்பொழுது அக்கரையாகிய அல்லிக்குளத்துக்கு வந்திருந்தான்.

ஸ்டேஷன் கட்டடத்தைவிட்டு வெளியே வந்த ராமு சுற்றுமுற்றும் நோக்கினான். ஸ்டேஷனிலிருந்து ஊருக்கு-அவன் செல்ல வேண்டிய வீட்டுக்கு-ஒரு மைல் தூரந்தான் இருக்கும். அப்பொழுது இரவு நேரமாக இருந்தபோதிலும், விரும்பியிருந்தால் அந்தத் தூரத்தை அவன் நடந்தே கடந்திருக்க முடியும். ஆனால் இப்பொழுது அவன் நடந்து செல்லும் நிலையில் இல்லை. எப்பொழுதுமே இந்தத் தூரத்தை நடந்து கடந்தும் அவனுக்குப் பழக்கமில்லை. முன்பெல்லாம் அவனுக்காக அவனுடைய வருகையை எதிர்நோக்கி வண்டி காத்திருக்கும்; ஆட்கள் காத்திருப்பார்கள்; ஏன்? சிலசமயம் அவர்-, சாருவின் அப்பாவே, வந்து காத்திருப்பார். ஆனால் இப்பொழுது?

இப்பொழுது அவன்தான் காத்திருக்க வேண்டியிருந்தது. அவன் சாவகாசமாக, தயங்கித் தயங்கி, ஸ்டேஷனை விட்டு வெளியே

வருவதற்குள் அங்கு நின்றவண்டிகள் எல்லாம் வாடகைக்குப் போய் விட்டிருந்தன; அவற்றுள் ஒன்று திரும்பி வரும் வரை அவன் காத்திருக்க வேண்டியதாயிற்று.

வண்டி வந்தது. ராமு அதில் ஏறி அமர்ந்து கொண்டு, ''அக்கிரகாரத்தில் தெற்குத் தெருவுக்கு விடுங்கள், வண்டிக்காரரே!'' என்றான்.

* * *

**வ**ண்டி நகர்ந்தது. மாடுகளை இருண்ட சாலை வழியில், ''தை-தை'' என்று விரட்டிக் கொண்டே வண்டிக்காரன் நாடோடிப் பாட்டு ஒன்றைப் பாட ஆரம்பித்தான்;

'' மூன்று முனையிலே
மூணு கொளம் வெட்டினேன்
ரெண்டு கொளம் பாழு:
ஒண்ணுலே தண்ணியே இல்லே...''

துயர நினைவுகளில் மூழ்கிச் சிலையாக அமர்ந்திருந்த ராமுவின் உள்ளத்தில் முள்ளாகத் தைத்தது இந்தப் பாட்டு. ''இரண்டு குளம் பாழ்; ஒன்றில் தண்ணீரே இல்லை!''

யதேச்சையாக வெளிவந்த அந்தப் பாட்டின் உள்ளர்த்தம் அவனுடைய குடும்ப நிலையை அப்படியே பிரதிபலித்து விட்டதே!

ஆமாம்; ராமுவின் குடும்பச் செடியும் அப்படித்தான், மூன்று குருத்துக்கள் விட்டது. அவற்றுள் இரண்டு முதலில் கருகின; இதோ மூன்றாவது கடைசிக் குருத்தும் வாடி வதங்கிப்போய் விட்டது.

* * *

**இ**ப்படித் தங்களது மூன்று குருத்துக்களும் பட்டுப் போக ராமுவின் தந்தை சாமண்ணாவோ, அல்லது அவன் தாய் தர்மவத்தினியோ ஏதேனும் பாவம் அல்லது பிழை செய்திருந்தனரா? முற்பிறப்பில் செய்திருந்தனரோ, என்னவோ? இப்பிறவியில் இல்லை; நிச்சயமாக இல்லை. அதற்கு அவர்களது ஊரான சின்னனூர் முழுவதுமே திரண்டு வந்து சாட்சி சொல்லும். ''நல்லவர்'', ''நல்லவள்'' என்ற சொற்களையன்றிப் பிறிதொன்று சொல்ல அவ்வூரில் எவருக்குமே வாய் வந்ததில்லை. ஆனால் நல்லவர்களைத் தானே தெய்வம் நானா விதமாகவும் நாடகம் ஆட வைத்துப் பார்க்கிறது.



சாமண்ணாவின் தலைக் குழந்தை ஜானகி. நல்ல இடமாகப் பார்த்து அருமையாக ஜாதகப் பொருத்தம் இருந்த மாப்பிள்ளைக்குத்தான் அவளை மணம்செய்து கொடுத்தார் அவர். ஆனால் கல்யாணமாகி எட்டு வருஷங்கள் சென்றும் ஜானகி வயிறு திறக்கவில்லை. அட, வயிறு திறக்காவிட்டால்கூடப் போகிறது. அதற்காகத் தெய்வம் அவளுடைய வாழ்க்கையையுமா பறிக்க வேண்டும்?

ஜானகியின் கணவனுக்கு மறுமணம் செய்து வைக்க முனைந்தனர் அவனுடைய பெற்றோர். ஜானகியை நினைந்து அவன் அதை மறுத்தான். நல்ல பிள்ளைதான். ஆயினும் பெற்றோரின் கட்டாயம் வலுத்து, அவர்கள் தனது இஷ்டத்துக்கு மாறாக வேறொரு பெண்ணை நிச்சயம் செய்து விட்டார்கள் என்று அறிந்ததும் அவன் செய்த செயல்! அந்தப் பெண்ணையே கணவன் மணந்து கொண்டிருந்தால் கூட ஜானகி மகிழ்ந்திருப்பாளே! ஆனால் அந்தப் பாவி வெறி கொண்டு தற்கொலை செய்து கொண்டு விட்டான். பதினைந்காவது வயதில் அன்றலர்ந்த மலராகப் புக்ககம் சென்ற ஜானகி, மணம் பரப்பி யாவரையும் மகிழ்விக்க வேண்டிய இருபத்து இரண்டாவது வயதில் மறையாத வாழ்க்கை இருளோடு பிறந்தகம் வந்து சேர்ந்தாள். இப்படித்தான் சாமண்ணா குடும்பத்தின் முதல் குருத்து கருகிப் போயிற்று.

ஜானகி வாழ்விழந்து வந்து நாலைந்து வருஷங்கள் ஆன பின்னர் அலமு வாழ்வுக்குத் தயாரானாள். அலமு கடைக்குட்டி. ராமு இடையே பிறந்தவன். ஆயினும் அவன் பெண்ணாதலால் வாழ்வுக்கு அண்ணாவை முந்திக் கொண்டு விட்டாள். அலமுவுக்கு வரன் தேடியபோது சாமண்ணாவுக்கு மூத்த மகளின் மூளியான வாழ்வில் பிறந்த வேறொரு ஏமாற்றம் எச்சரிக்கையாக இருந்தது. ஆமாம்; சாமண்ணா அப்படியொன்றும் பெரிய பணக்காரர் அல்ல. ஆகையால் மூத்த மகளுக்குத் தமது தகுதிக்கு ஏற்ற இடத்தையே தேர்ந்தெடுத்தார். ஜானகியின் புக்ககத்துக் குடும்பத்தில் ஆறு பிள்ளைகள். அவளுடைய கணவன்தான் மூத்தவன். அவர்களுக்கு இருந்த சொத்தை ஆறு பாகம் போடும்போது ஒவ்வொரு பிள்ளைக்கும் அரை வயிற்றுச் சோற்றுக்குக் கூட வராது என்பது சாமண்ணாவுக்குத் தெரியும். இருந்தாலும் ஜானகியின் கணவன் வீட்டுக்கு மூத்த பிள்ளை ஆதலால், அக்குடும்பத்தின் பரம்பரை உத்தியோகமான கிராமக் கர்ணம் வேலை அவனுக்குக் கிடைக்கும்; அதில் நிறைய வரும்படி வரும்; இருவரும் தட்டில்லாமல் வாழ முடியும் என்று எண்ணியே அக் குடும்பத்தில் சம்பந்தம் செய்து கொள்ளத் துணிந்தார். ஆனால் எதிர்பார்த்ததற்கு மாறாக மாப்பிள்ளைப் பையன் இப்படி அவளுடைய வாழ்வை அலங்கோலம் செய்து விட்டுப் போய் விட்டமையால், இப்பொழுது ஜானகியை அவளுடைய உயிருள்ள வரையில் அவரே வைத்துக் காப்பாற்றினால் தான் உண்டு என்ற நிலை ஏற்பட்டு விட்டது. ஆமாம்; அவளுடைய கணவனின் பங்குக்கு வரும் அரைக் காணி நிலத்தைக் கொண்டு அவள் எப்படி வாழ முடியும்?

இந்த அநுபவம் காரணமாக, அலமுவுக்கு வரன் தேடப் புறப்பட்டபோது அவர் பெரிய இடங்கள் மீதே கண் வைத்தார். பெரிய இடம் என்றால் நிறைய வரதட்சிணை கொடுக்க வேண்டியிருக்கும்; சீரும் செனத்தியும் ஏராளம் செய்ய வேண்டியிருக்கும் என்பதெல்லாம் அவருக்குத் தெரியாததல்ல. அதற்குத் தமக்குச் சக்தி கிடையாது என்பதும் அவர் அறிந்ததே. இருந்தாலும் அவளுக்குப் பணக்கார இடங்களிலேயே வரன் பார்க்க அவர் துணிந்ததற்கு இரண்டு காரணங்கள் இருந்தன. முதலாவது காரணம், ஜானகிமாதிரி கொடுமைக்கு ஆளாக நேர்ந்தால், அலமு வைதவ்யத்தோடு வறுமையையும் கட்டிக்கொண்டு வர மாட்டாள் என்பது. இரண்டாவது காரணம், கடனை உடனே வாங்கிக் கல்யாணத்தை நடத்திவிட்டால், நாளைக்கு மகளுடைய திருமணத்தின்மூலம் வரும் பணத்தைக் கொண்டு அக்கடனை எளிதில் அடைத்து விடலாம் என்ற தைரியம்.

இவ்விதமான அநுபவம் மற்றும் தைரியத்துடன் அவர் அலமுவைத் தமது சக்திக்கு மீறிய இடத்தில் கைப்பிடித்துக் கொடுத்தார். ஆனால் இங்கேயும் தெய்வம் அவரைச் சோதனை செய்துவிட்டது. அவர் எதிர்பாராத வேறொரு வகையில் அந்த இரண்டாவது குருத்தைக் கருக்கி விட்டது. ஆம்; ஜானகியாவது எட்டு ஆண்டுகள் புக்ககத்தில் வாழ்ந்தாள். அலமுவோ எட்டு மாதங்கள் கூட வாழவில்லை. அவளாவது அந்த வாழ்வுக்குப் பிறகு பிறந்த வீட்டுக்குத் திரும்பினாள். இவள் திரும்பவே இல்லை. ஒரு வாரக் காய்ச்சலில், புக்ககத்திலிருந்த வாறே எல்லோரிடமும் விடைபெற்றுச் சென்று விட்டாள்.

ஆகையால் அலமுவின் மறைவு சாமண்ணா குடும்பத்துக்கு இடிமேல் இடியாக வந்ததோடு நில்லாமல் பெரிய தொரு பொருளாதாரச் சிக்கலையும் கொண்டு வந்தது. மகளை முழுதாகப் பறி கொடுத்ததோடு, கடன் வாங்கி அளித்திருந்த பொருளையும் பறிகொடுக்க சாமண்ணா மனமுடைந்து போய் விட்டார். அவருடைய துக்கத்தையும், மிஞ்சிக் கொண்டு கடன் சுமையின் பாரம் வருத்தியது. துக்கத்திலிருந்துதான் இனி விடுபட முடியாது; கடன் சுமையிலிருந்தாவது விடுபடுவோம் என எண்ணிய அவர் அலமு இறந்த பிறகு, மகனின் கலியாண ஏற்பாடுகளில்கவனம்செலுத்தலானார்.



ராமுவின் ஜாதகம் கல்யாணச் சந்தையில் அதிக நாள் நடமாடிக் கொண்டிருக்கவில்லை. அவனுடைய அழகுக்கும் குணத்துக்குமே ஆயிரம்பேர்கள் அவனை மாப்பிள்ளையாக்கிக் கொள்ள அடிபிடி போட்டுக்கொண்டு முன் வந்தனர். இருந்தாலும் எந்தக் காரியத்தையும் பல கோணங்களில் ஆராய்ந்து செயலாற்றும் சாமண்ணா, அல்லிக்குளம் பண்ணையாரின் சம்பந்தத்துக்கே பிடி கொடுத்தார். ஏனென்றால் அது பணக்கார இடம் என்பது மட்டுமல்ல; பண்ணையார் கல்யாணத்துக்கு வாரி வழங்கத் தயாராயிருந்தது மாத்திரமல்ல; பண்ணையாரின் ஒரே சந்ததி சாருமதி; ஆகவே அவருக்குப் பின் அந்தச் சொத்து முழுவதுமே சாமண்ணாவின் குடும்பத்துக்குத் தான் கிடைக்கும்.

அதற்காகப் பணத்துக்கு ஆசைப்பட்டு, அழகோ குணமோ இல்லாத பெண்ணை மகனுக்கு நிச்சயித்துவிடவில்லை அவர். சாரு தங்கப் பூச்சுப் பூசிய தந்தப் பதுமை. கண்டவர் கண்களைக் களிகொள்ளச் செய்யும் கட்டழகி. பத்தாவது வரை படித்தவள்; பண்பாடு உடையவள். குணக்குன்று. இதற்குக் கூடுதலாக என்ன வேண்டும் ராமுவுக்குத்தான், அல்லது அவனுடைய பெற்றோருக்குத்தான்?

பெண்ணைப் பார்த்ததுமே, அவள் தங்கள் குடும்பத்தில் புரையோடிவிட்டிருந்த புண்ணை ஆற்றுவாள் என்பதைப் புரிந்து கொண்டான் ராமு. ஆம்; அவர்கள் புண்ணை அவள் ஆற்றத்தான் ஆற்றினாள். படிப்பின் படாடோபமோ, பணத்தின் பகட்டோ இன்றிப் பாங்காக நடந்து, பாலைவனமாகி விட்டிருந்த அவ்வீட்டைச் சோலைவனமாக்கினாள். அப்படியெல்லாம் செய்தாயே, அடி சாரு! ஆனால் இறுதியில் நீ ஏற்றி வைத்த இன்ப விளக்கை நீயே குப்பென்று ஊதி அணைத்து விட்டுச் சென்று விட்டாயே!

* * *

சரியாக மூன்று வருஷங்களுக்கு முன்பு இதே மாசத்தில் ஒரு மங்களகரமான நாளில் சாரு புக்ககத்தில் வாழ வந்தாள். அவளைக் கொண்டுவிடப் பண்ணையாரும் அவருடைய மனைவி சங்கரியும் வந்திருந்தனர்.

மகளைத் தகுதியான இடத்தில் ஒப்படைத்துவிட்டோம் என்ற பூரிப்பு ஒருபுறம் இருந்தாலும், அவளைப்பிரிய வேண்டிய வேளை வந்ததும் பண்ணையாரின் கண்களைக் கண்ணீர் நிறைத்தது. அவர் ராமுவிடம், "மாப்பிள்ளை எங்கள் குடும்பத்தின் ஒரே குருத்து அவள். ஆகையால் அவளை மலருக்கொப்ப வளர்த்துவிட்டோம். தென்றலைவிடக் கடுமையான காற்றையோ, தண்மைக்கு உயர்ந்த வெப்பத்தையோ தாங்க இயலாத பூ நெஞ்சம் அவளுக்கு. நீங்கள் அவளை......' என்று கூறியவர் மேலே பேச வராமல் தடுமாறினார். ராமு அவரைத் தேற்றி, "கவலைப் படாதீர்கள்! சாருவை நாங்கள் என்றும் வாடாமலராக வைத்திருப்போம். இரண்டு குருத்துக்களைக் கருக விட்ட எங்கள் குடும்பத்துக்குத் தான்மலரின் மென்மை மற்றவர்களைவிட நன்றாகத் தெரியும்" என்றான்.

ஆனால் வாக்களித்தபடி அவளை வாடா மலராக வைத்திருக்க அவனால் முடிந்ததா?

அதற்கு அவளையோ, அவனுடைய பெற்றோரையோ குறை கூற முடியாது. அவர்கள் அவளை மலரினும் மென்மையாகப் பேணித்தான் வைத்துக் கொண்டனர். ஆயினும், மலர் என்பது காலையில் மலர்ந்து இரவில் வாடிவிடும் என்னும் இயற்கை நியதியை மெய்யாக்கி விட்டுப் போய் விட்டாள் சாரு.

* * *

**வா**ழ்க்கை என்னும் நிலைக்களத்திலே ஒரு கண்ணும்பூச்சி ஆடிக்காட்ட அவள் வந்தாள். ஆகையால் வந்த புதிதில் சுமார் இரண்டு வருஷ காலம் அவர்களுடைய கண்ணைக் கட்டிக் களிப்பூட்டினள்.



எப்படிப்பட்ட இரண்டு வருஷங்கள் அவை? அதை, இன்றையத் துன்ப நிலையில் நினைத்தாலும் ராமுவின் உள்ளத்தில் இன்பம் சுரந்தது. இருவரும் இன்பப் புனலிலே நீந்தித் திளைத்த இரண்டு வருஷங்கள்; உள்ளமும் உடலும் ஒன்றி இணைபிரியாது வாழ்ந்த அந்த இரண்டு வருஷங்களை அவனால் மறக்க முடியுமா? இன்று மட்டுமென்ன? என்றுமே மறக்க முடியுமா?

எப்போதாவது இரண்டு-மூன்று மாதங்களுக்கு ஒரு தடவை பண்ணையார் சாருவைப் பிறந்தகம் கூட்டிச் சென்றால் இருவருமே தனியாய்த் தவித்து விடுவார்கள். ஒன்று, ராமு அவளை நினைத்துக்கொண்டு அங்கே ஓடிப் போய் விடுவான்; அல்லது அவள் அவனை நினைத்துக்கொண்டு இங்கேஓடிவந்துவிடுவாள்.

"என்னடி இது அதிசயமாயிருக்கு. பிறந்த வீட்டுக்கு வந்தா ஒரு பத்து நாள் நிலைச்சு இருக்க மாட்டாளா?" என்பாள் அங்கே சாருவின் தாய் சங்கரி.

இங்கே ராமுவின் தாய் தர்மவர்த்தினி, "அழகுதான் போடா, அவாளும் பெற்றவர்கள் இல்லையா? கொஞ்ச நாட்களாவது பெண்ணை வீட்டிலே வச்சண்டிருக்கணுமின்னு ஆசையா இருக்காதோ? என்னவோ, அவர் வந்து அழைச்சண்டு போறதும், நீ பின்னாலேயே போய் அழைச்சண்டு வந்துடறதும் நன்னாத்தான் இருக்குடா!" என்று மோவாயைத் தோளில் இடித்துக் கொள்ளுவாள்.

ஆனால் யார் என்ன சொன்னால் என்ன? ஒரு நாள் பிரிவுகூட அவர்களுக்குப் பெரிய வேதனையாகத்தான் இருந்தது. இப்படியெல்லாம் கணவனை இணைபிரியாது இருந்தாயே சாரு; உனக்கு எப்படித்தான் அவனைக் கணத்தில் உதறிவிட்டு ஒரேயடியாக மறைந்துவிட உள்ளம் வந்ததோ?

* * *

**ஒ**ரு சமயம் சாரு பிறந்தகத்துக்கு வந்து பதினைந்து நாட்களாகிவிட்டன. ராமுவுக்கு ஊரிலே அறுவடை சமயம்; போய் அழைத்து வர முடியவில்லை. வழக்கம்போல் சாரு கிளம்பிவிட்டாள்.

அப்பொழுது சங்கரி அம்மாள் அளவுகடந்த வருத்தத்துடன், "இது நீ பிறந்த மண்ணு. இங்கேயும் கொஞ்சம் ஒட்டுதல் இருக்கட்டும். ஒரேயடியாத்தான் பறக்கிறியே" என்றாள்.

கொல்லையில் கொடியில் உலர்த்தியிருந்த துணிகளை எடுத்துக் கொண்டிருந்த சாரு, "இங்கே வா அம்மா" என்று தாயை அருகில் அழைத்தாள். பிறகு அவளுடைய கையைப் பிடித்து, பக்கத்தில் அன்றுதான் பெயர்த்து நடப்பட்டிருந்த வாழைக் கன்றண்டை அழைத்துச் சென்றாள். "இதோ பார், அம்மா! இந்த வாழைக் கன்றை இன்று தாய் வாழையிடமிருந்து பெயர்த்து நடச் சொன்னாயே; எதற்காக? அது செழித்து வளர வேண்டும் என்பதற்காகத்தானே? அப்படிப் பெயர்த்து நட்டுவிட்ட பிறகு அதற்கு அந்த இடந்தானே நிலையானது? அதை அடிக்கடி பிடுங்கி, தாய் வாழையிடம் பத்து நாளும், இந்த இடத்தில் பத்து நாளுமாக நட்டுக் கொண்டே இருந்தால் என்ன ஆகும் தெரியுமா? அது பட்டுப் போகும்" என்று கூறிச் சிரித்தாள்.

அந்தச் 'சிறிது நீண்ட காலப் பிரிவு' நிரந்தரப் பிரிவின் முன்னோட்டமாகும் என்பதை அவர்களுள் யாரும் எதிர்பார்த்திருக்கவில்லை. மாறாக, அப்பிரிவுக்குக் காரணமான சம்பவம் அவ்விரு குடும்பத்தினருக்கும் எல்லையற்ற மகிழ்ச்சியையே தந்தது. அந்தப் பூரிப்பில் சாரு ஒரு சுற்றுப் பருத்துக் கூட விட்டாள். அத்துடன் தாய்மைப் பேற்றை அடையப் போகும் தனி மகிழ்ச்சி வேறு அவளுக்கு.

வளைகாப்பு, சீமந்தம் எல்லாம் ஆனபிறகு, நிறை சூலியாக, வயிறு நிறையப் பிள்ளையும், மடி நிறைய மஞ்சளும், கொண்டை நிறைய வேப்பிலையுமாகக் கண்களிலே கணவனைப் பிரிய வேண்டியிருக்கிறதே என்ற கலக்கம் இருந்தாலும், உள்ளத்திலே தாயாகப் போகும் பெருமை மலர, புக்ககத்திலிருந்து விடைபெற்றுச் சென்ற அவள், அதுதான் தனது இறுதிவிடை பெறுதல் என்பதை எங்ஙனம் உணர்ந்திருக்கப் போகிறாள்?

"**வெ**ள்ளிக்கிழமை காலையில் சாரு ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள்; தாயும் சேயும் சுகம்" என்று அல்லிக்குளத்திலிருந்து தந்தி வந்ததும், ராமு குளித்து, பட்டு உடுத்தி, ஊர்க்காரருக்கு விதை தானம் செய்தான்; சர்க்கரையும் பழமும் வழங்கினான்.

பத்தாம் நாள் புண்யாகவாசனத்துக்குக் குடும்பமே சின்னனூரிலிருந்து கிளம்பிச் சென்றது. ஆனால் ராமு அங்கே புண்யாகவாசனமா செய்தான்? பண்ணையார் வீட்டில் புகுந்த

போது அவர்களை அழுகையும் புலம்பலும் தாம் வரவேற்றன. திடீரென்று சாருவுக்கு மூன்றாம் நாள் இரவு ஜுரம்! பேத்தல்! புலம்பல்! ஜன்னி! இறுதியில் அவள் போயே போய் விட்டாள். தந்தி கொடுத்து உரியவர்களை வரவழைத்து உடலை ஒப்படைக்க வேண்டிய சிரமங்கூட இருக்கவில்லை பண்ணையாருக்கு. அவர்களே புரோகிதர் சகிதம் அவள் உயிர் பிரிந்த மறுகணம் வந்து விட்டனர்.

ஆயிற்று; ராமுவின் வாழ்க்கை நாடகத்திலே சாருவின் நடிப்பு முடிந்து விட்டது.

அவர்கள் எதற்கோ வந்தார்கள்; எதையோ நிறைவேற்றினார்கள். இனிப் புறப்பட வேண்டியதுதான். அச்சமயத்தில் அந்தப் பிரச்னை எழுந்தது—குழந்தை?

''அவன் நம் பொருள். சாஸ்திரிகளை அனுப்பி வாங்கிவரச் சொல்லுங்கள்'' என்றாள் தர்மவர்த்தனி.

புரோகிதர் பண்ணையாரிடம் சென்றார்.

''அவர்கள் பொருள்தான்; மறுக்கவில்லை. ஆனால் அவளை முழுதாகப் பலி கொடுத்த உடனே இவனையும் எங்களிடமிருந்து பறித்துச் செல்ல வேண்டாமென்று அவர்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டதாகக் கூறுங்கள்'' என்று பண்ணையார் சொல்லி அனுப்பினார்.

''ஆமாம், தர்மு! அவர்களுடைய உடைந்த மனசை இன்னும் சில்லுகளாக்க வேண்டாம். இரண்டொரு மாசம் அவன் இங்கேயே இருக்கட்டும்; பிறகு ஊரிலிருந்து வேறு யாரை யாவது அனுப்பி வாங்கி வரச் செய்யலாம்'' என்று மனைவியைச் சமாதானப்படுத்தினார் சாமண்ணா.

மூவரும் உற்சாகமாகச் சென்றனர்; நடைப்பிணமாக ஊர் திரும்பினார். ராமுவின் சோகத்தைச் சொற்களில் உருவாக்கிக் காட்ட முடியுமா? சாரு அவனுடைய வாழ்விலே தென்றலாக வந்தாள்; இன்பக் காற்றை வீசினாள்; இறுதியில் புயலை ஏவி விட்டுவிட்டு மறைந்து விட்டாள். மின்னலாக வந்தாள்; கண்ணைக் கூச வைக்கும் ஒளியை நிரப்பினாள்; பிறகு அவன் கண்களைப் பறித்துக் கொண்டு பறந்தோடி விட்டாள். நிலவாக வந்தாள்; அவனுக்கு நித்தியானந்தத்தைத் தந்தாள்; முடிவில் கனவாக மறைந்து அவனைக் கடுந் துயரில் ஆழ்த்தி விட்டு அந்தர்த்தியானமாகி விட்டாள்.

அவள் வந்தது; வாழ்ந்தது; இன்பம் தந்தது; இறுதியில் மறைந்தது; இப்படி ஒவ்வொன்றாக நினைத்து அவன் உருகினான்; உருகிக் கொண்டே இருந்தான். இரவில்லை, பகலில்லை; சதா அவளைப் பற்றிய புலம்பல் தான்—''சாரு! சாரு!''

மேலும் ஒரு எட்டு மாத காலம் சென்றது. 'காலம் துக்கத்தை மாற்றும் மருந்து' என்று வேதாந்திகள் கூறியிருப்பதை அந்த வேதாந்திகளுக்கே பொருந்துவதாக்கி விட்டுச் சாதாரண மனிதனை ராமு அன்று போலவே இன்றும் சோகப் பித்தாக இருந்து வந்தான். வர வர வந்து - சோறு தண்ணீர், ஓய்வு - உறக்கம்கூட அவனுக்குக் கசந்தது. வட்டியை விட்டுக்கொடுக்கப் போய் முதலுக்கே மோசம் வந்து விடுமோ என்ற அச்சம் ஏற்பட்டது. சாமண்ணா தம்பதிகளுக்கு. தவிர, குழந்தைக்கும் இப்பொழுது ஒருவயசு நெருங்கிக் கொண்டிருந்ததால், இனி அதை வெறும் பாலிலே வளர்க்கலாம் என்ற தைரியமும் ஏற்பட்டது.

அதே சமயம் பண்ணையார் தம்பதிகளின் மனத்தை முறித்துக் குழந்தையைப் பலவந்தமாகப் பிரித்து வரவும் அவர்களுக்கு மனம் வரவில்லை. இறுதியில் அவர்கள் ஒரு முடிவுக்கு வந்தனர். பெற்றவனையே அனுப்புவோம்; அவனுடைய சோக நிலையைக் கண்டால் குழந்தையைத் தங்களிடமே வைத்துக் கொள்ள வேண்டும் என்று அவர்களுக்குத் தோன்றாது. தவிர, உரிமையுள்ளவன் போய்க் கேட்கும் போது அவர்கள் மறுத்துக் கூறவும் முடியாதல்லவா?

தங்கள் முடிவை ராமுவிடம் தெரிவித்த போது அவன், ''என்ன?'' என்று அலறினான்.

''நீ போனால்தான் அவர்கள் மறுக்காது குழந்தையை உன்னோடு அனுப்புவார்கள்.''

''ஆனால் நான் அங்கே-அந்த வீட்டுக்குள் எப்படி நுழைவேன், அம்மா?'' என்று கதறினான் அவன்.

''மனசைத் திடப்படுத்திக்கொண்டு போய் வா, அப்பா. உனக்காக இல்லாவிட்டாலும் எங்களுக்காகவாவது போய் வா. குழந்தை வந்தாலன்றி உன் துக்கமும் மாறாது; எங்கள் கவலையும் தீராது.''

அது வாஸ்தவம் என்பதை அவனுடைய அந்தராத்மாவே ஒப்புக் கொண்டது. ஆகவே மனத்தைக் கல்லாக்கிக் கொண்டு அவன் புறப்பட்டு விட்டான்.

வண்டி கோடிக்கு வந்ததும், அதுவரை சங்கீதத்தைக் கொலை செய்து கொண்டிருந்த வண்டிக்காரன் பாட்டை நிறுத்திவிட்டு, ''தெற்குத் தெருவிலே யாரு வீட்டுக்குப் போகணும், ஐயா?'' என்று கேட்டான்.

ராமுவின் நினைவு அலைகள் கலைந்தன. ''தெற்குத் தெரு வந்து விட்டதா?'' என்று திடுக்கிட்டவன்போல் கேட்டான் அவன்.

''ஆமாங்க.''

''அப்படியானால் தெரு ஆரம்பத்திலே ஒரு சந்து கிழக்கே போகுமே; அதிலே ஓட்டு...''

''அந்தச் சந்திலேங்களா?'' வண்டிக்காரன் வியப்புடன் இடை மறித்தான்: ''அது கொல்லைப்புறத்தில்போயில்லமுட்டிக்கிடுது!''

''ஆமாம்; கொல்லைப் பக்கமாகவே ஓட்டு; வீடு வந்ததும் நிறுத்தச் சொல்லுகிறேன்.''

கூண்டில் கட்டியிருந்த ஹரிக்கேன் விளக்கு வெளிச்சத்தில் வண்டிக்காரன் ராமுவின் முகத்தை ஊடுருவி நோக்கினான். அவனுடைய இரு கண்களிலும் கண்ணீர்த் துளிகள் மின்னியதைக் கண்டபிறகு வண்டிக்காரன் பேசவில்லை. பெருமூச்சு விட்டுக்கொண்டே வண்டியைச் சந்தில் திருப்பினான்.

அப்பொழுது இரவு ஒன்பதரை மணி சமயந்தான் இருக்கும். இருந்தாலும் அல்லிக்குளம் கிராமத்தில் அஸ்தமித்ததுமே ஊர் அடங்கிவிடும் என்பது ராமுவுக்குத் தெரியும். விரும்பியிருந்தால அவன் வாசல் வழியாகவே போயிருக்கலாம். ஆனால் இனி அவன் அவ்வீட்டுக்குள்ளே வாசல் வழியாக நுழைய முடியாது; நுழையக் கூடாது.

(அடுத்த இதழில் முடியும்)

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10
for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam



# பாண்ட்ஸ்

## ட்ரீம்ப்ளவர் டால்க்

### உபயோகித்தால்

### நாள்முழுவதும் புத்துணர்ச்சியுடனும், நறுமணத்துடனும் இருக்கலாம்




விருந்து கலைமூட்டுவதும், நறுமணம் வாய்ந்ததுமான பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடர் உபயோகித்தால், நீங்கள் கொடிய வெப்பத்திலும், புழுக்கமான நாள்களிலும்கூட இனிய உணர்ச்சியுடன் இருக்கலாம். மென்மையான இந்த டால்கம் பவுடரை உடம்பில் தூவிக்கொண்டால், எரிச்சலூட்டும் வியர்வைத் தொல்லை ஒழியும். நாள் முழுவதும் புது மலரைப் போல் இனிய புதுமையுடன் இருக்க பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடர் உபயோகியுங்கள்.

செஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பரேடட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன்
யு.எஸ். அமெரிக்காவில் இணைக்கப்பெற்றது)

இலவச புத்தகம் - "LOVELIER WITH POND'S" என்ற அழகு இலவச புத்தகத்தை வரவழையுங்கள். இதில் அழகு பராமரிப்பு பற்றி உபயோகமான குறிப்புகள் அடங்கியுள்ளன.

பி.ஓ. பாக்ஸ் 1612, டிபார்ட்மெண்ட் GE, 25 T. பம்பாய்-1 என்ற விலாசத்திற்கு தபால் செலவுக்காக 25 பைசா ஸ்டாம்புடன் எழுதவும்.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon